கடவுள்துணை.

# ரிஜிஸ்தர் அறிவிப்பு.

இதனால் சகலமான அச்சுக்கூடத் ததிபர்களுக்கும், புஸ்தக வியாபாரிகளுக்கும், இன்னும் மற்றுமுள்ள மகான்களுக்குந் தெரிவிப்பது யாதெனில்:—

இந்த யோக ஞான சாஸ்திரத் திரட்டு என்னும் இப் புஸ்தகத்தில் அச்சிட்டிருக்கிற சாஸ்திரங்களின் முடிவிற் கண்டிருக்கிற ஒவ்வொரு மகான்களிடத்திலும் ஓலை ஏட்டுப் பிரதிகளைச் சகல சுதந்தரத்துடன் பெற்று, என் மூதாதைகள் கையாண்டுவந்த ஓலையேட்டுச் சாஸ்திரங்களையுஞ் சேர்த்து, இந்நூலுக்குப் போதுமான திரவியத்தைச் செலவு செய்து என்னால் (கெவர்ண்மெண்ட் சட்டப்படி) ரிஜிஸ்தர்செய்திருப்பதால் இச் சாஸ்திரங்களைப் பிறர் எவ்விதத்திலும் அச்சிடக்கூடாதென்பதை இதன்மூலமாய்த் தெரிவித்துக்கொண்டேன்.

இப்படிக்கு,

ஸ்ரீ இ. ராம. குருசாமிக்கோன்,

புஸ்தகஷாப் புதுமண்டபம் மதுரை.

சிவமயம்.

கடவுள் துணை.

# முகவுரை.

உலகின்கண் சர்வேஸ்வரனால் உற்பத்தியாக்கப்பட்ட பலவுயிர்களிலும், சுவேதஜம்-அண்டஜம்-உற்பிஜம்-சராயுஜமாகிய நால்வகை யோனி, எழுவகைத் தோற்றம், எண்பத்துநான்கு லட்சம் ஜீவராசிகளிற் சிரேஷ்டமானது இம்மானிடப்பிறவியேயாம்; இதில் ஜெனிக்கும் சிசுக்கள்-பாலர்-குமாரர்-எவ்வனர்-விருத்தர்களாகிய ஆண் பெண்ணினங்களுக்குரிய சகல சுக துக்கங்களையும், தர்மார்த்த காம மோக்ஷ மர்மங்களையும், இகபர சாதனங்கட்குரிய இயல்பினையும், எண்ணிலாப் பிறவித் துன்பங்களையும், இஷ்ட காமியார்த்த இன்ப ரசங்களையும் எடுத்துக் கூறிய நூல்கள் பலவாயினும், அவற்றினை இனிது விளங்கக் கூறுவன: அகண்ட பரிபூரண சச்சிதானந்த வடிவாயுள்ள சின்மய சொரூப நிலையைப் பெற்ற தேவ, ரிஷி, முனி, சித்தர்கள் திருவாய் மலர்ந்தருளிய யோக ஞான சாஸ்திரங்களேயாம்.

இவ்வித சாஸ்திரங்களை வெளிவிடாது நமது முன்னோர்கள் தொன்றுதொட்டு ஓலை ஏடுகளி லெழுதி, வீடுகளில் காலை மாலை பூசையில் வைத்துப் பூசித்து வாசித்து வருவது யாவருக்குந் தெரிந்த விஷயமே. அப்படிப்பட்ட அரிய சாஸ்திரங்கள் நமது நண்பர் இ. ராம. குருசாமிக்கோனார் மூதாதைகள் கையாண்டுவந்த ஓலை ஏட்டுப் பிரதிகள் பலவாம். அவற்றுட் சிலவற்றையும், கனம் ந. ராம. கணபதியாபிள்ளை யவர்களிடத்திலும், என்னிடத்திலும் கைவசமா யிருந்த ஓலைச் சுவடிகளையும் ஒருங்கே திரட்டிப் பார்க்கையில், பதினெண் சித்தர்கள் பாடல்களிற் சில இருந்தும் சில இல்லாதிருக்கவே அதையுஞ் சேர்த்து அச்சிடக் கருதி "சொல்லும் பொருளுஞ் சுவையுங் கனியும், எல்லும் ஒளியும் இருப்பது போல, என்பாற் பிரியா தெழில் நட்பதனை, அன்பாற் கொண்ட அருமை நண்பர்" இ. ராம. குருசாமிக்கோனாரிடம் வெளியிட, அவரு மதற்கிணங்கி பல தேயங்களிற் சென்று சில ஏடுகளைச் சேகரித்துக்கொண்டு வந்தனர். அச்சமயம் தெய்வகடாக்ஷத்தால் திருப்பரங்கிரியின்கண் வசிக்கும் ஸ்ரீ கைலாச போகமகாரிஷீஸ்வர சுவாமியவர்கள் ஆதீன ஆச்சிரமம் மகா கைலாச பரம்பரை 225-வது பட்டம் ஸ்ரீ கைலாச தெண்டாயுதபாணி ரிஷீஸ்வர சுவாமியவர்கள் தமது ஆச்சிரமத்தில் கையாண்டுவந்த பலசாஸ்

திரங்களடங்கிய ஏட்டுச் சுவடிகளை வரப்பிரசாதத்துடன் கொடுத்து, அச்சிடும்படி உதவி புரிந்தனர்கள்.

எல்லாச் சுவடிகளையும் காயிதத்தில் எடுத்தெழுதிப் பார்க்கையில் அதிற் சில சாஸ்திரங்களில் ஒவ்வோரிடத்தில் ஒவ்வொரு செய்யுட்களில் இரண்டு வரியும் மூன்றுவரியுமாக இருந்ததுடன், சிலபாக்களில் எதுகை மோனைக ளேதுமில்லா திருந்தன. அவைகளைப் பூர்த்தி செய்யவேண்டி, இப்புஸ்தகத்தில் அச்சிட்டிருக்கும் ஒவ்வொரு சாஸ்திரங்களின் முடிவிற் கண்டிருக்கிற நமது ஆத்மநண்பர்கள் ஒவ்வொருவரிடத்திலும் ஒரு பிரதிக்கு நாலு ஐலேயட்டுப் பிரதிகளைப் பெற்று அவற்றுள் வரைந்துள்ள விதப்பிரகாரம், அனேக மகான்களின் உதவியைக்கொண்டு என் சிற்றறிவுக் கெட்டியவாறு சீர்திருத்தஞ் செய்துமன்றி, இதற்கு [illegible] ரிஷி முனிசித்தர்கள் திருவாய்மலர்ந்தருளிய "யோக ஞான சாஸ்திரத் திரட்டு" எனத் திருநாமஞ் சூட்டிப் பனிரண்டு பாகங்களாக அச்சிட்டிருக்கின்றனன்.

இச்சாஸ்திரங்களை யெல்லாந் திரட்டி ஒன்றுசேர்த்து அச்சிடுவதற்காகப் பொருட் செலவும், தேகப்பிரயாசையும் எடுத்துக்கொண்டு சதா துணைக்கருவியாயிருந்த மதுரை புதுமண்டபம் புஸ்தக வியாபாரியும், ஸ்ரீ ராமச்சந்திர விலாசம் பிரஸ் சொந்தக்காரருமாகிய நமது நேயர் இ. ராம. குருசாமிக் கோனாரவர்களது நன்றியும், தாலபத்திர சாஸ்திரச் சுவடிகளுதவிய ஏனைய நண்பர்களது நன்றியும் யான் என்றும் மறக்கத்தக்கனவன்று.

இவ்விதம் பனிரண்டு பாகமாய் அச்சிட்டிருக்கிற இவ்வரிய பெரிய சாஸ்திரங்கள் ஒரு புஸ்தகத்திலிருப்பது மற்றொரு புஸ்தகத்திலில்லாதிருப்பதால், பனிரண்டு வாலியத்தையும் பார்ப்ப தவசியம். ஆகையால் ஒவ்வொருவரும் இதனை வாங்கிக் கையாண்டு வருவீர்களென நம்புகின்றனன்.

இங்ஙனம்,

☞ த. குப்புசாமி நாயுடு,

மதுரை

உ கணபதி துணை.

# ஆறாவது புஸ்தகம்.

தேவ [illegible] திருவாய் மலர்ந்தருளிய.

## யோக [illegible] சாஸ்திரத் திரட்டின்

### அட்டவணை.



உ

குருவே துணை.



ஐம்பத்தெட்டாவது:

இராமதேவர் திருவாய்மலர்ந்தருளிய

# அஷ்டாங்க யோகம் ருய.

ஆதியிலே வாலைமனோ மணிதான்கூவி
அழைத்தென்னை ஆதியந்த மறியச்சொன்னாள்
சோதியிலே கருவுருவை யுன்னிப்பாரு
சொல்லவொண்ணா வதிசயங்கள் தானேதோற்றும்
நீதியிலே சதானந்தி யென்னைப்பெற்றாள்
நீள்திசையி லுள்ளசித்தர் மெச்சிக்கொள்ள
வாதியென வந்தவர்க்குத் திறவுகோல்போல்
வசனித்தேன் பத்துமொரு எட்டும்ரெண்டே. (1)

நன்றாம்ரெண் டாகியொன்றாங் கருவைத்தொட்டு
நானிருந்தேன் ஆதியந்தம் நிலைக்கவேதான
ஒன்றான ரூபமடா ஆர்க்குந்தோணா
உண்மையடா மவுனியவள் வாலைப்பெண்தான்
நின்றாளே நகாரமேல் மகாரங்கீழே
நிர்விகற்ப சமாதியென நின்றவாமி
சென்றாளே ஆதியந்த மறியவென்று
செகமயக்கத் திகைப்பூடுத் திலதம்பூண்டாள். (2)

பூண்டவள்தான் வீதியிலே நடனங்கொண்டாள்
புதுமையுள்ள சித்தாதபோ தனர்கள்கூடி
ஆண்டவளோ அல்லவென்றாள் வாமப்பெண்ணே
அருந்தவசை நிறுத்தவந்த அருமைப்பெண்ணே
தாண்டவத்திற் சிவனைவென்ற தாயேயென்று
தவமுனியுஞ் சிவமுனியுந் தானேகூடி
வேண்டுவதுக் கிவளுடைய நிதானங்கண்டால்
வேண்டலா மென்றுசொல்லி மயங்கினாரே. (3)

மயக்கமுற்று நிற்கையிலே நான்தான்மேவி
வந்தனடா அவளுடைய பாதங்காணத்
தியக்கமுற்ற சித்தர்களைப் பணிந்துபோற்றித்
திர்க்கமுடன் நின்றனடா அவளைநோக்கி
ஜெயக்கமலக் கம்பநுனி மேலேதாவிச்
சென்றனங்கே சதாசிவத்தின் நிஷ்டைகூட்டி
நயக்கமல முகம்நோக்கிப் பார்க்கும்போது
நாதாந்த மனோமணியைக் கண்டேன்பாரே. (4)

கண்டவுடன் தொண்டுசெய்து நின்றேன்கோடி
காலமடா வெகுகோடி காலமட்டும்
நின்றனடா அப்பொழுது ஆத்தாளென்னை
நிமிஷத்தில் வரவழைத்து ராமாவென்று
பண்டுடைய தேவாவா வென்றுகூவிப்
பகர்ந்திட்டாள் பாலமுதம் பசியைத்தீர்த்துக்
கொண்டவள்தா னுபதேசம் நந்தியென்றாள்
கூறிட்ட ஆதியந்தங் குணம்பெற்றேனே. (5)

குணம்பெற்ற அதிசயங்கள் பாடிப்பாடிக்
குவித்தாலும் தொலையாது கூர்ந்துபார்க்கில்
மணம்பெற்ற கருவெல்லாங் குவித்துக்கொண்டு
வாரினே னஞ்சாறு கருத்தானப்பா
சினம்பெற்ற திக்கருவை யெல்லாந்தள்ளி
திரமான நற்கருவை மாலையாக்கித்
தனம்பெற்ற பெட்டகம்போற் கொண்டேனப்பா
தாயான மனோமணியின் தவத்தினாலே. (6)

தவமான அஷ்டகர்ம மெட்டெட்டுக்கும்
தாயான மூலியொன்று சொல்லப்போகார்
உவமான வாலையடா ஒளிக்கவில்லை
உத்தமனே பேய்மிரட்டி வடவேர்வாங்கி
நவமான ஐங்காய மதின்மேற்பூசி
நாடுமஷ்ட கர்மம்பச் சிலையைநாட்டு
தவகாச மாகவா சனத்தின்மேவி
தயங்காதே ரேசகபூ ரகமும்பண்ணே. (7)

பண்ணவே சத்துருவும் வினையுங்கிட்டார்
பார்தனிலே துஷ்டருட பகையுங்கிட்டார்
கண்ணவே அன்பினுட வேலுங்கிட்டார்
கருவான பிரங்கி யிடியுங்கிட்டார்
வண்ணமுள்ள மிருகமுட னஷ்டநாகம்
வாதாடும் பேய்கணங்கள் மற்றுமுள்ள
எண்ணவொண்ணுச் சத்துருக்க ளொன்றுமில்லை
யேகாந்த மனோமணியுன் னியல்புதானே. (8)

தானவனுய் நின்றதொரு மூலிதன்னைத்
தம்பனத்தாற் கும்பித்துக் கீழ்வேர்வாங்கிக்
கோனருளால் நாதவிந்து தெளிந்ததண்ணீர்
கூர்மையுள்ள முலைப்பாலுந் தேனுங்கூட்டிச்
சாணகல மானதொரு சாணைதன்னில்
தம்பனத்தால் தானுரைத்துத் திலதமிட்டால்
தோணுத தொன்றுமில்லை யெல்லாந்தோன்றும்
சுந்தரம்யோ வின்னமொரு கருவைக்கேளே. (9)

கருவான திகைப்பூடு தன்னைவாங்கிக்
கருக்கிழுற் கருவும்பிற் கருவும்கூட்டிப்
பருவமாய்க் கோசமுடன் பீசங்கூட்டிப்
பரமகுரு மையெனவே திலதம்போட்டால்
திருவான லெட்சுமிப்பெண் வாசமாகிச்
செகமெல்லா மவள்வசன மேலதாகிக்
குருவான பெரியோரைத் தெரிசித்தோர்க்குக்
குருமையே யிதுவுமடா கூர்ந்துபாரே. (10)

பாரப்பா திரிகோண மகத்தாம்விஞ்சை
பண்புடனே அதினுடைய மார்க்கங்கேளு
ஆரப்பா அறிவார்கள் சித்தர்காண்பார்
அப்பவப் பொருளையோ கனத்தாற்பற்றி
வீரப்பா செய்யாமற் றயிலம்வாங்கி
விபரமுடன் வழலையுப்பை மேலேதூவி
கூரப்பா சதாசிவத்தைத் தியானஞ்செய்து
கொடூரமாஞ் சுத்தஜல மிதுவுமாச்சே. (11)

ஆச்சப்பா மகாரசத்தை யதிலேமாட்ட
அப்பனே பொங்கியது குளிகையாகும்
பேச்சப்பா அஷ்டசித்தும் ஆடும்ஆடும்
பேரண்டஞ் சுத்திவரும் பேசப்போமோ
வாச்சுதே பராபரத்தின் குளிகையொன்று
மைந்தனே அனுதினமும் வணக்கமுற்றால்
தாச்சியொன்று மில்லைரவி மதியிலீயத்
தாயான மனோன்மணியைத் தியானஞ்செய்யே. (12)

செய்யப்பா அவளுடைய தீர்க்கத்தாலே
செகம்நெடுவாய் நின்றகயி லாசந்தோன்றும்
மெய்யப்பா சொல்லுகிறேன் சுத்தஜலந்தன்னில
மேன்மையுள்ள முற்கருவுந் தாக்கிப்பாரு
வையப்பா ஜலத்திலுப ரசங்கள்தன்னை
வாட்டிரவி முகங்கண்டால் மணிபோலாடும்
கையப்பா உதகமது மேலேமக்கள்
கருவுருவா மாயிரத்திற் கருச்சொன்னேனே. (13)

சொன்னேனஞ் ஞூறில்பல திரட்டுமார்க்கம்
சுருக்கமுட னிருநூறில் யோகஞ்சொன்னேன்
என்னவொண்ணு விநோதவகை நூறிற்சொன்னேன்
எண்பதிலே வயித்தியத்தை யுரைத்துப்போட்டேன்
பன்னமைந்த பாவைஷபதி னெட்டிற்சொன்னேன்
பக்குவமாய்ச் சோஷியத்தைப் பத்திற்சொன்னேன்
கன்னிசிறு சண்மணியின் கடாட்சத்தாலே
கருணையுள்ள தேவனென்று கரைகண்டேனே. (14)

கண்டதொரு கருவையெல்லா மொடுக்கிமைந்தா
கருணையுள்ள மனோன்மணியின் கடாட்சத்தாலே
தொண்டரே நயந்தவரைத் தொண்டுபண்ணி
சுந்தரம்போல் முப்பதிலே தொழிலைகாட்டி
அண்டரெல்லாங் கொண்டாட வெளியில்வந்தேன்
அப்போது வாராம தேவாவென்று
தெண்டனே கமண்டலமுங் கொண்டுபேசி
சின்மயத்தி னருளாலே திரம்பெற்றேனே. (15)

திரம்பெற்ற தின்னமொரு கருவைக்கேளு
தீர்க்கமுற் கருவும்பிற் கருவுங்கூட்டி
உரம்பெற்ற ரவிமதியு மொன்ருய்ச்சேர்த்து
உத்தமனே நவச்சார மொன்ருய்க்கூட்டிக்
கரம்பெற்ற கல்வத்தில் மத்தித்தாக்கால்
கப்பளித்துக் கொப்பளிக்குங் கருணைதண்ணீர்
சிரம்பெற்ற கெங்கையடா ஜெயநீர்தன்னைச்
சிக்கெனவே குப்பிதனி லடைத்திடாயே. (16)

அடைத்ததொரு ஜெயநீரா மலைமேற்குத்தி
அப்பனே அனல்காட்ட நீறிப்போகும்
படைத்ததொரு யிந்நீரை யிரும்பிற்ருக்கிப்
பக்குவமாய்க் குக்குடத்திற் பற்பமாகும்
திடத்துடனே அந்நீரைச் செம்பிற்பூசிச்
சிக்கெனவே காடையொரு புடத்தில்நீறும்
அடைக்கலம்போ லெனையீன்ற தேவிசொல்ல
அப்பனே யானறிந்து அருள்பெற்றேனே. (17)

பெற்றதொரு கருவொன்று சொல்லக்கேளு
பேசாதே அடைக்கலத்தின் முட்டைவாங்கி
உற்றதோ ரண்டத்தி னுேட்டின்மேலே
உட்கருவைத் தான்தடவி யுலரவைத்து
கற்றதொரு மந்திரத்தைத் தியானஞ்செய்து
கருத்துடனே அடுப்பேத்தித் தீபமேத்தி
பத்தியதோர் மையெடுத்துப் பதனம்பண்ணிப்
பசுமையுள்ள கருத்தொட்டு மத்திப்பாயே. (18)

மத்தித்துக் குருபரனைத் தியானஞ்செய்து
மார்க்கமுடன் நெற்றிதனில் திலதம்போட்டுச்
சுத்தமுட னெதிர்நோக்கிப் பார்க்கும்போது
சுடரொளிபோற் பாதாளந் துலேதானுேடும்
பெத்தநிதி யெல்லாங்கை வசமேபண்ணும்
பேசாதே தவமகிமை பேணிப்பாரு
அத்தனருள் பெற்றதொரு வாமப்பெண்தான்
அகலாது உன்னிடத்தி லருள்செய்வாளே. (19)

செய்யவே யின்னமொரு கருவைக்கேளு
　　செகத்துள்ள பிணிகளெல்லாந் தீர்வதற்குப்
பையமுற் கருவும்பிற் கருவுங்கூட்டிப்
　　பக்குவமாய்க் காரமுடன் சாரஞ்சேர்த்துக்
கையுடைய கணபதியைத் தியானஞ்செய்து
　　கருவான சற்பூர விந்துநீரால்
ஐயனே கல்வத்தி லாட்டிப்பார்க்க
　　அரகரா மெழுகுபத மாகும்பாரே. (20)

பாரப்பா இம்மெழுகைத் தேனிலூட்டிப்
　　பக்குவமாய் நோய்தனக்குப் பகுந்தாயானால்
ஊரப்பா விட்டோடும் பிணிகளெல்லாம்
　　உத்தமனே இம்மருந்து வுறுதிமெத்த
வாரப்பா மெழுகுதனில் நாதவிந்தை
　　வகையுடனே விட்டுமொரு திலதம்போட்டு
நேரப்பா நின்றபிணி நோயைப்பார்க்க
　　நிமிஷத்தி லோடிவிடும் நிசஞ்சொன்னோமே. (21)

நிசமாக யின்னுமொரு கருவைக்கேளு
　　நீள்திசையி லுள்ளசித்தர் மெச்சிக்கொள்ள
வசமாக ஆவின்புல் லாருவிவாங்கி
　　வகையுடனே அண்டம்போற் சுத்திக்கொண்டு
பிசகாம லாவடதனை யதன்மேற்சுத்தி
　　பிறளாமல் வைத்ததின்மேல் ரவியைக்காட்டப்
பிசகொருநாள் வாராது உருகிநிற்கும்
　　பிரியமுடன் றானெடுத்துப் பதனம்பண்ணே. (22)

பதனமப்பா யிக்கருவைப் பதனம்பண்ணு
　　பாரிலுள்ள அதிசயங்க ளெல்லாந்தோணும்
விதனமப்பா ஒன்றுமில்லை சிறியாணங்கை
　　வேலாநிழ லுலர்த்திகுழித் தயிலம்வாங்கிச்
சதமான கருவெடுத்துத் தயிலஞ்சேர்த்துத்
　　தம்பனத்தாற் றன்குழைத்துச் சிமிழில்வைத்து
நிசமான வசீகரத்தைத் தியானஞ்செய்து
　　நின்றநிலை தானறிந்து திலதம்போடே. (23)

போட்டடா ரேசகபூ ரகமும்பண்ணிப்
புனிதமுடன் கும்பகத்தில் நின்றாயானால்
சோட்டடா ஒன்றுமில்லை யெல்லாந்தோனும்
தொல்லுலகிற் கீழேழு லோகந்தோணும்
பூட்டடா பூட்டெல்லா மீதில்சொன்னேன்
புண்ணியருக் கெய்துமடா கருமிக்கில்லை
நாட்டடா திசைக்கம்பம் நாட்டிப்பாரு
நடுவான பூரணத்தின் நன்மைதானே. (24)

நன்மையுள்ள மகாரசத்தின் சுத்திகேளு
நவகோடி சித்தர்மதி மெய்க்கவேதான்
மென்மையுள்ள விந்துவுடன் நாதங்கூட்டி
விசையான வழலையுப்பை அதின்மேற்றாவி
உண்மையுள்ள ஜலமாகும் வழலைதண்ணீர்
ஓங்கார மானஜலந் தன்னிலேதான்
தன்மையுள்ள மகாரசத்தை யுருக்கிச்சாய்க்கத்
தவளநிற மானதொரு மணிபோலாமே. (25)

மணியான மனோமணியை நாதத்தூட்டி
வரையான விசுத்திவரை தன்னிலாட்டிக்
கனியான கனியென்ற நாலாங்காலைக்
கருவேற உருவேறக் கருதனுள்வைத்துத்
தனியான சமாதனி லிருந்துரைத்தால்
தங்கமடா தேகமுமாய்த் தானேயாகிப்
பனியான பலதொழிலுக் கிதுவேமுத்தி
பஞ்சசத்தி ரூபமெனப் பகரலாமே. (26)

பகரவே துருசினுட பற்பங்கேளு
பசுமையொளி பெற்றதொரு நாதமாகும்
சிகரவொளி பெற்றதொரு விந்துதன்னைச்
சிவசிவா ரெண்டுடனே ஒன்றாகூட்டி
அகலாத அண்டநீர் தன்னிலாட்டி
அப்பனே ரவிகாண நீறிப்போகும்
இகபரசா தனம்பெற்ற பற்பந்தன்னை
யீரமில்லாத் தனைகளிலே போடுபோடே. (27)

போட்டவுடன் கசிந்துவெகு தண்ணீராகும்
பொல்லாத பால்களிலே போட்டாயானால்
காட்டமுடன் திரையகற்றிச் சுத்தநீராம்
நன்மையுள்ள செயநீரைப் பதனம்பண்ணி
வாட்டமில்லாச் சரக்குகளைத் தோய்த்துவாட்ட
வகையுடனே கட்டியது மணிபோலாகும்
தாட்டிகமாய்ச் சொன்னடா துருசுப்போக்கு
தாயான மனோமணிதன் தவத்திறைலே. (28)

தவமான கொங்கணவன் போலேசித்தன்
தாரணியி லில்லையடா தவக்குடோரி
சிவமான செபதபங்க ளவனைப்போலே
சீக்கிரத்திற் றெளிந்தவர்க ளாருமில்லை
நவமான கிரகநிலை தன்னில்நின்று
நாலுலெட்சங் கோடிவரை சித்துமாடி
பவமான நக்தியொளி கண்டதாலே
பட்சணியை ஐம்பதுக்குட் பாடினேனே. (29)

பாடினேன் பட்சணிக ளெல்லாம்பார்த்துப்
பண்பான கருயாவும் பார்த்துத்தேர்ந்தேன்
நாடினேன் கொங்கணர்பட் சணியைப்போல
நாட்டினேன் பட்சணியின் கருவையெல்லாம்
தேடினேன் நடுவாம்பூ ரணத்திறைலே
சிவசிவா சொல்வேன்பட் சணியின்மார்க்கம்
கூடினேன் குகைவாசல் தன்னில்நின்று
கும்பிட்டேன் பட்சணியின் குணம்பெற்றேனே. (30)

குணம்பெற்ற பட்சணியை வாமம்வைத்துக்
குண்டலிபாந் தெட்சணியை வலத்தில்வைத்து
இனம்பெற்ற மாதரசைத் தியானஞ்செய்ய
யீரேழு லோகமதி லின்பமான
தனம்பெற்ற அதிசயங்க ளெல்லாந்தோற்றும்
தானவனும் நின்றதொரு தவமேதோற்றும்
மனம்பெற்ற யீராறு தலமுந்தோற்றும்
வஞ்சகங்கள் சத்துருவும் வசியமாமே. (31)

வசியமுள்ள பட்சணியை வலத்தில்வைத்து
வகாரமுள்ள தெட்சணியை யிடத்தில்வைத்துப்
பசியமுதப் பால்புகட்டும் லோகமாதா
பாதமலர் தானெடுத்துச் சிரசில்வைத்துக்
கசியமன முருகிடவே தியானஞ்செய்யக்
காயசித்தி யோகசித்தி வாதமெய்தும்
உசிதமுள்ள பட்சணியைக் கண்டகாலம்
உதவியருள் தெட்சணியை யுத்துப்பாரே. (32)

உத்துப்பார் பட்சணிதெட் சணிதானென்பார்
ஓகோகோ அதினுடைய கருவைக்காணார்
பெத்ததொரு பட்சணியின் கருவைக்கண்டாற்
பிசகாது வாதசித்தி யோகந்தானும்
அத்தனருள் பெற்றவர்க்கே யெய்துமெய்தும்
அரகரா பட்சணியின் கருவைக்கேளு
சுத்தமுள்ள கொங்கணவர் மறைப்பாய்ச்சொன்னார்
சொல்லுகிறேன் வெளிதோணச் சொல்லுவேனே. (33)

சொல்லவே யாதியந்தப் பதிவைப்பாரு
துலங்குமடா அப்பொருள்தான் விஞ்சைவிஞ்சை
வல்லவர்கள் தானறிந்து பதிவைப்பார்த்து
வசீகரத்தால் மோகனதம் பனமேசெய்து
அல்லலது தானகற்றி யேகமூலி
யாசரித்து வடவேரை அன்பாய்ப்பத்தி
நல்லகுண முடையவனு மில்லல்லாவை
நாட்டினு னஞ்சிதமாய்ப் பத்துநோம்பே. (34)

நோம்பான முப்பதுநாள் நோம்புமார்க்கம்
நுண்ணிமையா லறியார்கள் புவியின்மீது
பாம்பான அஞ்சுதலை நாகமையா
படமெடுக்கும் விசையறிந்து பதிவைப்பாரு
தாம்பான சலதாரைக் குத்துக்கல்லைத்
தகர்க்குமடா அந்நாகஞ் சீறிக்கொத்தும்
நீம்பாமற் கிடக்குமஞ்சு தலையின்நாகம்
நேராக ஐயைஞ்சா யிருபத்தஞ்சே. (35)

அஞ்சான ரெண்டுபத்து அஞ்சுங்கூட்டி
அம்மம்மா முப்பதுநாள் நோம்புமாச்சு
நெஞ்சான அஞ்சுதலை பத்துநோம்பில்
நின்றாடு மில்லல்லா யிறசூலாகி
அஞ்சாகிப் பூவாகிப் பிஞ்சுமாகி
அகாரமுதல் உகாரம்வரை நாலுங்காணத்
துஞ்சாத பூமலர்போற் கொடிதான்கட்டித்
துடுக்கான அசனுசனு மாண்டார்பாரே. (36)

மாண்டவர்கள் குறியறியார் மஸ்தான்சாய்பு
மக்கத்திற் கொடிக்கட்டி வாழ்ந்தாரப்பா
ஆண்டவர்க ளதிற்கோடி காலம்வாழ்ந்து
அரும்பொருளை யறியாமற் சமூலமேவித்
தூண்டாத விளக்கொளியைக் கண்டுமேவித்
தொழுதனடா யிருகையாற் செவிவாய்மூடி
பூண்டனடா பூமியிலே பாய்ந்தேனப்பா
பொற்குறியைக் கண்டுநான் ஆஊவென்றேன். (37)

ஊவென்ற சொற்கேட்டு நபிமாரெல்லாம்
உற்றகுண் டலியசைத்துத் தீன்தீனென்று
ஆவென்ற நபிமார்க ளென்னைப்பார்த்து
அசனுசனும் வேறல்ல நீநானென்றார்
மாவென்ற ரொட்டியையொன் றீய்ந்துநல்ல
மக்கத்திற் போயிருங்க ளென்றுசொன்னார்
ஈவென்ற சொல்லேது ஆப்ஞவென்று
யிருந்தனடா கோடிவரை யிறசூலென்றே. (38)

சூலான பிண்டமதை வாங்கிமைந்தா
துடியான வழலையுப்பை அதன்மேற்றூக்கி
நாலான நாற்பதுநாள் சமாதிவைக்க
நற்குழம்பாய்ப் பின்னுமது மெழுகுமாகும்
தேலான அம்மெழுகைக் குன்றியுண்ணத்
திறமாக மண்டலத்திற் சட்டைதள்ளும்
தோலான தேகமப்பா யிருக்கிநல்ல
சோதியுள்ள அருணனைப்போற் றோன்றுந்தானே. (39)

தானவனும் நின்றதொரு வெழுகுதன்னைத்
தம்பனத்தால் காதவிந்து தன்னுலட்டிக்
கோனருளாற் சிமிழ்தனிலே பதனம்பண்ணிக்
கொடிதான நோய்களுக்குக் குன்றியிவாய்
ஊனமெனும் ஊரைவிட்டுப் பிணிகளெல்லாம்
ஓடிவிடும் அவனிருக்கு மூரைவிட்டுத்
தேனமுதப் பட்சணியின் கருவினாலே
சிவசிவா அஷ்டகர்மந் திரம்பெற்றேனே. (40)

திரம்பெற்ற பட்சணியே தெய்வந்தெய்வம்
செகத்திலே வேறுமொரு தெய்வமுண்டோ
வரம்பெற்ற தெட்சணியே காமரூபி
மதியுடன்தா னிருத்திப்பட் சணியைப்பாரு
சிரம்பெற்ற அமுதமடா மீவாளாததாள்
சென்றங்கே சதாசிவத்தின் நிஷ்டைக்கூடிக்
கரம்பெற்ற கருவான காலமூன்றும்
கண்டுமதி னதிசயத்தைக் கருதலாமே. (41)

கருதவே யின்னமொரு கருவைக்கேளு
கற்புடைய மனோமணியின் கருணையாலே
உருகவே யாதியந்த நிலையைப்பார்த்து
உருவான கருவுருவாம் மதனப்பூடு
தருகரே சகத்தாற்பூ ரணத்தைப்பற்றித்
தாயான மனோமணியைக் கருத்தில்வைத்துத்
திருகாமல் நின்றநிலை தன்னில்நின்று
சிவசிவா தம்பனத்தால் வடவேர்வாங்கே. (42)

வாங்கியே அவ்வேரைக் கண்டமாக
வாளரத்தால் வெட்டிசிறு கலசஞ்சேர்த்துப்
பாங்குடனே நவச்சாரம் பூரம்வெள்ளை
பாஷாணம் வீரமொடு ரசகற்பூரம்
தீங்கில்லாக் கெந்தியுடன் வழலையுப்பு
தீர்க்கமுள்ள வெடியுப்புப் பூநீர்கூட்டிச்
சாங்கமாய் வகைக்குவொரு பலமேவாங்கித்
தப்பாமற் கலசமதிற் றண்ணீர்சேரே. (43)

சேர்த்துடனே மேற்சட்டி கொண்டுமூடி
திர்க்கமுடன் சீலைசெய்து தமர்தானிட்டுக்
காத்தொடுக்க மானதோர் நிலத்தில்வெட்டிக்
கலசமொன்று பதியவைத்து அதின்மேற்பானை
பாத்துடனே மட்கலசம் நிற்கவேதான்
பக்குவமாய்த் தான்கவசச் சீலைசெய்து
சாத்தடா மணற்பானை யரைமட்டிட்டு
தப்பாம லெருவடுக்கிப் புடந்தான்போடே. (44)

போட்டபுடம் ஆரவிட்டுப் பதனமாகப்
புண்ணியனே தானெடுப்பாய் தயிலந்தன்னைப்
பாட்டதிகஞ் சொல்லவில்லை அப்பாகேளு
பக்குவமாய்க் குப்பிதனி லடைத்துக்கொண்டு
தாட்டிகமாய் மனோமணியைத் தியானஞ்செய்து
தவறாமற் றயிலத்தைத் திலதம்போட்டால்
நாட்டதிக மானபயி ருயிர்களெல்லாம்
நாதனென வணங்கியுன் வசமாம்பாரே. (45)

பாரப்பா பின்னுமொரு கருவைக்கேளு
பக்குவமாய்ப் பீங்கானிற் றயிலம்வார்த்து
காரப்பா மனோமணியைக் கருத்தில்வைத்துக்
கருணையுள்ள அரிதாரக் கட்டிவாங்கி
நேரப்பா வீரமொடு லிங்கம்கெந்தி
நினைவாகத் தயிலமதில் விரவியப்பா
ஆரப்பா உனக்கீடு வுலகிலில்லை
அகலில்வைத்துப் புடமிடச்செந் தூரமாச்சே. (46)

ஆச்சப்பா செந்தூரத் தொழிலைக்கேளு
ஆச்சரியம் மலையும்பொன் னாகும்பாரு
பேச்சப்பா ஒன்றுமில்லை குன்றியுண்ண
பிலத்துதடா ஆக்கையதற் கழிவுமில்லை
மூச்சப்பா ஓடாது முன்பின்னாக
மூதண்ட மொட்டிவரும் முழிக்குமுன்னே
காச்சப்பா யிரும்புதனைக் காச்சிக்கொண்டு
கருணையுள்ள தயிலமதை மேலேவாரே. (47)

வாத்திடவே யுருகியது சத்தாய்ப்போகும்
　　மக்களே அயச்சத்தைச் செம்பிற்றாக்கிப்
பாத்திடவே வுருகியது பசும்பொன்னாகும்
　　பக்குவமாய்த் தகடடித்துத் தயிலம்பூசிச்
காத்தடங்கும் நிலந்தனிலே புடத்தைப்போடு
　　கனகமணிச் செந்தூர மாகுமப்பா
பூத்தடங்கும் மதிதனிலே பத்துக்கொன்று
　　பூட்டிறைற் பதினாறு மாத்துமாமே. (48)

ஆமப்பா யின்னுமொரு சேதிகேளு
　　ஆயிமன்றோ மணிபாத மன்பில்வைத்து
நாமப்பா சொல்லுகிறோம் நன்றாய்க்கேளு
　　நாலுபலம் மகாரசத்தை வாங்கிவந்து
காமப்பால் கானற்பால் ரெண்டுங்கூட்டிக்
　　கருணையுள்ள கயிலமதிற் கொஞ்சம்விட்டுச்
சாமப்பா மகாரசத்தை யுருக்கிச்சாய்க்கத்
　　தவளநிற மானதொரு மணிபோலாமே. (49)

மணியான நவமணியைத் தகடாய்த்தட்டி
　　வளமான தயிலமதை மேலேபூசிப்
பணியான அகலில்வைத்துப் புடத்தைப்போடு
　　பரமகுரு செந்தூர மாகும்பாரு
கணியான கனிபோற்செந் தூரம்வாங்கிக்
　　கமலமலர்ச் சிமிழ்தனிலே பதனம்பண்ணி
வணிகரமாய் மதிதனிலே தாக்கிப்பாரு
　　மக்களே ஆயிரத்தி யெட்டுமாத்தே. (50

எட்டுரெண்டும் அறிந்தவர்க்கே யெய்துமெய்தும்
　　இல்லாட்டா லிந்நூல்தான் கிட்டாகிட்டா
துஷ்டருட னொருநாளுங் கூடவேண்டாம்
　　துடியாக வொருவரையும் பேசவேண்டாம்
இஷ்டமுட னிந்நூல்தா னம்பத்தொன்று
　　ஏகமாய் மவுனமுட னிருந்துகொண்டு
அஷ்டாங்க யோகமதைத் தினமும்பாரு
　　அருளான மனோன்மணிதான் காப்பாள்முற்றே. (51)

இராமதேவர் அஷ்டாங்கயோகம் ருடு,

முற்றிற்று.



உ

கடவுள் துணை.

ஐம்பத்தொன்பதாவது:

இராமதேவர் திருவாய் மலர்ந்தருளிய

# ஞானத் திறவுகோல் ௰௬.



தானென்ற சூதன்றானுஞ் சங்கரன் ரூபமாச்சு
வானென்ற ரூபந் தானும் மகத்தான சூத மாச்சு
கானென்ற நீருமொன்றாய்க் கலந்ததோர் வாயுவென்னக்
கோனென்ற சூதந்தன்னைக் கூறவுங் கூடாதென்னே. (1)

கூடாத சூதந் தன்னைக் குருவிட்டுக் கட்டிச் சென்பார்
போடாநீ தங்க மென்ன போடுவ தென்ன வென்பார்
வாடாநீ வாதந் தானும் மகத்தான யெளிதே யென்பார்
தாடான சுவருக் குள்ளே தனிக்குட்டிச் சுவரு தானே. (2)

சுவராகி யிருந்தா னாகிற் செய்தொழில் மறைப்ப தாகும்
சுவராகிக் கழுதை செத்துக் கட்டின மூளைதா னென்பார்
எவராகி யிருந்தா லென்ன யேற்கையாய்ச் சூதங் கட்டார்
தவராத யோகி யோகி தனிச்சூதங் கட்டுவாரே. (3)

கட்டினாற் பொன்னுமுண்டு கட்டட்டாற் பொன்னுமில்லை
கொட்டினாற் றேளே யாச்சு கொட்டாட்டாற் பிள்ளைப் பூச்சி
எட்டினால் ரசத்தைப் பாரு யெட்டாட்டாற் றொழிலைப்பாரு
கெட்டினாற் கினிஞ்சே னென்று கெடுகாதே மூடா கேளு. (4)

கேளிந்தச் சூதக் கட்டுக் கிடையாதே போச்சுதென்று
பாருநீ பாசாணத்தைப் பார்த்துநீ மயங்கா தப்பா
வேலையே யெரித்த யீசன் விளம்பினார் தேவிக் கன்று
கோளுநீ வந்த பேருக் கொடுரசம் வாதந் தானே. (5)

தானென்ற சூதந் தானே சச்சிதா னந்தமாச்சு
தானென்ற சூதந் தானே தயங்காத போதமாச்சு

தானென்ற சூதந் தானே சமரசப் பிர்ம மாச்சு
தானென்ற சூதன் சித்து தன்னுக்கு ஞண்டுபாரே. (6)

பானென்ற சூதங் கட்டப் பகர்ந்திட்டேன் முன்னே யானும்
வானென்ற யேழு சிங்கி வகையெல்லாஞ் சொன்னேன் சொன்னேன்
தானென்ற சிறுபெண் சொல்லச் சாதித்துப் பாகங் கண்டேன்
தேனென்ற வாத சித்தி சித்திக்கு மிந்நூல் பாரே. (7)

பாருநீ சூதஞ் செத்தாற் பளிச்சென்று பொன்னு மாகும்
பாருநீ சூதஞ் செத்தாற் பாவியே உடம்பு பொன்னும்
பாருநீ சூதஞ் செத்தாற் பராபரை முன்னே நிற்பாள்
பாருநீ சூதஞ் செத்தாற் பார்க்கலாங் கெவுனங் கேளே. (8)

கேளுநீ சூதஞ் சாகக் கெடியான யிணங்கன் சொல்வேன்
மாளுநீ கார சாரம் மகத்தான சுண்ணங் கொல்லும்
காருநீ லோக மெல்லாங் கடிதான சூதங் கொல்லும்
தேருநீ பாஷா ணத்தைச் செயசுண்ணங் கொல்லுந்தானே. (9)

தானென்ற வுபர சங்கள் தனியான சுண்ணங் கொல்லும்
வானென்ற வுதகங் கொல்லும் வாங்கிய வஸ்து கொல்லும்
கானென்ற வழலை தானுங் கடியதோர் மூலி கொல்லும்
தேனென்ற மொழியா ளெங்கள் சிவகாமி சொன்னவாறே. (10)

வாறுகேள் சூதங் க்கட்ட வகையெல்லாஞ் சொன்னே னப்பா
வேறுகேள் பூரணத்தின்னித்தான சிங்கி தொட்டுக்
கூறுகேள் சரக்குக் கெல்லாம் குலாவியே யிரட்டி வாட்டத்
தாறுகேள் வெவ்வே றுகந் தனிதனி வேதை யாமே. (11)

ஆமினிச் சொல்லக் கேளு அடங்கலுந் தொட்டு வாட்டக்
காமினி யுருக்கிப் போட்டுக் கடுஞ்சத்து மிதுவ தாகும்
போமினி தூர வேதை பூட்டவே யறிந்தா யாகுல்
தாமினி சூதத் தூட்டித் தனித்தனி விடுவிச்சேறே. (12)

ஏறவே வல்லா ளுகில் யெட்டெட்டு மாட லாகும்
ஏறவே வல்லா ளுகில் யெடுத்திடுங் கவன வீதி
ஏறவே வல்லா ளுகில் யெடுத்திடும் போதத் துள்ளே
ஏறவே வல்லோன் சித்தன் இறப்பிறப் பொழிந்து போமே. (13)

போமென்ற வீசன் சொல்லப் புகழாதே தேவி கேட்டு
ஆமென்ற சங்தோ ஷத்தி லடிமைக்குச் சொன்ன வப்பா
தாமென்ற சித்த ரெல்லாந் தனக்குமே அடிமை யாச்சு
வாமென்ற வாமத் துள்ளே வளமாகப் பூசை பண்ணே. (14)

பூசையை மறந்துபோனாற் போட்டதோர் சூதம்போகும்
பூசையை மறந்துபோனாற் புகழதாய்ச் சித்தி போகும்
பூசையை மறந்துபோனாற் போகாது நாதந் தானும்
பூசையை மறந்துபோனாற் புருவமை யத்தைக்காணர். (15)

காணாது ஒன்று தானுங் கண்கெட்டாப் போலே நிற்பான்
தோணாது சொரூபி யந்தச் சுரூபமு மொளித்துப் போகும்
பூணாது மனது வொன்றிற் போதத்திற் பூணொட்டாது
ஊணாது ஊணொட்டாது ஒருதொழிற் கூடாதென்றே. (16)

இராமதேவர் ஞானத்திறவுகோல் ௰௬,

முற்றிற்று.





மதுரை வடக்குமாசிவீதியி லிருக்கும் பாத்திர வியாபாரம் ந. ரா. ம. கணபதியாபிள்ளை யவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

கணபதி துணை.

அறுபதாவது:

இராமதேவர் திருவாய்மலர்ந்தருளிய

# சுத்திமுறைறும்.



முந்நூறும இந்நூலும் விநோதம்நூறில்
மேலான வித்தைகட்குத் துயிலங்கொண்டு
பந்நூறைஞ் ஞூறுபல திட்டுக்குந்தான்
பாலகனே இம்முறைகொண் டெணைசாடு
வந்நூறிற் பன்னுமொழி பதினெண்பேர்க்கு
மகத்தான அஷ்டசித்தும் விளையாடுமேபார்
கொந்நூறும் முந்நூற்று முப்பான்மேலே
குறைவுவருச் சுருக்கமொன்று கூறக்கேளே. (1)

கூறுகிறோம் சுந்தரமே சொல்லக்கேளு
கோடான கோடிநூ லிதுக்கொவ்வாது
ஆறுகிறோம் இதற்கடுத்த அஞ்சுநூலும்
ஆதார பூசைசெய்து அடக்கம்பண்ணு
வாறுகிறோம் முன்னோரிம் மொழியைக்கண்டு
வடமொழிக்குக் குருமொழிதான் மேலாமென்றார்
பாறுகிறோம் பதினெண்பேர் பாடினார்கள்
பலவிதமாய்க் கால்தலைவால் உடல்காணுமே. (2)

காணாதே போகவல்லோ மேல்கீழ்கொண்டு
காசினியோ ரிலையகன திட்டாய்ப்போட்டார்
ஆனாதே சுந்தரமே மவுனப்பூட்டை
அகத்தியர்மே லாணையடா மருமம்விட்டேன்
மூணாதே முக்கருமுப் பூவும்விண்டேன்
முந்நூற்றின் முப்பொருளை யுண்மையாக
வாணாதே வழலையென்றால் விழலையல்ல
வாதிகளே நீதியுடன் சேதிகேளே. (3)

சேதியென்று லறுதியப்பா சொல்லக்கேளு
    சிற்பரைப்பெண் கற்பரையாள் செய்கையாலே
நாதியென்றால் வேதைமுறை பாதைகண்டு
    நான்மறைகள் வேதத்தோ டாறுங்கண்டு
பாதியென்றால் முந்நூறின் பாகங்கண்டு
    பாலித்தோம் முகிதலுடன் முத்துங்கண்டு
ஆதியென்று லஷ்டகர்மக் கருவுங்கண்டு
    அரனமைப்புக் கண்டறிந்து அருளினோமே. (4)

அருளினோ மகத்தீச ருபதேசத்தால்
    ஆறுயி ரத்தாறு சதத்துச்சொச்சம்
சருளினோம் சகலநூற் கதிகமாகச்
    சரம்பொழிந்தாற் போலேயல்லோ சாற்றக்கேளு
சொருளினோம் சொல்லுமொழி நூல்கட்கெல்லாம்
    சுருக்கியே சொச்சமதாய்ச் சூட்சஞ்சொல்வோம்
வெருளினோம் விஷபூமி சுண்ணக்கல்லு
    விளம்புகிறோம் விஷசுத்தி விதமாய்க்கேளே. (5)

விதமான பதமறிசுந் தரமேமைந்தா
    வேதாந்த சாஸ்திரமுந் நூறுபீடம்
மதமான முந்நூற்றி முப்பான்சுத்தி
    மறையாம லைம்பதுக்கு ஞரையாய்ச்சொல்வோம்
பதமான பதினெண்பேர் நூல்கட்கெல்லாம்
    பாகமதா மண்டசுத்தி முறைதப்பாமற்
சுதமான முறைவாதம் முந்நூறோடு
    சொச்சமொழி யுணரவே முத்துங்கேளே. (6)

முத்தான முந்நூற்றி முப்பதுந்தான்
    முந்நூற்றில் முக்கருவும் உணர்ந்தோமப்பா
சுத்தான சொச்சமப்பா புலத்யநாதர்
    சொன்னமொழி யைம்பதுக்குட் சோதித்தோம்நாம்
அத்தான பத்தரப்பா சித்தர்மூலம்
    அறைகிறே னைம்பதுக்குள் அடவெல்லாந்தான்
பத்தான பதனம்வெகு பதனமாகப்
    பராபரன்மே லாணைப்படி பதனம்பண்ணே. (7)

பன்னுமொழி யென்னசொல்வோ ம்பின்னங்கேளு
 பதினெண்பேர் மறைத்தமொழி பகரக்கேளு
அன்னுமொழி வண்ணமங்கு வாலைப்பெண்தான்
 அவள்சொன்னாள் சொற்பனத்தில் யானுங்கண்டேன்
முன்னுமொழி முப்பொருளைப் புலத்யாதர்
 மூவருப தேசமதை யுணர்ந்தார்கேளு
தென்னுமொழி தெளிவதற்குத் தேவிவாலை
 செய்பாக மிதையளித்தாள் தெளிந்தேன்பாரே.

தெளிந்தோர்கள இம்மொழியை நன்றாய்ப்பார்த்துத்
 தேசத்தில் வெளிவிடா தடக்கமாக
வளிந்தோர்கள் வாழக்கற் பூரதீபம்
 மவுனத்திற் பூசைசெய்து வைத்துக்கொண்டு
எளிந்தோர்கள் இந்நூலைம் பதையுங்கண்டோர்
 ஏறுவார் வரையாறுக் கப்பாற்றாலும்
அளிந்தோர்கள் ஐம்பதையும் வெளிவிட்டோர்கள்
 அரன்வாக்கு அண்டயிடித் தலைவர்தாமே. (9)

அலைவார்க ளிந்தநூல் வெளிவிட்டோர்க்கு
 அரன்சொன்ன சாபம்வந்து அப்போசாடும்
பலைவார்கள் முன்னசிவார் மசிவாரப்பா
 பதினெண்பேர் வெகுசாபம் பாலிப்பார்காண்
கலைவார்கள் கடத்தேற மாட்டாரப்பா
 கண்டுசொன்னோம் மவுனஅண்டக் கருவேகேளு
முலைவார்கள் முந்நூற்றெண் பதுவாய்ச்சேர்த்து
 மொழிதவறு சொல்லுகிறோ முணர்ந்தவாறே. (10)

வாறான வாமியுட கருவேகண்டு
 வசனிப்போ மிந்தஐம்பத் தஞ்சுக்குள்ளே
யேறான யென்பாடற் கெல்லாம்மைந்தா
 எடுத்துரைப்போம் மகாசுத்தி யிதுபோலுண்டோ
தேறான தேன்மொழியாள் வசியமாகத்
 தென்பொதிகைச் சாரலிலே அனந்தங்கோடி
காறான கருவூரி லனந்தங்கோடி
 கண்டறிந்தோ மென்றறியார் கருவைக்கேளே. (11)

கோடா யென்மகனே மவுனயோகி
கிருபையுடன் சொல்லுகிறேன் கேளுமைந்தா
தேளடா தெட்சணமாம் பொதிகைச்சாரிற்
றெளிவாக வெகுகோடி யுகங்களப்பா
தாளடா தவமிருந்து தாயைக்கண்டு
தற்பறையின் வாக்கதனாற் றவறில்லாமல்
ஆளடா அநேகநாள் கோடிகாலம்
அப்பனே தவசிருந்து கருக்கண்டேனே. (12)

கண்டேனே அண்டமெனும் பிண்டத்தாயைக்
காமப்பெண் வாமியுட கருவினாலே
கொண்டேனே அண்டமென்ற பிண்டத்தாலே
கோடான கோடியுயி ரொன்றினாலே
எண்டேனே யெவ்வுயிரவ் வுயிராய்ச்சொல்வோம்
ஏகவுப நிடமகிமை யென்றுற்சொல்ல
முண்டேனே மொழிதவறு நைம்பதுக்குள்
மூதண்டக் கருக்குருவை உணர்வதாமே. (13)

கருவான கருவதனிற் றேவிவாலை
கன்னிபிர சன்னமதா யென்முன்னின்று
பருவான பரஞ்சோதி பரத்தண்டத்தின்
பருவமெல்லா மெனக்களித்து ராமமாவென்றால்
சுருவான சுந்தரமே அமுதவாழ்வே
சூட்சறிவு சுருக்கமதாய் சூட்டக்கேளு
அருவான அய்யாவே கும்பமேறி
அகண்டவரை யகண்டவரை காணுவாயே. (14)

காணுவாய் துறையாறில் வரைநாலகொண்டு
காமகரு சோமசுத்தி வாமப்பாலால்
ஆணுவாய் வைப்புமுதற் பத்துங்கொண்டு
அமுதபணி நீரதனில் யானைப்பாலில்
மாணுவாய் மஸ்தினியின் மவுனஅண்டம்
மதனப்பால் கொண்டுநீ மதியிற்கேளு
ஏணுவாய் யெட்டிரண்டும் பத்துக்குந்தான்
இந்தமுறை மவுனசுத்தி யெழிலாய்ச்செய்யே. (15)

செய்யெனவே வாமப்பெண் மொழியேகண்டு
சிற்பரையின் தற்பரைப்பெண் மகத்துவத்தாற்
பையெனவே பராபரியின் கிருபையாலே
பாடுகிறேன் சுந்தரமே பத்துக்குந்தான்
கையெனவே சித்தர்பதி னெண்பேர்மெச்சக்
கைபாகஞ் செய்பாகங் கருவாய்ச்சொல்வோம்
மெய்யெனவே யிப்பொருளைப் பார்த்தபேர்கள்
மேலான சித்திபெற்று வாழ்வீர்தாமே. (16)

ஆமென்ற பராபரம்வா ழமுதபிர்மம்
ஆராலுந் திறக்கொண்ணு தகண்டப்பூட்டைத்
தேமென்ற தென்பொதிகை மலையில்வாழும்
தேவராருட் கிருபையினுற் புலத்யநாதர்
வாமென்ற தலமுறைக ளிரண்டோடொன்று
மாகவித்து மூன்றல்லோ ராமர்யோகம்
ஏமென்ற யூகிதவ முனியேயப்பா
என்மொழியிந் தைம்பதுக்கு ளிடங்காண்பாயே. (17)

காண்பாயே யிடமடத்தி லிருக்குமாவே
கருரவியின் மதியினுட கனிநீதாவே
மாண்பாயே அகண்டமஸ் தினியின்கற்பம்
மனிதனையே உடல்விஷக்கல் மகிமையாலே
பாண்பாயே பரவிஷக்கல் உடற்கல்சுத்தி
பராபரன்றன் பூர்வக்கல் சமாதிக்கல்லின்
ஆண்பாயே ஆதியந்தம் வாதிக்காக
அஸ்தினியி னுடல்விஷக்கல் லறிவைக்கேளே. (18)

அறிவான குருசொரூப மிருந்ததாலே
அமைப்பதுவும் விவேகபுத்தி யதனாற்கேளு
வறிவான வழலைசுத்தி அமுதசுத்தி
வரையகண்டப் பரைசுத்தி யதுக்கெல்லாந்தான்
மறிவான மகாவிஷக்கல் லமுதவாக்கு
வசனித்தோ முண்மையப்பா மாட்டுறேன்கேள்
தெறிவான குருபூமி நிலக்கற்பாரை
தேசத்தி லதிகமப்பா சுண்ணக்கல்லே. (19)

கல்லான கற்கொண்டு சொல்லக்கேளு
கழுநீராற் கழுவியே அமுதப்பாலிற்
பல்லான பரவண்ட முதற்றான் வைப்பிற்
பத்தண்டங் கொண்டுவந்து பீங்கான்றன்னில்
ஒல்லான உடைத்துமே கல்தான்காய்ச்சி
ஓகோகோ சுண்ணக்கல் லமுதத்திட்டு
மல்லான அமுதநீர் தெளிவாஞ்சுத்தி
மகத்தான சுத்தியைநாம் மாட்டக்கேளே. (20)

மாட்டக்கேள் நிலச்சுண்ணத் தாம்பூலக்கல்
வகையான கல்லதனைப் பலம்ரெண்டாக
ஏட்டக்கே ளக்கல்லைக் குடிக்கும்நீரில்
எழுதரங் கழுவியதை யெடுத்துக்கொண்டு
காட்டக்கேள் கல்வத்திற் கற்கொண்டிட்டுக்
காமரதி அமுதபனி அப்பால்விட்டு
நாட்டக்கேள் ஆட்டிடுவாய் மூன்றுசாமம்
நளினமதாய் மெழுகுபத மாகுங்கேளே. (21)

கேளடா ஆட்டியே வழித்துக்கொண்டு
கேசரவி குகைசெய்து மதியில்வைப்பாய்
வேளடா நிழல்தனிலே யெட்டும்ரெண்டும்
விபரமதா யொன்பதுட சாமங்காய்ந்தால்
பாளடா போகாது குகைதான்கேளு
பதனமதாய்ப் பொட்டியிலே வைத்துஅப்பால்
ஆளடா அஸ்தினியி னுடற்கல்லப்பா
அதினுடைய சுத்தியைநா மறையக்கேளே. (22)

அறையக்கேள் விஷக்கல்லின் பையைக்கொண்டு
ஆரணியி னூர்தனிலே அலம்பிநீதான்
பிறையக்கேள் கத்திகொண்டு நடுவேகீறி
பேரான கல்லுதனை யெடுத்துக்கொண்டு
மறையக்கேள் மலப்பனிநீ ரதனிற்கேளு
மாணிக்க மணிதனையே கழுவிக்கொண்டு
முறையக்கேள் முன்சொன்ன அமுதங்கொண்டு
முறையான நிம்பழச்சா றதனிற்பாரே. (23)

பாரப்பா பனிநீரிற் பழச்சாரிட்டுப்
பருவமாய்ச் சரியிடையாய்ப் பரமாய்க்கண்டு
வேரப்பா விஷக்கல்தா னெடுத்துக்கொண்டு
விபரமதா யப்பாலே லொன்றேசாமம்
நாரப்பா ரவிசாம மதியிற்சாமம்
நன்றாக நாளைஞ்சு யிரண்டேசாமம்
ஆரப்பா அஞ்சுநாளுக் கிதுவேசுத்தி
ஆனபின்பு ஆறுநா ளறையக்கேளே. (24)

அறையக்கே ளின்னமொன்று சொல்வோமைந்தா
ஆதியப்பா முன்சொன்ன குகைதான்கொண்டு
விறையக்கே ளிக்கல்தா னுடற்கல்லப்பா
விபரமதாய்க் குகைதனிலே விஷக்கல்லிட்டு
மெறையக்கேள் குகைமெழுகாற் சுத்திக்கட்டி
மேலான சீலைசெய்து ரவியிற்சாமம
செறைடக்கே ளொருசாமம் ரவியிற்காய்ந்தால்
செயமாகுங் குகையெடுத்துச் செயலாய்த்தானே. (25)

தானான பூவரசம் பட்டைகொண்டு
தயவாக வதனையே கரியாய்ச்சுட்டு
தூனான புத்துமண் ணலேயப்பா
துருத்திகொண்டு பருத்திவா யதனல்மூடி
பூனான பூவரசங் கரிகொண்டிட்டுப்
புகழாகக் குகையெடுத்துக் கரிக்குள்வைத்து
ஆனான கனகாச்சல் காளமேகம்
அப்பனே துருத்திகொண்டு சாடுவாயே. (26)

சாடுவாய் நாளொன்று மூன்றேசாமம்
சாடினபின் னெடுத்துஅதைச் சாற்றக்கேளு
கூடுவாய் குகையெடுத்துப் பார்த்தாயானாற்
குருஅமுத வாக்கதுவால் விஷக்கல்சுத்தி
ஆடுவாய் குகையெடுத்து உடைத்துப்பாரு
அதிலாடுமே விஷமதனை ஆர்தான்சொன்னா
ஏடுவாய் எங்காவாற் சொல்லப்போமோ
யெமனிதப்பா சகலதுக்கும் நமனிதாமே. (27)

ஆமேதா னுடற்கல்லு சுத்தியாச்சு
அப்பனே சமாதிக்கல் லென்றுபேரு
நாமேதா னிக்கல்லு வர்ணம்மெத்த
நாம்சொன்னோம் சந்திரன்போல் விலாசங்காணும்
சோமேதான் சுத்தஜல அமுதங்கொண்டு
சொல்தவறுக் கல்வமதில் மணியேபோட்டு
பாமேதான் பனிநீரை விட்டுஆட்டு
பாலகனே மூன்றுநாள் விடாமலாட்டே. (28)

ஆட்டுவாய் சாமத்துக் கோர்தான்விதம்
அப்பனே சுத்தஜல மதனில்விட்டுச்
சாட்டுவாய் மெழுகுபத மானலத்தைச்
சமத்தாக வேவழித்து யெடுத்துக்கொண்டு
பேட்டுவாய் பில்லைசெய்து ரவியுலர்த்திப்
பேராக வெயில்தனிலே சாமங்காய்ந்தால்
நாட்டுவாய் பானையோ டதனிலப்பா
நற்சதுர மாகவல்லோ யிரண்டோடாமே. (29)

ஆமேதா னடியோட்டிற் பில்லைவைத்து
அப்பனே மேலோடு அடவாய்மூடி
மூமேமூன் குகைமெழுகிற் சீலைசெய்து
முன்னவனை நமஸ்கரித்து ரவியிலப்பா
காமேதான் ரவியிற்சித் திரையாம்நாளிற்
கண்மணியே சாமமெட்டுக் காய்ந்தபின்பு
நாமேதா னிக்கருவை யெடுத்துக்கொண்டு
நளினமதாய் முன்சொன்ன துருத்தியாமே. (30)

துருத்தியென்ற பூவரசங் கரிதான்கொண்டு
தோகையின மானமயி லாளைப்போற்றிப்
பருத்தியென்ற பராபரியைத் தியானஞ்செய்து
பாடுபட்ட தொழில்களெல்லாம் பலிதமாக
நெருத்தியென்ற சகலதுக்கிச் சுண்ணாந்தாயே
நீநின்று பாகமதாய் நேராய்ச்சொல்லும்
கருத்தியென்ற கைபாகம் தவறுமற்றுன
கடாட்சத்தை யுகிருபைவைத்துக் காருகாரே. (31)

காராகக் கரிக்குள்ளிக் கருவைவைத்துக்
கார்மேகம் புகையெழும்பத் துருத்திகொண்டு
வேராகச் சாடப்பா சாமந்தாறும்
விஷச்சுண்ண மகிமையப்பா யென்னசொல்வேன்
வாரான பில்லையைத்தா ளோட்டைதட்டி
வண்மையதாய் நீயெடுத்துப் பார்த்தாயானால்
தேரான பில்லையது தேவமாயை
தேவியென்ற வாலையரு கிருப்பாள்பாரே. (32)

பாரடா யென்மகனே இன்னங்கேளு
பராபரிதன் கிருபையினாற் பலிதசித்தி
சூரடா சுத்தஜல மதின்மேலப்பா
தூவியே தெளித்துமறை நிமிஷம்வைத்தால்
மாரடா மலருமப்பா உடற்கண்சுண்ணம்
மாதாவைப் பூசைசெய்து வைத்துக்கொள்ளு
ஆரடா யிப்படியார் சொல்லப்போறார்
ஆச்சுதப்பா விஷச்சுண்ண மப்பாற்கேளே. (33)

கேளப்பா சுந்தரமிச் சுண்ணங்கொண்டு
கிருபைநா தாக்கள்முறைக் கெல்லாமுந்தான்
சாளப்பா சற்குருவில் விஷேம்பட்டாக்கால்
சதாகோடி சித்துவிளை யாடுஞ்சுண்ணம்
ஆளப்பா ஐம்பதுக்குள் விஷக்கல்சுத்தி
அருளினேன் மண்டசுத்தி அடவாய்க்கேளு
ஏளப்பா யென்பாடல் முந்நூறுக்கு
இந்தமுறை யில்லாலே ளிதமாய்ப்போமே. (34)

எளிதமென் றெண்ணாதே மகனேகேளு
எடுத்துரைப்போம் மகாசுத்தி யிதுபோலுண்டோ
களிதமென் றெண்ணாதே யாதியண்டம்
கருவான சுத்தியப்பா சொல்லக்கேளு
அளிதமென் றெண்ணாதே முன்னோர்சொன்ன
அஸ்தினியி னண்டசுத்தி வசளிப்போம்நாம்
பாளிதமென் றெண்ணாதே பத்துக்குந்தான்
பாடுகிறேன் முதற்சாதிப் பருவம்பாரே. (35)

பாரப்பா அஸ்தினியின் பருவம்பார்த்துப்
பாடினேன் நிகண்டப்பா ஐஞ்ஞூறுக்குள்
காரப்பா கற்பமுறை நன்றாய்ச்சொன்னேன்
கைபாகந் தவறாமற் கண்டுபார்த்து
ஆரப்பா அஸ்தினிக்குக் கற்பமூட்டி
அதன்பிறகு வைப்புமுத லண்டங்கொண்டு
மூரப்பா முன்தெளிந்த சுண்ணங்கல்நீர்
முறையாக அதையெடுத்துச் சொல்லக்கேளே. (36)

சொல்லக்கேள் சுந்தரமே ராமன்பாடல்
சொல்தவறா வாக்கியமைம் பதுவேபோதும்
மல்லக்கேள் மகாநூல்மூந் நூறுபீடம்
வாக்கறச்சொல் லில்லையப்பா மகத்தாம்சுத்தி
வெல்லக்கேள் விஷச்சுண்ண மமுதத்தூட்டி
விராகனிடை தப்பாமல் விபரமாகப்
பல்லக்கேள் நிம்பழச்சார் வடித்துக்கொண்டு
பனிநீரிற் சரியிடையாய்ப் பாச்சிடாயே. (37)

பாச்சடா யென்மகனே சாமந்தானும்
பாகமதாய்ச் சென்றபின்பு தெளிந்தேபோகும்
ஏச்சப்பா பாண்டங்கொண் டிருத்துக்கொண்டு
என்மகனே முதல்வைப்பு யோண்டத்தைக்
காச்சடா கணபதியைத் தியானஞ்செய்து
கல்லான நிலச்சுண்ணக் குகைதான்கொண்டு
ஆச்சடா கல்வத்திற் குகையைப்போட்டு
அரைத்ததூள் வடியிட்டு அமுதத்தூட்டே; (38)

ஊட்டியே சாமஞ்சென் றாரித்தானால்
ஓகோகோ அதையெடுத்துப் பாருமைந்தா
பாட்டியே பனிநீர்போற் றெளிந்தேபோகும்
பாலகனே அதையெடுத்துப் பாண்டங்கொண்டு
ஆட்டியே வடித்திட்டா லமுதச்சுத்தி
ஆச்சுதப்பா அவ்வமுதங் கொண்டப்பாலே
நாட்டியே யிப்படியார் சொல்லப்போறார்
நாம்சொன்னோம் சுந்தரமே நவிலக்கேளே. (39)

கேளாத மவுனமப்பா சொல்லக்கேளு
கிருபையென்ற அஸ்தினியி லண்டமாத்தி
மூளாத முதல்வைப்பு பந்தக்குந்தான்
முன்னோர்கள் கிருபையினால் முறையாய்ச்சொல்வோம்
ஆளாத அண்டங்கா யாதியண்டம்
ஆருக்கும் இம்முறையை வெளிவிடாதே
பாளாத பாளப்பா வெளிவிட்டாக்காற்
டாழ்நரகிற் முன்விழுந்து பாழ்போவாரே. (40)

வாரான வாதிகளே அலையவேண்டாம்
வைப்புமுதற் காயகண்டம் வலுவாய்க்கொண்டு
ஆரான அஞ்சுமார்க் கண்டரப்பா
ஆகவிது பதினொன்று மடவாய்க்கொண்டு
காரான காய்கொண்டு கழிநீரப்பா
கருவான அந்நீரிற் கழுவிப்போட்டுச்
சூரான சுத்தஜல மமுதசுத்தி
சோதித்த பனிநீரி லண்டம்போடே. (41)

போடப்பா அண்டமதை அமுதத்தூட்டிப்
புகழாகச் சாணுக்கை யதன்மேல்மூடி
நாடப்பா கனரவியிற் பாண்டங்கொண்டு
நளினமந்தா யோர்நாழி வீதங்காய்ந்தால்
சாடப்பா சாரையைப்போற் பொங்கும்பாரு
சார்வான அண்டத்தின் மேலோசிக்கும்
ஆடப்பா அண்டத்தின் கோட்டைவாசல்
அமுதசுத்த ஜலமதுவாற் றிறம்பதாச்சே. (42)

ஆச்சடா யென்மகனே அண்டக்காய்தான்
அதினுடைய கசிவெல்லாம் அமுதம்வாங்கும்
ஏச்சடா எண்ணெய்யது வேர்வைபோல
இறங்குமப்பா பாண்டத்தி லிரவாய்ச்சொன்னேன்
காச்சடா காயாதி அண்டக்கல்தான்
கருவான அகண்டமதை யெடுத்துப்பாரு
பேச்சடா சொல்லவில்லை பிண்ணாக்கீசர்
பேசினு ரைஞ்ஞூறின் னூற்கொவ்வாதே. (43)

ஒவ்வாத நாலிதுமுந் நூறுபீடம்
ஓகோகோ முப்பத்தி மூன்றுக்குள்ளே
வவ்வாத வழலைமுப்பூ ஒன்றுக்குள்ளே
வசனித்தோம் சதாகோடி முறைகளெல்லாம்
அவ்வாத ஐம்பதப்பா சொச்சமின்றால்
அண்டக்கற் சுத்திதனை அறிவாய்ச்சொன்னோம்
பவ்வாத சாதியப்பா பத்துக்குந்தான்
பாகமாய்ச் சுத்திசெய்தாற் பலிதமாமே. (44)

ஆமேதா னண்டசுத்தி சூட்சாசூட்சம்
அருளினே னென்மகனே அப்பாற்சேரு
மாமேதான் மாணாக்கர் பதினெண்பேரும்
மயங்கினா ரிம்முறைதா னகப்படாமல்
வாமேதான் வாலையென்ற தேவிவாமி
வசனித்தாள் கனவுதனில் வளமாய்க்கண்டேன்
ஏமேதா னென்னுடைய தாயார்சொன்னாள்
இந்தமுறை யான்கண்டு பியம்பினேனே. (45)

இயம்பினதோ ரண்டசுத்தி யாலேமைந்தா
இகம்பரமும் பாசுத்தி யிதினாலாச்சு
வயம்பினதோர் வாதசுத்தி செய்யாவிட்டால்
வட்டடனே சிட்டமதாய் வலுவாய்ப்போகும்
பயம்பினதோர் வைப்புப் பத் தண்டத்துக்கும்
பாலகனே யிச்சுத்தி யொன்றதாலே
அயம்பினதோர் ஆயிரத்தெட் டண்டந்தானும்
ஆச்சரிய மிச்சுத்தி அடவதாச்சே. (46)

அடவான அண்டமதைச் சுத்திசெய்து
ஆடப்பா அறுபத்து நாலுக்குந்தான்
எடவான யெட்டெட்டு மிதனாற்சித்தி
எம்பத்தொன் றைம்பத்தொன் றிறவாச்சித்தி
மடவான மாயையெல்லா மிதனாற்சித்தி
மாணாக்கள் தேறுகின்ற வழலைசித்தி
வெடவான விஷவுடற்கல் காயாதிக்கல்
வேதாந்த சுத்திமுறை யிரண்டாலாச்சே. (47)

ஆச்சுதே சத்திமுறை ஆத்தாள்சொன்ன
அமுதவாக் கதினாலே யெல்லாஞ்சுத்தி
வாச்சுதிந் தைம்பதுக்குட் கோடாகோடி
வருஷித்த நூல்களெல்லா மிதுக்கொவ்வாது
ஏச்சுதே இந்நூலைம் பதையுங்கண்டு
எடுத்தமுறை தப்பாதென் மகனேசெய்தால்
தாச்சுதே தாச்சிவரா தோர்நாளுந்தான்
சாயுச்ய பதம்பெற்றுத் தான்வாழ்வீரே. (48)

வாழவென்றால் காலம்நீ டூழிகாலம்
வளமான யோகநெறி சனமாய்வாழ்வீர்
மூழவென்றால் முந்நூற்றி யெண்பதுக்குள்
முடிந்ததப்பா வழலைமுறை முன்னோர்சொன்ன
தாழவென்றால் தாள்பூட்டி யிருந்ததாலே
தாக்கான தொழில்களெல்லாம் போச்சுபோச்சு
ஆழவென்றால் ஆயியுட அனுக்ரகத்தால்
அண்டத்தாப் பாள்பூட்டி யுயிர்விட்டேனே. (49)

உயிரான உயிரப்பா விஷக்கற்சுத்தி
ஓகோகோ காயசுத்தி அமுதசுத்தி
நயிரான சுத்தியப்பா சொன்னேஞ்சொன்னேம்
நாடதிலே யிந்நூலைம் பதையும்மைந்தா
வெயிரான வெளிவிடா தடக்கம்பண்ணு
வெகுபதனம் வெகுபதனம் விஷக்கல்வாக்கு
அயிரான ஆயியுட கிரியையாலே
அளித்தமொழி யைம்பதுந்தா னடக்கம்பண்ணே. (50)

பண்ணப்பா சுந்தரமே வழலைப்போக்கு
பாடலுள் ளடக்கமதாய்ப் பரிவாய்ச்சொன்னேன்
எண்ணப்பா யெந்தநூல் கைவிட்டாலும்
இந்நூல்தா னைம்பதையுங் கைவிடாதே
அண்ணப்பா ஆயியுட விஷவாக்குத்தான்
அண்டயிடி விழுந்துயெழு நரகிற்போவாய்
நண்ணப்பா நாயகியாள் விவேகங்கண்டு
நாம்சொன்னேம் ராமனப்பா நன்றாய்முத்தே. (51)

முத்தான மூவுலகு மூன்றதாலே
முந்நூற்றி யெண்பதுந்தான் முகிதல்கண்டு
பத்தான பதினெண்பேர் பாடலுக்குப்
பலமதிக மென்னுடைமூக் நூறுபீடம்
மத்தான மஸ்தகிரி ஆயிரந்தான்
மகத்தான முந்நூறை மத்தாக்கொண்டு
அத்தான தண்டகத்தைத் தாளாய்ப்பூட்டி
அமுதமதாய்க் கடையுமைம் பதுவும்முற்றே. (52)

இராமதேவர் சூத்திரமுறை ருயி,

முற்றிற்று.





மதுரை புதுமண்டபம் புஸ்தகவியாபாரம் மு. கிருஷ்ணபிள்ளை அவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருவே துணை.

அநுபந்தோராவது:

இராமதேவர் திருவாய் மலர்ந்தருளிய

# மூப்பு சூஸ்திரம் ௩௧.

ஆதிகுரு வானதொரு பிரமந்தன்னை
அனுதினமும் நெஞ்சில்வைத்து அருளைநோக்கிச்
சோதிவெளிக் கப்பாலே துலங்குஞ்சத்தி
துணையெனவே கருமானச் சுருக்கஞ்சொல்ல
நீதியுள்ள வாலைமனோ மணிதான்வந்து
நிலைத்தபொருட் கருவமைப்பை நிலத்துள்ளோர்க்குச்
சோதனையாய்ச் சொல்லுவையோ ராமாவென்று
சொல்லிமனக் கசடகற்றி யுரைத்தாள்பாரே. (1)

பாரப்பா அவருடைய கடாக்ஷத்தாலே
பாடினேன் ரெண்டுபத்தும் பத்துங்கூட்டி
நேரப்பா முப்பதென்ற பொருளைக்காணார்
நேரறிந்த சிவயோகிக் கிந்நூல்வேணும்
காரப்பா சதாசிவத்தைக் கருத்தில்வைத்துக்
கருவான உப்பெடுத்துக் கலசத்திட்டு
வாரப்பா சுத்தஜலம் படிதானொன்று
வளமான காரமது பலமும்ரெண்டே. (2)

பலமான காற்பலந்தான் பூரம்போடு
பக்குவமாய்க் கரைத்ததனை உப்பிலூத்தி
நிலமான அடுப்பேத்தித் தீயைமூட்டி
நினைவாகத் தாளெரித்துப் பதத்தில்வாங்கக்
குலமான உப்பதுதான் சுத்தியாச்சு
கொடிதான சுண்ணமடா கூறப்போமோ
தலமான தலமறிந்து தியானஞ்செய்தால்
சதாகோடி வேதமுகங் காணலாமே. (3)

ஆமப்பா சுத்திசெய்த உப்புநாலு
அதிற்பாதி வெடியுப்பு அதிலும்பாதி
நாமப்பா சொல்லுகிறேம் பூரந்தானும்
நலமாக அதிற்பாதி சினங்கூட்டிக்
காமப்பால் விட்டாட்டிக் கல்வத்திட்டு
கனலெழும்ப ஒருசாமம் நன்றாயாட்டிச்
சோமப்பா லொருதுள்ளி அதனில்விட்டுச்
சுருக்காக உருட்டியதை வட்டுப்பண்ணே. (4)

பண்ணியதோர் வட்டக்கா ரோட்டில்வைத்துப்
பக்குவாய் மேலோடு பதியமூடி
ஒண்மைடீபா காமல்மண் சீலைசெய்து
ஒருமுழத்திற் குழிவெட்டி யெருவைப்போட்டுத்
தண்மையா யெருமேலே முப்பூவைத்துத்
தயவாக அதின்மேலே யெருவைக்கொட்டிக்
கண்மயேஸ் பரிதனக்குப் பூசைசெய்து
கருணையுடன் தனல்மூட்டிக் காருகாரே. (5)

காரப்பா சதாசிவத்தைத் தியானஞ்செய்து
கருத்துறவே தனலாறி யெடுத்துப்பாரு
ஆரப்பா அறிவார்கள் முப்பூச்சுண்ணம்
அப்பனே கடுங்கார மானசுண்ணம்
வீரப்பா செய்தோரை அடக்குஞ்சுண்ணம்
வேதாந்தப் பெரியோரைக் காக்குஞ்சுண்ணம்
சாரப்பா மேருவைத்தான் தகர்க்குஞ்சுண்ணம்
சதாகாலம் முப்பூவைத் தொழுதிடாயே. (6)

தொழுதிடவே யின்னமொரு கருவைக்கேளு
சுகமான விந்துவுட நாதங்கூட்டிப்
பழுதில்லாக் குருவில்பண விடைதான்போட்டுப்
பார்த்திருக்கத் தெளிந்ததுவும் பசுமையாகும்
செழுமையுள்ள செயநீரைப் பதனம்பண்ணித்
தீங்கில்லாச் சாதிலிங்கக் கட்டிவாங்கிக்
குழுமையுடன் சுருக்கிடவே கட்டிப்போகும்
கூசாமல் வேதைமுகங் கூர்ந்துபாரே. (7)

கூர்ந்துபார் ரெகுராம தேவர் நூலைக்
கொண்டாடி யின்னமொரு கருவைக்கேளு
சார்ந்துபார் முற்கருவில் விராகமொன்று
சரியான விரமுடன் பூரம்ரெண்டும்
நேர்ந்துபார் பணவிடைதான் புனுகுஞ்சேர்த்து
நினைவாகக் கருத்தொட்டு மத்தித்தப்பா
பாந்தமாய்த் துருசுக்குக் கவசஞ்செய்து
பக்குவமாய் நிழலுலர்த்திப் பதனம்பண்ணே. (8)

பண்ணியதோர் கவசமதைப் புடத்திற்போடப்
பக்குவமாய் நீறியது சுண்ணமாகும்
எண்ணவொண்ணா அதிசயங்க ளிதிலுங்காணும்
என்மக்காள் துருசினுட வேகம்வேகம்
புண்ணியமே செய்தவர்க்கு யிந்நூல்கிட்டும்
பொல்லாத சண்டாளர்க் கியம்பவேண்டாம்
வன்னியுட பீசமெனச் சொல்லலாகும்
வரிசையுடன் துருசினுட சுண்ணந்தானே. (9)

துருசுடசுண் ணத்தைபண விடையெடுத்துத்
துடியான சூதமொரு கழஞ்சுபோடப்
பருசுடனே படபடத்து அடங்கிச்சாகும்
பதமாகத் தானெடுத்து மணிதான்செய்து
வரிசையுள்ள செயநீரிற் போட்டுவைத்தால்
வாங்குமடா சாரணைதா னநேகங்கோடி
தெரிசனையாய்ச் சொன்னபொரு ளடக்கம்பண்ணச்
செகமெல்லாஞ் சென்றுவரத் திறஞ்சொன்னேனே. (10)

திறமான துருசினுட சுண்ணந்தன்னிற்
சிவசிவா பணவிடைதா னெடுத்துக்கொண்டு
உறமாமுற் குருவிலவ் விடையெடுத்து
உடன்சேரு புனுகுமவ் விடைதான்கூட்டிக்
கரமான கைதனிலே மத்தித்தேதான்
கருவான வீரத்திற் றடவிநல்ல
திறமான தீபமதில் வாட்டினக்காற்
செயவீர ராஜனுமே கட்டும்பாரே. (11)

பாரப்பா வெள்ளியந் தனையுருக்கிப்
பாச்சடா வீரனைத்தான் பத்துக்கொன்று
சேரப்பா யேமரசம் மாண்டுபோகும்
சிவசிவா கயிலாச மேரைக்காணத்
தூரப்பா துரும்பதுதான் தூணுமென்று
சொல்லடங்காப் பொருளெனவே சுருக்கியேதான்
சாரப்பா யிதினாலே பார்த்துக்கொண்டு
சதாகோடி சித்துவினை யாடுவாயே. (12)

ஆடவே யின்னமொரு கருவைக்கேளு
அரனெனக்கு உபதேச மன்பாய்ச்சொன்னார்
தேடியதோர் காரமுடன் சாரம்ரெண்டும்
திரளவே மத்தித்துச் செப்பக்கேளு
நாடவே குருவில்பண விடைதான்போட்டு
நன்றாக மத்திக்கச் செயநீராகும்
தேடவே அச்சலத்தில் நாகஞ்சாய்க்கச்
சீரங்கிக் கட்டுமடா திறஞ்சொன்னேனே. (13)

சொன்னதொரு நாகமதிற் சாரநீரைச்
சுருக்கிட்டுப் பரிநாலுக் கொன்றேயீந்து
வன்னமுள்ள செம்பதனி லீய்ந்தாயானால்
மக்களே பத்தரைதான் தப்பாதுண்மை
கண்ணிறைந்த கயிலாச மேருவைத்தான்
காட்டடா பதினாறுக் கொன்றுநீதான்
மண்ணிறைந்த பிருதிவியின் கடாட்சத்தாலே
மக்களே பதினாறு மாத்துக்காணே. (14)

காணப்பா யின்னமொரு கருவைக்கேளு
காசினியில் விள்ளாதே கருவைப்பாரு
வீணப்பா யில்லையடா தலைப்பேர்தன்னை
விபரமுடன் சமூலமதை வாங்கிவந்து
வாணப்பா கல்லுரலி லிடித்துக்கொண்டு
வாயகல மானதொரு பாண்டத்திட்டு
சீணப்பா கெந்தகமுஞ் சாரம்ரெண்டும்
சிறப்பாக வீரஞ்சு பலமும்வாங்கே. (15)

வாங்கியதைப் பொடித்துநன்றாய்ப் பாண்டத்திட்டு
வகையுடனே ரெண்டுமொன்றாய் ரேகித்தேதான்
பாங்குபெற ஆனைக்கண் சட்டிவாங்கிப்
பருவமுடன் தூர்தனிலே தமர்தான்போட்டுத்
தீங்கில்லாப் பாண்டமதின் மேலேமூடி
தியானித்து மண்சீலை சிறக்கச்செய்து
சாங்கமாய்க் குழிவெட்டிச் சமாதிவைப்பாய்
சட்டிதமர் தான்தெரிய மூடுமூடே. (16)

மூடியே முன்னவனைப் பணிந்துபோற்றி
முக்காலுஞ் சுத்திவந்து முன்னேநின்று
நாடியே தூபமொடு தீபங்காட்டி
நாரணியே கௌமாரி நாதாந்தத்தி
வாடிமனந் தளராமல் யென்னைக்காக்க
வாசமுள்ள பூமலராய் வாவாவென்று
தேடியே செபித்திடுவாய் பதினாறுக்குள்
தேவியே காட்சரியாள் வருவாள்பாரே. (17)

வந்தவள்தான் தமர்வாசற் குள்ளேசென்று
வரிசையுடன் போய்வருவா ளப்போதாலும்
கந்தமலர்க் குழலுமையாள் கடாட்சத்தாலே
கருணையுடன் மலராறிற் கருத்தான்சென்று
சிந்தையுள்ள பதினாறு நாளைக்குள்ளே
செனித்ததொரு பூமலர்கள் தமர்மேல்புக்கும்
வந்தவிதந் தானறிந்து பூவைவாங்கி
வரிசையுள்ள காசியுட மேரிற்போடே. (18)

போட்டவுடன் மண்சீலை யேழுஞ்செய்து
புதுமையுள்ள நெல்லவிக்கும் பானைதன்னில்
தாட்டிகமாய் நெல்குறைந்து அதின்மேல்மேரு
தயவாக வைத்ததின்மேற் சட்டிமூடி
நாட்டமுட னடுப்பேற்றி யவிக்கும்போது
நலமாக நெல்வெந்த பதத்திற்பாரு
வாட்டமில்லாச் சற்குருவைத் தியானித்தேதான்
வாசமுள்ள மேருவைத்தா னெடுத்துக்கொள்ளே. (19)

எடுத்துமெள்ளப் பார்க்கவேதான் மேருக்குள்ளே
 இருக்குமடா மதியமுத மென்னசொல்வேன்
எடுத்ததொரு அமுதமதில் வீரம்பூரம்
 என்மகனே யிருகமுஞ்சி யொடித்துப்போடத்
தொடுத்ததொரு அமுதமது செயநீராகும்
 துருவமுள்ள மேருவைநீ பதனம்பண்ணிப்
படைத்ததொரு அமுதசஞ் சீவியென்று
 பராபரனைத் தொழுதுமன தறிவில்நில்லே. (20

அறிவான கருவிலொன்று சொல்லக்கேளு
 அப்பனே அரிதாரக் கட்டிதன்னைக்
குறியான அமுதமதிற் பிரட்டிக்கொண்டு
 கொடிதான வெயிலில்வைக்கக் கட்டிநீராம்
விறிவான சவ்வீரக் கட்டிதன்னை
 விரவியே விளக்கொளியில் காட்டிவைக்கப்
பொறியாக நீறுமடா பொய்யோயில்லை
 புலையரிடம் யிந்நூலைப் புகலவேண்டாம். (21)

புகலவே பாசாணக் கட்டிவாங்கிப்
 புதுமையுள்ள அமுதமதிற் போட்டுக்கொண்டு
அகலமுள்ள செப்பகலிற் புடத்தைப்போடு
 அப்பனே பொருமியது வெண்ணீறுகும்
செகமுழுது மாட்டிவைக்குங் கெந்திதன்னைச்
 செப்பகலி லிட்டுமே செயநீர்விட்டுப்
பகலவன்றன் முகத்தில்வைத்துப் பார்த்திருந்தால்
 பார்க்குமுன்னே பொங்கியது மெழுகுமாச்சே. (22)

ஆச்சப்பா வெள்ளிதனைக் கிண்ணம்பண்ணி
 அதுக்குள்ளே சூதமதை அரைமட்டிட்டுப்
பேச்சப்பா ஒன்றுமில்லை செயநீர்விட்டுப்
 பெரியதொரு தணலில்வைக்கப் பிரண்டுபோகும்
காச்சப்பா யிரும்புதனைச் செயநீர்குத்திக்
 கருகவே காச்சிவிட்டாற் செம்புபோலாம்
பாச்சப்பா பரித்தகட்டிற் செயநீர்குத்திப்
 பக்குவமாய்ப் புடம்போடக் குருவுமாச்சே. (23)

குருவான குருவில்பண விடையெடுத்துக்
கொடிதான செயநீரவ் விடைதான்கூட்டிப்
பருவமுடன் ரெண்டினமு மொன்றாய்ச்சேர்த்துப்
பத்திபுடன் தானுருட்டிப் பதனமாகத்
திருவான பதிநோக்கித் தின்றாயானால்
சிவசிவா கயிலாச தேகமாகி
அருள்பெருகிப் புவிமீதிற் குருவாய்நின்று
அனைத்துயிர்க்கும் வல்லவனீ யாகுவாயே. (24)

வல்லபமா யின்னமொரு கருவைக்கேளு
வாசகரு வாய்ப்பட்டைப் பலமும்பத்து
தெள்ளிமையா யிடித்தகனிற் காரசாரம்
சேரடா பூரமுட னொன்றாய்ச்சேர்த்து
நல்லதொரு பாண்டத்தி லிட்டுமூடி
நலமான குழித்தயிலம் வாங்கியேதான்
அல்லல்செயும் நோய்க்குபண விடைகொடுத்தால்
ஆனகுளிர் சுரதோஷ மகன்றுபோமே. (25)

கண்டபா ரின்னமொரு கருவைக்கேளு
கருத்துடனே கருவறிந்து கருவைப்பத்தி
நின்றுபார் சத்தியடி மூலம்வாங்கி
நினைவாகக் குழித்தயில மிறக்கியேதான்
அண்டமதிற் செனித்ததொரு தயிலந்தன்னில்
அப்பனே கோசமுடன் பீசங்கூட்டிச்
சென்றுபார் உனதுகரு மூன்றுங்கூட்டிச்
சிவசிவா தயிலத்தில் மத்திப்பாயே. (26)

மத்தித்துக் குருபரனைத் தியானஞ்செய்து
மனதுடனே ரேசகபூ ரகமும்பண்ணிப்
புத்தியுடன் கும்பித்துத திலதம்போடப்
பூமிதனி லுள்ளபொருள் புகழாய்க்காணும்
பத்தியுள்ள பரஞ்சோதி தன்னைக்கண்டால்
பரமகுரு நீயெனவே வணங்கிப்போற்றி
வத்திக்குங் கருமானச் சுருக்கந்தன்னை
வகையறிந்து கருவறிந்து வணங்கிப்பாரே. (27)

பாரப்பா யின்னமொரு கருவைக்கேளு
பத்தியுடன் கேட்டதினாற் பலிக்குஞ்சித்தி
காரப்பா கன்னியுட நாதம்வாங்கிக்
கருவான குருவில்பண விடையெடுத்துச்
சேரப்பா நாதமதிற் கூட்டும்போது
திரையகற்றி நீரதுவுஞ் செயநீராகும்
வாரப்பா யின்னீரைச் சாணைதன்னில்
வாசமுள்ள மலாக்காயின் கட்டைதனையுரையே. (28)

உரைத்ததொரு சந்தனத்தைத் திலதம்போட்டு
உடம்பெல்லாந் தான்பூசி யுமையவளைப்போற்றித்
தரைக்குள்மன்ன ரணகளத்திற் செல்லும்போது
தருகாத குண்டுமுத லம்பையெல்லாம்
மரைக்குமடா சந்தனத்தின் வாசஞ்சென்று
மணங்குளிரக் கண்டவர்கள் வசியமாவார்
உரைக்குமொழி தவறாதுள் ளடக்கிநின்றால்
உயிர்கள்முதற் பயிர்வரைக்கும் வசியமாமே. (29)

வரிசையுட னிந்நூலு மைம்பத்தொன்றும்
வகையுடனே துகைபார்க்க யெண்பத்தொன்றும்
உரிசையுள்ள அமுதமென வுன்னிப்பார்த்தால்
உண்மையுள்ள அஷ்டகர்மஞ் சித்தியாகும்
பரிசுடைய பூரணத்தை வணங்கிப்போற்றிப்
பலகாலுங் கேசரத்தில் மனத்தைவைத்து
அருமையுட னமுதநிலை தன்னைப்போற்றி
அருள்பெருகுங் குருவினடி அன்பாய்முத்தே. (30)

முத்துமிதைப் பார்க்கையிலே மவுனமாக
மூடருடன் பேசாதே வாதாடாதே
சுத்தமுள்ள பெரியோர்க்குத் தொண்டுபண்ணு
துவாதசாந் தத்தில்மனந் துலங்கிநில்லு
சித்தமே சிவன்செயல்தா னப்பாசொன்னேன்
திரிகோண முள்ளசத்தி யறிவாம்பாரு
உத்தபொரு ளீதல்லா தொன்றுமில்லை
ஊடாடும் வாசியைநீ வணங்கமுற்றே. (31)

இராமதேவர் முப்புசூஸ்திரம் ருக,
முற்றிற்று.



உ

கடவுள்துணை.

அறுபத்திரண்டாவது:

இராமதேவர் திருவாய் மலர்ந்தருளிய

# பரிபாஷை விளக்கம் உஎ.

அண்டபிண்டம் நிறைந்தகுண் டலியின்பாதம்
　　அருள்பெருகுங் கணபதியி னருளேகாப்பு
மண்டலங்கள் மூன்றுரவி மதியாய்நின்ற
　　மதியிரவி யொளியினுட கமலம்போற்றிக்
குண்டலிதான் பூண்டபுலத் தியர்தன்பாதம்
　　குருமொழிதா னுயிரத்தின் பீடம்போற்றிக்
கண்டபொருள் பாஷைபரி பாஷைபீடம்
　　கருக்குருவாங் கணபதியின் பாதங்காப்பே. (1)

கமலமென்ற அமுதசெய ராமன்பாடல்
　　கணக்கில்லா நூல்களெல்லாங் கருத்தாய்க்கண்டு
அமலமென்ற ஆறுயி ரத்துச்சொச்சம்
　　அரகரா சுருக்கமதாய்ச் சுருக்கியானும்
வமலமென்ற பதினெண்பேர் மறைத்ததெல்லாம்
　　மாட்டுகிறோம் பாஷைபதி னெட்டதாக
நமலமென்ற நவபீடம் பரப்பிர்மந்தான்
　　நாதாந்தச் சுருக்கமதாய் நவிலுவோமே. (2)

நவிலுவோம் புலத்தியர்தன் கடாட்சத்தாலே
　　நாமுரைத்த பாஷையெல்லாம் நனினமாக
அவிலுவோம் ஆதியந்தம் போகசித்தி
　　அருளுகிறோம் குருவமுத அனுக்ரகத்தால்
கவிலுவோங் கருக்குருவாய் மனந்தேர்ந்தோர்க்கு
　　கதிரொளியாஞ் சுழிமுனையிற் கண்டகாட்சி
மவிலுவோம் மானுதி அதுவேயாதி
　　வசனித்தா ரீசன்பேர் வருத்தோம்காமே. (3)

வகுத்தபொரு ளேதென்றாற் பதினெண்பேர்கள்
வசனித்த நூல்தோறு மறைந்தார்சித்தர்
நகுத்தபொருள் நாம்சொன்னோம் ராமர்வாக்கு
நளினமதாய்ப் பாஷைபதி னெட்டதாக
அகுத்தபொருள் அனைவோரும் மகிழவேதான்
அருளுகிறோம் சிவயோக மதீதவித்தை
பகுத்தபொருள் வேதாந்தப் பரப்பிர்ம்மந்தான்
பாடினோ மதீதசித்தி பண்போர்கேளே. (4)

கேளப்பா தவமுனியே முன்னோர்சொன்ன
கெணிதமென்ற யோகசித்தி அதுவேமுத்தி
வாளப்பா வஸ்துவுட சித்திகண்டு
வாதமென்ற கருக்குருவை வளமாய்க்காணு
நாளப்பா யோகசித்தி யாகவேணும்
நாதாந்த வாதசித்தி பெறவேவேணும்
மூளப்பா மோக்ஷமுனக் கதுவேவேணும்
மூதண்ட ஞானசித்தி முத்திதானே. (5)

காணப்பா யெந்தன்குரு புல்த்தியநாதர்
கருவாகச் சொன்னதொரு பாஷையெல்லாம்
ஆணப்பா நாங்கண்டு உனக்குச்சொல்வோம்
ஆதியந்தஞ் சோதியென்ற அறிவேகேளு
மாணப்பா சாக்கிரசொற் பனத்தின்மேலே
மகத்தான சுழுத்தியொடு துரியாதீதம்
நாணப்பா நற்கமலஞ் சுழினைமேவி
நவிலுவோந் துரியமதில் நாட்டம்பாரே. (6)

நாட்டமாம் வலக்கண்ணு இடக்கண்ணுமேல
நளினமா யிதுரெண்டால் நாட்டக்கேளு
ஆட்டமாம் பூர்வபட்சஞ் சாமம்நாலில்
அப்யாசஞ் செய்வதற்கு அருளக்கேளு
வாட்டமாம் யோகத்தின் பாஷைதன்னை
வழுத்தவெவ ராலாகுந் திறக்கொண்ணாது
தேட்டமாந் திக்கெட்டு புவனத்துக்கும்
ஜெயம்பெற்ற பாஷைபதி னெட்டதாமே. (7)

ஆமப்பா கண்ணோட்டம் பார்ப்போருக்கு
அதிகசித்தி அனுஷ்டானம் பூசைவேணும்
நேமப்பா நிஷ்டைதவம் நேமம்வேணும்
நிராதார பூசையிலே நிலைக்கவேணும்
வாமப்பா ரவிகாலம் மதிமுன்பாக
மைந்தனே நீபடுக்கும் படுக்கைதன்னில்
ஏமப்பா வெழுந்திருந்து கிழக்கேகுந்து
என்னவொண்ணாப் பரிபாஷை யியம்பக்கேளே. (8)

இயம்பக்கேள் குருநூல்முந் நூறுதன்னில்
எடுத்துரைத்த அஞ்சனத்தின் மையைக்கொண்டு
நெயம்பக்கேள் நெற்றியிலஞ் சனத்தின்மையை
நீமகனே பணமதுபோற் பொட்டேயிட்டு
அயம்பக்கேள் யநமசிவ ஆம்-ஊம்-றீயும்
அப்பயிம் மந்திரத்தால் மவுனமேவி
கயம்பக்கேள் வாசியத னாலேநம்பி
கருணைதர வென்றுகண் ணோட்டம்பாரே. (9)

பாரப்பா வலக்கண்ணா லுருட்டிநீயும்
பண்பாக நெற்றிநேர் புருவந்தட்ட
ஊரப்பா உருட்டியதைச் சுழினைமேவி
உத்தமனே பார்த்ததொன்றால் ஓகோகேளு
தரப்பா நரியமென்ற அறுகோணத்தில்
தேவால யங்களது தெரியும்பாரு
ஆரப்பா பதினெண்பேர் மறைத்துவைத்த
அறிவதனைத் தெளிவதற லருள்செய்வோமே. (10)

அருளான சபையப்பா ஆறுங்காணும்
அஷ்டமா சித்தியெல்லா மங்கேதோணும்
தெருளான தேவர்கள்தான் வருஷிப்பார்கள்
தெளிவாக அமுதப்பால் சிறந்தேபாயும்
மருளான மறைத்தபொருள் அங்கேதோணும்
வலக்க ணை விட்டுநீ யிடக்கண்ணாலே
நருளான அதிகாலை கிழக்கேகுந்து
நளினமதாய்ச் சாக்ரநடு நெற்றிகாணே. (11)

காணடா சுந்தரமே அமுதப்பாலைக்
கனயோகஞ் செய்துகண் ணோட்டம்பாரு
சேணடா நாவுருக ஓட்டம்பார்த்தால்
செயலான சிலேற்பனந்தான் பித்தம்போகும்
ஆணடா யிடதுகண்ணால் மவுனந்தம்பி
அரகரா நம-வசிம ஓம்-ஆம்-றீயும்
வாணடா வாசியதி னாலேகும்பி
மவுனமதில் நியானித்து மருவிடாயே. (12)

மருவிடாய் இடதுசுழி முனைதான்கேளு
மகத்தான புருவநடு நெற்றிநேரிற்
கருவிடாய் குருவிருக்கும் யோகபீடம்
கனவுபோற் காணுமப்பா உருட்டிப்பார்த்தால்
அருவிடாய் சாக்கிரந்தான் நெற்றிநேர்கீழ்
அப்பனே சொற்பனத்தி லடவாய்ச்சாதி
துருவிடாய் துரியமென்ற துரியாதீதம்
தோன்றுமப்பா அறுசபையுஞ் சொக்கிநில்லே. (13)

நிற்கையிலே செகசோதி ஆதியந்தம்
நிர்மலமாஞ் சோதிசுடர் மண்டலங்கள்
முற்கையிலே மண்டலங்கள் மூன்றுங்காணும்
மும்மூலப் பதிதனிலே' மோட்சங்காணும்
அற்கையிலே யிடதுகண்ணால் வலதுபாரு
அரகரா வலதுகொண்டு யிடதுபாரு
வற்கையிலே மண்டலந்தா னிரண்டுநாழி
மைந்தனே அப்பாசம் வலுவாய்ச்செய்யே. (14)

செய்யப்பா மண்டலமிவ் விதமாய்ச்செய்தால்
செயம்பெருங்காண் கண்ணோட்டம் பாஷைவிள்ளும்
அய்யப்பா அப்பாசம் மண்டலமேசெய்தால்
அப்பனே விள்ளுமடா பரியின்பாஷை
மெய்யப்பா கனயோகஞ் சித்தியாச்சு
மேலான பரிபாஷை பதினெட்டாச்சு
உய்யப்பா தசதீட்சை யிதனாற்சித்தி
ஓகோகோ உபதேசித வுறுதிகேளே. (15)

கேளப்பா பாஷைபதி னெட்டேகண்டால்
கெணிதமென்ற பரப்பிரம ஞானஞ்சித்தி
நாளப்பா வெகுநாளுஞ் செல்லாதப்பா
நயனமென்ற மனக்கண்ணு மப்போதோற்றும்
சோளப்பா வெகுசூட்சம் ஓட்டம்பார்த்தோர்
சொன்னதெல்லாம் அமுதமென்ற வாக்கதாகும்
ஆளப்பா யென்னையடுத்த பிள்ளாய்நீயும்
அப்பனே ஓட்டத்தி னறிவதாமே. (16)

அறிவான கண்ணோட்டம் பாஷைசொன்னோம்
அருளான பதினெண்பேர் மறைத்தசூட்சம்
வறிவான தோல்நரம்பு யிருகிப்போச்சு
மகத்தான முப்பினுட அமுதங்கேளு
கறுவான காவியந்தான் குருவாமுன்னூல்
கருணைதந்தா ரகத்தீசர் கண்டோம்நாமும்
மறுவான முப்பமுத மதீதபாஷை
மகத்தான சனியின்வா கனங்காண்பாயே; (17)

காணப்பா கருங்காகம் விடையறிந்து
கன்னிமுட்டை யிடுங்காலங் கண்டுநீயும்
வேணப்பா யிரண்டுஅண்டங் கொண்டுநீயும்
வேதாந்த பாஷையெல்லாம் விளங்கத்தானே
நாணப்பா பீங்கானி லுடைத்துவிந்தை
நளினமதாய் வெவ்வேறே நாதம்வாங்கி
கோணப்பா வாறுது கோழியண்டம்
குருவாகு மதிலேபதி னாறுவாங்கே. (18)

குருவான ததனோடு பதினெட்டாச்சு
கூறினோம் முன்சொன்ன அண்டத்தோடே
சருவான அண்டத்தை யுடைத்துநீயும்
சமமான பீங்கானில் விந்தையூற்றி
நருவான காகவிந்தில் விந்தைச்சேர்த்து
நாதாந்த நாதமதில் நாதஞ்சேர்த்து
அருவான முன்னண்ட மிரண்டோடுந்தான்
அப்பனே சவ்வெடுத்து ஆடக்கேளே. (19)

ஆடக்கேள் பரிபாஷை யிந்நூல்சூட்சம்
ஆடினால் வெகுகோடி முறைகளாகும்
நாடக்கே ளண்டமெல்லாங் கிளியாய்க்கட்டி
நாதவிந்தி னூறவைத்து கிளியேகொண்டு
தேடக்கேள் பூநீரு கொண்டுநீயும்
திருவான சட்டிதனி லந்நீர்விட்டு
வாடக்கேள் கலக்கியதை யிருத்துக்கொண்டு
மகத்தான கிளியதனை யதனிற்போடே. (20)

போட்டதனை யெடுத்திடுவா யிரண்டுநாழி
புகழாகச் சென்றதென்றால் கிளியவிழ்த்து
நாட்டதனைக் கல்வத்தி லிட்டுநீயும்
நலமான நாதவிந்தால் ஜாமமாட்டி
ஆட்டதனை வழித்துபில்லை வனுவாய்ச்செய்து
அப்பனே ரவிதனிலே ஜாமங்காய்ந்தால்
வாட்டதனை யெடுத்துவிந்தால் யேழுசீலை
வளமாகச் செய்துரவி முகத்தில்வையே. (21)

வையப்பா சாமஞ்சென் றெடுத்துநீயும்
மண்ணகலில் வைத்துமே லகலுமூடி
ஐயப்பா மண்சீலை நாலுஞ்செய்து
அழகான ரவிதனிலே காயவைத்து
மெய்யப்பா யெடுத்ததனைத் துருத்திகொண்டு
வெள்வேலங் கரியதனாற் சாமஞ்சாடு
மையப்பா அண்டசுண்ணம் பூக்கும்பாரு
மகத்தான அகலதனை யெடுத்துக்கொள்ளே. (22)

கொள்ளடா யென்மகனே அய்யாகேளு
கூறினேம் சீலையெல்லாந் தட்டிப்போட்டு
அள்ளடா பில்லையதின் சீலைவாங்கி
அப்பனே சீஷாவிற் பதனம்பண்ணு
விள்ளடா அண்டசுண்ண மிருபலந்தான்
மேலான உடற்சுண்ண மிருபலந்தான்
மெள்ளடா மூந்நூற்றின் முப்பூச்சுண்ணம்
மூதண்ட மாகவிரு பலந்தான்வாங்கே. (23)

வாங்கடா மூன்றுசுண்ணம் வலுவாய்க்கொண்டு
மகத்தான முன்சொன்ன விந்திற்போட்டு
ஞாங்கடா ரவிதனிலே பீங்கான்கொண்டு
நாதாந்த விந்தெடுத்துக் காயவைத்தால்
மாங்கடா மதியமுத மிரங்கும்பாரு
மகத்தான அவ்வமுதம் சீஷாதன்னில்
யேங்கடா யெடுத்துவிட்டுப் பூசைசெய்து
என்மகனே கண்ணூட்டம் பார்த்திடீரே. (24)

பாரப்பா கண்ணூட்டம் பார்க்கும்நாளிற்
பலஞ்செயநீர் மண்டலமே கொண்டாயானால்
காரப்பா கண்ணூட்டஞ் சித்தியாச்சு
கருவான தேகம்வச்ர காயமாச்சு
மாரப்பா சித்தரெல்லாங் கூட்டமிட்டு
மகத்தான பாஷைபதி னெட்டின்பாகம்
ஆரப்பா அனைவோருங் கண்டுதேற
அருளினு ரிந்நூலைக் குருவென்றோரே. (25)

என்றான பாஷையப்பா யிந்நூல்சூட்சம்
இயம்பினேன் புலத்தீச ரனுக்ரகத்தால்
அன்றான பாஷைபதி னெட்டேசொன்னோர்
அண்டரண்ட புவனமெல்லா மாண்டோர்மைந்தா
ஊன்றான புத்தியினு லிந்நூல்காணு
ஓகோகோ கண்டாக்கால் மோட்சமெய்தும்
பன்றான பாஷைபதி னெட்டேசொன்னோம்
பதினெண்பேர் மெய்க்கவிந்த நூல்சொன்னோமே. (26)

சொன்னோமே இம்முறையை முடித்துக்கொண்டு
சூட்சமதாய்க் கண்ணூட்டம் பார்த்தாயானால்
அன்னோகோ டாகோடி அளவிறந்த
அதீதமாஞ் சதாகோடி காலம்வாழ்வாய்
முன்னோமே மோட்சகெதி யெய்துமெய்தும்
மூதண்ட. சாயுஜ்ய பதத்தில்வாழ்வார்
நன்னோமே ராமனப்பா யிந்நூல்பாடி
நவகோடா கோடிவரை வாழ்ந்தோம்முற்றே. (27)

இராமதேவர் பரிபாஷை விளக்கம் உஎ,

முற்றிற்று.



உ

குருவே துணை.

அறுபத்திமூன்றாவது:

இராமதேவர் திருவாய் மலர்ந்தருளிய

# வயித்திய சூஸ்திரம் அரு.



ஆதியந்த மேநிறைந்த சோதிபாதம்
அகண்டபரி பூரணத்தி லறிவுகூடிப்
பாதியாய் முப்பொருளும் மூன்றுமொன்றாய்ப்
பரவெளியாய் நின்றபரா பரையின்பாதம்
நீதியாய் வாரணத்தின் முகவன்பாதம்
நிறைந்தமலர் வாணிகுரு கந்தன்பாதம்
சோதியாய் நாதாக்கள் பாதம்போற்றிச்
சொல்லுவேன் சூத்திரத்தைச் சொல்லுவேனே.

ஆதியிலே அமைத்தவிதி யெழுத்தைக்காண
அருளான நந்திபத மன்பாய்க்கொண்டு
சோதியென மின்றிலங்கும் நாதரூபி
சுருதியுள்ள வாலைமனோ மணியைப்போற்றி
நீதியுடன் சஞ்சார சமாதிசெய்து
நின்றனடா ஆதியந்த நிலைக்கவேதான்
வாதியென வந்தோர்க்குக் குருவாய்நின்றால்
வசனித்தே னெண்பதுமே லொன்றுமாச்சே. (1)

ஒன்றாகி ரெண்டாகி ஒன்றும்ரெண்டும்
உடன்சேர்ந்த கருவறியா ருலகவாதி
நன்றாகச் சொல்லுகிறேன் கேளுமக்காள்
நாலும்ரெண்டு மூண்டான கருவைப்பாரு
பண்டான சேதிபரப் பிரமமாச்சு
பார்க்கவென் றலதின்பெருமை பகரொண்ணாது
கண்டாருஞ் சொல்லார்கள் நாவோயில்லை
கடுங்கார மானதொரு கல்லைவாங்கே. (2)

வாங்கிநடுக் கல்லிமெள்ள வுடைத்துக்கொண்டு
 வாய்குவிந்த கரகமதி லிட்டுமைந்தா
பாங்குபெறச் சுத்தசல மதனில்வார்த்துப்
 பருசுமுடைய பூரணமோர் பலத்தைப்போடத்
தீங்கில்லா ரவிபீசநு கூடச்சேர்த்துச்
 சிவசிவா அடுப்பேத்தித் தீயைமூட்டி
ஓங்கியது கொதிகிழும்பி வத்திஞக்கால்
 உப்பதுவும் ஊறலத்துச் சுத்தியாச்சே. (3)

சுத்திசெய்த உப்பினிடை நாதங்கூட்டித்
 துடியான யிடைக்கு அரை விந்துசேர்த்துப்
பத்தியுடன் சாரநீர் விட்டுஆட்டிப்
 பாங்கான தேசிநீர் விட்டுஆட்டி
வெத்தியுட னிருசாமம் நன்றாயாட்டி
 வில்லைபோற் பிடித்ததனை வெயிலில்வைத்து
முத்திபெறக் காயவைப்பாய் ரவியிற்றானும்
 மூர்க்கமுடன் காய்ந்தபின்பு முறையைக்கேளே. (4)

கேளப்பா காய்ந்ததொரு வட்டுதன்னைக்
 கிருபையுடன் காரோட்டில் வைத்துமூடி
வாழப்பா மண்சீலை யேழுசெய்து
 வகையுடனே நூறெருவிற் புடத்தைப்போடு
நாளப்பா மூன்றுநாட் சென்றபின்பு
 நல்லகல்லும் பொருமியது சுண்ணமாகும்
தேளப்பா கொட்டுவது போலேமக்காள்
 சென்றசரக் கத்தனையும் மாண்டுபோமால். (5)

மாளாமலி ருப்பதற்குக் கற்பங்கேளு
 மணிமந்த்ர அவுஷதமே மகத்தாம்விந்தை
தேளான பூரணமே தெய்வமல்லாற்
 செகத்திலே வேறுமொரு தெய்வமுண்டோ
கோளான தொன்றுமில்லை நாதவிந்து
 குறியறிந்து கொண்டவனே சீவன்முத்தன்
யாளான மதியமுத நீரைவாங்கிப்
 பாலகனே கொண்டுவிட்டாற் பயமும்போச்சே. (6)

போச்சென்று விடுகாதே தினமுமகொண்டு
பூரணத்தைப் பத்திமன தறிவில்வில்லு
தாச்சியொன்று மில்லையடா நமன்தானேது
தாரணியில் மெய்ஞ்ஞானக் குருவுமாவாய்
மாச்சல்செய்யும் மனிதருடன் வாதாடாதே
வஞ்சருட னிணங்காதே வலுப்பேசாதே
காச்சிமனக் கசடகற்றிக் கருணைகூர்ந்து
கண்ணொளிக்குள் விண்ணொளியைக் கருதிப்பாரே. (7)

பாரப்பா யின்னமொரு கருவைக்கேளு
பராபரத்தா யெந்தனக்குப் பகர்ந்தவித்தை
ஆரப்பா அறிவார்கள காரசாரம்
ஆதியந்த மென்றபொரு ளார்தான்காண்பார்
வீரப்பா செய்யாமல் ரெண்டுமொன்றாய்
விரவிநல்ல ரவியில்வைக்கக் கட்டிப்போகும்
சேரப்பா மதிதனிலே பத்துக்கொன்று
சேர்க்கவே வயதுபனி ரண்டுமாத்தே. (8)

மாத்தமென்ற கருவிலொரு விபரங்கேளு
மனோன்மணியா ளெந்தனக்கு வகுத்தவித்தை
மாத்துரவ தில்லாத மங்கைநாதம்
வாங்கியதி லுனதுவிந்து பாதிசேர்த்து
சாத்திகமுற் குருவில்பண விடைதான்போடு
சமத்தாக ரவிதனிலே வைத்துப்பாரு
பூத்தமலர் பொங்கியது குருவாய்நிற்கும்
புனுகுமதி னுடன்சேர்த்துத் திலதம்போடே. (9)

போட்டவுட னதுருவை யொருவர்காணார்
புகழாகப் பார்ப்போர்க்குத் தீபம்போலாம்
நாட்டமுட னிக்கருவை யுலகத்தோர்க் கு
நவிலாதே குற்றம்வரும் நாவடாதே
வாட்டமிலா மலரொளியில் மனதைவைத்து
மகத்தான பூரணத்தை மருவிப்பார்த்துத்
தேட்டமிலா நற்கனியைத் தின்றாயானால்
சிவசிவா கயிலாச தேகமாமே. (10)

ஆமப்பா யின்னமொரு கருவைக்கேளு
ஆச்சரியம் ஆச்சரியம் மலைபொன்னாகும்
காமப்பால் கானற்பால் ரெண்டுங்கூட்டிக்
கருவாமுற் குருவில்பண விடைதான்போடு
வாமப்பால் திரையகற்றிச் சுத்தநீராம்
மக்களே அச்சலத்தைப் பதனம்பண்ணு
நாமப்பா சொல்லுகிறோம் வீரம்பூரம்
நன்றாகப் பொடித்திடவே செயநீராச்சே. (11)

நீரான செயநீரின் முறையைக்கேளு
நீலநிற மானதொரு நாகந்தன்னைச்
சீராக வுருக்கியதிற் சாய்த்தாயானால்
சீரடங்கிக் கட்டுமடா வெள்ளிபோலாம்
பாரான பரிதனிலே நாலுக்கொன்று
பாச்சியதை வெள்ளியிலே பத்துக்கொன்று
நேராகக் கொடுத்திடவே பத்துமாத்தாய்
நிலைக்குமடா புடந்தனிலே நினைவாய்க்காணே. (12)

காணவே யின்னமொரு கருவைக்கேளு
கருணையுள்ள முப்பூவில் விராகனொன்று
பேணவே வீரமொடு பூரந்தானும்
பிசகாதே அவ்விடைதா னெடுத்துக்கொண்டு
தோணவே வாய்நீரால் மத்தித்தேதான்
துருசதற்குக் கவசமது தோணப்போட்டு
பூணவே அதின்மேலே மண்தான்செய்து
போடுவாய் காடையென்ற புடத்திற்றானே. (13)

தானென்ற புடமாற்றி யெடுத்துப்பாரு
தன்மையுள்ள சுண்ணமதாய் நீறிநிற்கும்
ஊனென்ற சுண்ணமதில் வேதைகோடி
ஒருவருக்கு மிச்சுண்ண முரைக்கவேண்டாம்
பானென்ற ரசந்தன்னைப் பழியாய்க்கொல்லும்
பசுமையுள்ள செம்புதனைப் பற்பமாக்கும்
ஏனென்று பேசுமடா வாதத்துக்கு
இன்பமுள்ள துருசினுட சுண்ணந்தானே. (14)

தானென்ற தின்னமொரு கருவைக்கேளு
தாரணியில் விள்ளாதே தனதாம்வித்தை
ஊனென்ற காயமடா ஐங்காயந்தான்
ஊறுகிற பருவமதி லமைப்பாளுக்கால்
கோனென்ற குருவருளா லெடுத்துவந்து
கூர்மையுள்ள வாளரத்தாற் கண்டமாக்கிப்
பானென்ற பாண்டமதில் விட்டுநன்றாய்ப்
பாச்சடா காரமுடன் சாரமாமே. (15)

சாரமென்ற பாண்டமதை அடுப்பிலேற்றிச்
சருகுகம்பு விறகதனு லெரித்துக்கிண்டி
பாரமென்றே யெண்ணியதைப் பதமாய்ப்பாரு
பக்குவங்கள் தப்பிவிட்டாற் பழியோபாவம்
தீரமாய்க் கிண்டிவரில் நீர்தான்வற்றித்
திரண்டுவருங் கடுகின்மே லெண்ணெய்தானும்
காரமென்ற யெண்ணெய்தனை வடித்துமெள்ளக்
காசியென்ற குப்பிதனி லடைத்திடாயே. (16)

அடைத்ததொரு குப்பிதனைப் பதனம்பண்ணு
அருள்பெருகுங் கடுகதுவும் பதனம்பண்ணு
படைத்ததொரு அமுதசஞ் சீவியென்று
பராபரனை யனுதினமும் பணிந்துபோற்றிச்
செடத்தினுட செயலறிந்து அமுதமுண்ணு
சிவசிவா மாலதனிற் கடுகுகொள்ளு
மடத்தனமாய்த் திரியாதே அருளைநோக்கு
வாலைமனோ மணியாளை வணங்கிப்பாரே. (17)

பாரப்பா யின்னமொரு கருவைக்கேளு
பதனமுள்ள கடுகிலொரு கழஞ்சுவாங்கிச்
சேரப்பா முப்பூவில் விராகனொன்று
சேர்த்தங்கே மத்திக்க வெண்ணெய்போலாம்
வீரப்பா செய்யாமல் வீரம்வாங்கி
வெண்ணெய்க்குட் பதித்துமேல் மண்தான்செய்து
காரப்பா ரவிதனிலே காயவைத்துக்
கருக்குழாலே விளக்கொளியில் வாட்டுவாயே. (18)

வாட்டிமெள்ள உடைத்திடவே வீராசன்
மனதடங்கி யுருகியெல்லாம் மெழுகாய்நிற்கும்
தாட்டிகமாய் மெழுகதனைப் பதனம்பண்ணித்
தாயான ரவிதனிலே பத்துக்கொன்று
நீட்டிடவே ரவிதானுங் கட்டிப்போகும்
நிசமான குருவாகும் நீதான்பாரு
மாட்டுவாய் மதிதனிலே பத்துக்கொன்று
மைந்தனே பதினாறு மாத்துக்காணே. (19)

காணவே யின்னமொரு கருவைக்கேளு
கருவான முப்பூவில் விராகனொன்று
பேணவே தானெடுத்துத் தயிலஞ்சேர்த்துப்
பிரளவே மத்தித்து ரவியிற்பூசி
தோணவே ஓட்டில்வைத்து ஓடுமூடித்
தூண்டாத மணிவிளக்கைத் தொழுதுபோற்றிப்
பூணவே பத்தெருவிற் புடந்தான்போடு
பூரணத்தின் கிருபையினாற் பற்பமாச்சே. (20)

பற்பமதிற் பணவிடைதா னெடுத்துக்கொண்டு
பாங்கான தயிலமதிற் குழைத்துநல்ல
கற்பமெனத் தியானித்துக் கொண்டாயானால்
காயமதில் நரைதிரைகள் காணாதோடும்
அற்பமென்று நினையாதே அழிந்துபோவாய்
அழியாம லிந்நூலை அன்பாய்ப்பார்த்து
உற்பனமாய்ப் பூரணமே தெய்வமென்று
உண்மையுடன் பணிந்திடவே உறுதியாமே. (21)

உறுதியுள்ள அஞ்சனந்தா னென்றுகேளு
உண்மையுள்ள கருவெடுத்துக் கருக்கிக்கொண்டு
அருமையுள்ள கல்வத்தி லிட்டுமக்காள்
ஆனகருத் தயிலமதை விட்டுஆட்டிக்
கருமையென வழித்துமே சிமிழில்வைத்துக்
காரணியாம் பூரணத்தைக் கருத்தில்வைத்துப்
பருதிமதி சுடரொளியைப் பற்றிக்கொண்டு
பரமகுரு மையெனவே திலதம்போடே. (22)

போட்டவுடன் ரேசகபூ ரகமும்பண்ணிப்
புனிதமுடன் கும்பகத்தில் நின்றாயானால்
நாட்டரச ருன்னேவல் கேட்பாரப்பா
நான்முகன்மா லிந்திரனும் வசியமாகும்
தாட்டிகமாய் அஷ்டசித்தி யெட்டுமாடும்
தரணிதனி லுள்ளபொருள் தானேதோன்றும்
பாட்டதிகஞ் சொல்லவில்லை யெண்பத்தொன்றில்
பட்சணியின் அஷ்டாங்கம் பணிந்திடாயே. (23)

பணிந்திடவே யின்னமொரு கருவைக்கேளு
பாங்கான பாஷாணக் கட்டிவாங்கிக்
கனிந்ததொரு செயநீராற் சுத்திபண்ணிக்
கருகாமற் றனெடுத்து வைத்துக்கொண்டு
துணிந்தமலர் முப்பூவில் விராகனொன்று
சுகமான நாதநீ ரதுவிட்டாட்டி
அணிந்தமலர் வெள்ளைக்குக் கவசஞ்செய்து
அப்பனே பத்தெருவிற் புடந்தான்போடே. (24)

போட்டதொரு பாஷாணக் கட்டிதானும்
புகழுடைய பூரணத்தாற் கட்டிப்போச்சு
நாட்டமுடன் வெள்ளிய முருகும்போது
நாட்டுவாய் பாஷாணம் பத்துக்கொன்று
தாட்டிகமாய்க் கொடுத்துடனே வாங்கிக்கொண்டு
தயங்கிமிகக் கதறியது மாண்டுபோகும்
வாட்டமில்லாப் பூமலர்தான் மாண்டுதானால்
மக்களே அதினுடைய வளமைகேளே. (25)

வளமையென்ன மதிதனிலே நாலுக்கொன்று
மாட்டியதைத் தானெடுத்து மைந்தாகேளு
இளமையென்ன ரவியெட்டு மதிதான்ரெண்டு
இயல்பாக ரெண்டுமொன்றா யுருக்கிக்கொண்டு
தலைமையென்ன பூரசத்தை யொன்றுதாக்குத்
தப்பாது வெள்ளிவித்தை பத்துக்கொன்று
கலைமகளாம் பூரணத்தின் காட்சியாலே
கைகண்ட சித்தியடா கருதிப்பாரே. (26)

பாரப்பா பின்னுமொரு கருவைக்கேளு
        பாரிலுள்ள மனிதருக்கு வருநோய்க்கெல்லாம்
சீரப்பா திரிகடுகைத் தூளாய்ச்செய்து
        திறமான முப்பூவைப் பத்துக்கொன்று
கூரப்பா ரெண்டையுமே யொன்றாய்க்கூட்டிக்
        கூர்மையுள்ள மூலிப்பாலுந் தேனுங்கூட்டிச்
சாரப்பா லேகியத்தைத் தின்றாயானால்
        தப்பாமற் றீருகிற நோயைக்கேளே. (27)

கேளப்பா வாதமொடு பித்தந்தானும்
        கெடியான குன்மமொடு சயரோகங்கள்
வாளப்பா மகோதரங்கள் குட்டரோகம்
        வாங்காத பிணிசங்கள் மண்டைக்குத்து
நாளப்பா குளிர்சுரமும் விஷபாகங்கள்
        நழுக்கான கிராணிமுதல் நாடாதோடும்
பாளப்பா மகியாறதப் பாலைக்கொண்டு
        பசுமையுள்ள பூரணத்தைப் பணிந்திடாயே. (28)

பணிந்திடவே பூரணலே கியத்தைச்சொல்வேன்
        பராபரத்தாய் எந்தனக்குப் பகர்ந்தவித்தை
கனிந்ததொரு சாதிக்காய் சாதிப்பத்திரி
        கருவாயின் பட்டையுடன் கிராம்புயேலம்
துணிந்ததொரு திரிகடுகு ஒன்றாய்ச்சேர்த்துத்
        துகைபார்க்க யெட்டாச்சு ரெண்டைக்கேளு
அணிந்ததொரு கோரக்கர் மூலியோடு
        அபினிபுடன் ரெண்டாச்சு சேரப்பத்தே. (29)

பத்தான சரக்கெலாமோ ரிடையாய்க்கொண்டு
        பதமாக வறுத்துச்சூ ரணமேசெய்து
முத்தான மூலிகைதான் சரக்கில்ரெட்டி
        முன்போலே சூரணத்தைச் செய்துகொண்டு
வத்தாமல் ரெண்டையுந்தா னொன்றாய்ச்சேர்த்து
        வளமையுள்ள வெல்லமதில் நாலுக்கொன்று
சித்தமுடன் தேன்நெய்யுங் கூடச்சேர்த்துத்
        திரளவே முத்தித்து உருட்டிக்கொள்ளே. (30)

கொள்ளப்பா பூரணமே லெத்தைத்தாலும்
கொள்வதற்கு விபரமதாய்க் கூறக்கேளு
அள்ளாதுதா னகற்றியே ஏகமாகி
அருளான பூரணத்தை அன்பில்வைத்து
தெள்ளியமே லியத்தைபண விடைதான்கொண்டு
தெளிவான பூரணத்தை நயக்கப்பார்த்து
வள்ளலெனு மச்சோதி பாதந்தன்னை
வணங்குவதால் தேகசித்தி வருகுந்தானே. (31)

தானென்ற தத்துவத்தை யடக்கிமைந்தா
தன்மையுள்ள பூரணத்தைத் தான்தானென்று
வேறென்றும் பேசாதே வாதாடாதே
வெறும்பிரமக் காய்த் திரிகின்ற வுத்தர்கோடி
தோணுமப் வேடங்கள் தரித்துக்கொண்டு
தொல்லுலகில் மாவிடரை வணங்கச்சொல்லி
காணுமே கருத்தறியா மடையர்மெத்த
கண்கெட்ட மாடுகளைக் கருதிடாதே. (32)

கருத்தறியா மாவிடர்கள் மெத்தவுண்டு
கண்பயிலா தீராத கழுதைமாடு
உருத்தரித்த ஒப்பனையைக் காணமாட்டார்
உவமையில்லாச் சத்திசிவம் ஒடுக்கங்காணார்
இருக்கமில்லா வேடங்கள் பலவும்பூண்டு
திருவான பூரணத்தைச் சீசீயென்று
வெறுத்துயிகக் கருத்தழித்த மடையர்மெத்த
வீணருடன் பேசாதே விண்ணிலைப்பாரே. (33)

விண்ணான கண்ணொளிகை லாசமாகும்
மேலான பேரொளியே பரமாய்நிற்கும்
கண்ணான புண்ணறிந்து கனலைத்தாண்டிக்
கருவான ஆறுதலங் கடந்தப்பாலே
முன்னான பதியறிந்து முதலைக்கண்டு
முதலான மதியமுதப் பாலைக்கொண்டு
அண்ணாக்கு மூக்குடனே அமர்ந்தநாதன்
ஆதியந்த நிலைமைபெற்ற அருபரந்தானே. (31)

தானேதான் தானவனாய்த் தான்தானாகிச்
சங்கற்ப விகற்பமெல்லாந் தவிர்த்துநல்ல
ஊனேதான் தானவனாயுட்கொண்டேதான்
உபநிடதப் பொருளறிந்தே உகந்துநின்று
வினேதான் திரியாதே வீண்பேசாதே
விண்ணொளிக்குட் கண்ணொளியை மேவிப்பார்த்து
தேனான மதியமுதம் கொண்டால்மைந்தா
சிவசிவா கைலாசத் தேகமாமே. (35)

தேகமென்ற அகமறியார் சண்டிமாண்பர்
சிவவேடந் தனையறியார் இருட்டுமாண்பர்
ஆகமென்ற அறுசுவையை யறியாமாண்பர்
அறிந்துதத் தெரியாத அசட்டுமாண்பர்
பாகமென்ற பூரணத்தைப் பணியாமாண்பர்
பாலறியாப் பால்பொசித்துப் பகைக்குமாண்பர்
வாகுடனே சமயமதம் பேசுமாண்பர்
வஞ்சருடன் சொல்லாதே வாசிபாரே. (36)

வாசிதனை யறியாம லுலகத்தோர்கள்
மாண்டார்கள் மூச்சடக்கி மதியைப்பார்த்து
நாசிதனில் நின்றிலங்கும் நாதரூபி
நலமான பூரணமாம் வாசிரூபி
தேசியென நின்றபர தேசியான
திகம்பரமாம் பூரணத்தைத் தினமும்நோக்கிப்
பாசிமனக் கசடகற்றி நின்றால்மைந்தா
பதியறிந்த வாசிதனைப் பணியலாமே. (37)

பணியகுரு மதியறிந்தாற் பலிக்குஞ்சித்தி
பகுத்தறிவு நின்றமதி பதியைநோக்கிற்
கனியமுத மதியமுதங் கசிந்துகாணும்
கண்மூக்கு மத்தியிலே கருதிப்பாரு
வணியான அமுதகலை மதியைநோக்கும்
வந்தமதி பருதிதனை வணங்கிக்கொண்டு
மணியான சிரோமணியை வணங்குமக்காள்
வந்தமதி பருதிதனை வணங்கிப்பாரே. (38)

வணங்குவது பூரணத்தை வணங்கவேணும்
மனதறிந்து மந்திரத்தை நிறுத்தவேணும்
இணங்கிவிளை யாடுதற்குத் தலைமைகண்டு
யிருநாடியின் கருவறிந்து யிருத்தவேணும்
சுணங்கீனப்போற் சுழன்றுதிரி யாமல்நீதான்
சொரூபமுள்ள உபநிடதத் துருவங்கண்டு
மணங்கமழும் வாசிமலர் வாசிபார்த்து
மந்திரபஞ் சாட்சரத்தின் மகிமைகாணே. (39)

காணுதற்கு யின்னமொரு கருவைக்கேளு
களிம்பான செம்பினுட சுத்திதன்னைப்
பேணுதற்கு முற்குருவில விராகனொன்று
பெலத்தொரு கருவிட்டு மத்தித்தேதான்
ஊணுதற்குச் செம்புதனிற் றடவிநல்ல
உத்தமனே காடையென்ற புடத்திற்போடு
தோணுதற்குச் செம்பினுட வூறலத்துச்
சுயம்பிரகா சம்மெனவே தோணுந்தானே. (40)

தோணாத பொருளையெல்லா முலகமீதிற்
சொல்லுவையோ வென்றுசொல்லி சித்தர்கூடிக்
காணாமல் ராமனுட பாடல்தன்னைக்
கண்டவர்கள் கற்குகைக்குள் கருத்தாய்மூடிப்
போனார்கள் அப்போது நான்தான்சென்று
புனிதமுடன் வாதாடி நூலைவாங்கித்
தேனான அமுதம்போல் வெளியிற்போட்டேன்
சிவசிவா கண்டவர்க ளடக்கம்பண்ணே. (41)

அடக்கமுடன் நூலெடுத்துக் கருவைப்பார்த்து
அரகரா மனதடங்கி யறிவில்நில்லு
விடக்கெடுத்த நாய்போலே புலம்பினாக்கால்
மேதினியி லுனதுசிரம் வெடித்துப்போகும்
முடக்கமில்லை பூரணியா ளிட்டசாபம்
முறையறிந்து கருவறிந்து முதலைப்போற்றி
நடக்கையிலே வழியறிந்து நடக்கவேணும்
நாடெல்லா முனதுவச மாகும்பாரே. (42)

பாரப்பா யின்னமொரு சேதிகேளு
பலபிணிகள் தீருதற்கு யிந்தநூலைக்
காரப்பா வயித்தியமும் வாதத்தோடும்
கருணைபெறும் யோகமஷ்ட சித்துமாமே
நேரப்பா யிந்நூல்தா னெண்பத்தொன்று
நினைவறிந்து ராமனுட நூலைப்பாரு
சாரப்பா யிந்நூலை வெளிவிடாதே
சற்குருவாம் என்பதுமே லொன்றைப்பாரே. (13)

ஒன்றான பொருளல்லோ நாதமாகும்
உடன்சேர்ந்த கருவல்லோ விந்துவாகும்
மன்றான சேதியிது முப்பூவாகும்
மக்களே இப்பூவிற் சாரஞ்சேரில்
குன்றாத செலமாகும் அச்செலத்திற்
குருவாகத் தருகஅதிற் றோய்த்துத்தோய்த்துச்
சென்றிட ரவிதனிலே காயப்போடு
சிவசிவா பொருமியது சுண்ணம்பாச்சே. (14)

ஆச்சப்பா ரசந்தனிலே சுண்ணம்போட்டு
அருளான செயநீரை விட்டரைத்துப்
பேச்சப்பா ஒன்றுமில்லை வட்டுப்பண்ணி
பெய்மக்கா ளோட்டில்வைத்துச் சீலைசெய்து
காச்சப்பா காடையென்ற புடத்தைப்போடு
கணபதிக்கும் வடுகனுக்கும் பூசைபண்ணு
மூச்சப்பா போகாம லடங்கிநீறும்
மூதண்ட மானதொரு குருவுமாச்சே. (15)

குருவிலொரு பணவிடைதா னெடுத்துக்கொண்டு
கூசாமற் றேனதிலே கொடுத்தாயானால்
தருகாத மேகமொடு பரங்கிக்குட்டம்
தாழ்வான சூலையொடு பவுத்திரங்கள்
மருகுகின்ற குன்மமொடு மூர்ச்சைவாய்வு
மண்டையிடி மேறூனோதல் வயிற்றுக்காந்தல்
இருகிருப்பு நீரழிவு மகோதரங்கள்
கெட்டியாய்க் கண்டவுடன் றோடிப்போமே. (16)

போமேதான் முற்குருவில் விராகனென்று
புகழுடைய ரசபற்பம் விராகனென்று
ஆமேதான் ரெண்டுமொன்றாய்ச் செயநீர்விட்டு
அமத்தியே அரைத்துருட்டிக் கயிறுசேர்த்துத்
தாமேதான் நிழலுலர்த்திப் பதனம்பண்ணு
தனியிஞ்சிச் சாற்றிலிடச் சயரோகங்கள்
நாமேதான் குளிர்சுரங்கள் சன்னிதோஷம்
நாடாம லோடிவிடும் நயந்துபாரே. (47)

நயந்துமிகக் கொண்டாடி ராமன்நூலை
நாட்டுவாய் அஷ்டாங்க முழுதுமாடும்
பயந்துமிக இந்நூலைப் பதனம்பண்ணு
பாரினிலே ஒருவருக்கும் பகரவேண்டாம்
துயர்ந்துமிக அரனுடைய பாதந்தன்னைத்
தொழுதுகொண்டு செய்பவருக் கிந்நூலீவாய்
சயந்தனிலே யீப்புகுந்த வாறுபோலே
தான்திரியுஞ் சண்டாளர் தனக்கீயாதே. (48)

தனதாக யின்னமொரு கருவைக்கேளு
தாயான மனோன்மணியாள் தந்தவித்தை
மனதாகச் சொன்னனடா மகிழ்ந்துகேளு
மங்கையுட நாதமடா வாலைவாலை
செனனமில்லை மரணமில்லை தாயைப்போற்றிச்
செகசோதி யானதொரு காயைவாங்கிக்
குணமாகக் கமலைப்பால் தன்னிற்போட்டுக்
குழறவே நீயெரித்து அவித்திடாயே. (49)

அவித்தபத மென்னவென்றால் கிள்ளிப்பாரு
ஆவெண்ணெய் போலிருந்தா லிரக்கிக்கொண்டு
தவித்துவா டாதேசக் கரைதேனூட்டித்
தயவாகப் பிசைந்துருட்டித் தாயைப்போற்றிச்
செவித்ததொரு மந்திரத்தைத் தியானம்பண்ணி
சிவசிவா பணவிடைதான் கொள்வாயானால்
குவித்ததொரு பிணிகளெல்லாங் குடியேபோகும்
குணமான நவநீதக் குருவுமாமே. (50)

குருவான நவநீதக் கருவைக்கேளாய்
குருவிருக்கும் இடமறிந்து தியானம்பண்ணி
திருவான நவநீதங் கழஞ்சிகொள்வார்
தேகமது பிலத்தாட அழிவேயில்லை
அருவாக அருட்பெருகி அருளைப்போற்றி
அட்டமா சித்தியிலே யாடிப்பின்னும்
கருவான தலமறிந்து கும்பித்தாக்கால்
கர்மவினை நீருமடா கனலிற்றூண்டே. (51)

கனலான கருவறியாக் கழுதைமாண்பர்
காலறிந்து யோகமதைக் கருதிப்பேணார்
குணமான குண்டலியைக் கூர்ந்துபாரார்
கூர்மைதனை யறியாத குருடர்மெத்த
பணமாசை தானிடித்துப் பசப்புமாண்பர்
பாவிபிடஞ் சொல்லாதே நூல்காட்டாதே
தனலான நவநீதப் பொருள்சொல்லாதே
தானவனாய் நீயிருந்து தனித்துப்பாரே. (52)

பாரப்பா யின்னமொரு கருவைக்கேளு
பரமான நவநீதங் கழஞ்சிவாங்கிச்
சேரப்பா வீரனுக்குக் கவசம்பண்ணித்
தீபமதில் வாட்டயிலே மெழுகாய்ப்போகும்
கூரப்பா ரவிதனிலே நாலுக்கொன்று
கொடுக்கையிலே வாங்கியது குருவாய்நிற்கும்
ஆரப்பா மதிதனிலே பத்துக்கொன்று
அணைத்திடவே ஆறேழு மாத்துமாச்சே. (53)

ஆச்சப்பா யின்னமொரு கருவைக்கேளு
அருளான நவநீதங் கழஞ்சிவாங்கிப்
பேச்சப்பா ஒன்றுமில்லை கபாலவோட்டில்
பேணியே தடவிநல்ல தீபமேற்றிக்
காச்சப்பா தீபமதிற் கபாலவோட்டிற்
கதிர்போலே மைவளருங் கருத்தாய்வாங்கு
நீச்சப்பா சரியிடைதான் வெண்ணெய்சேர்த்து
நினைவாக மத்தித்துச் சிமிழில்வையே. (54)

வைத்தமொரு மையெடுத்துத் தியானஞ்செய்து
வரிசையுடன் ரேசகபூ ரகமும்பண்ணி
முத்திபெறக் கும்பகத்தில் நின்றாயானால்
மோசமில்லை அட்டசித்து முழுதுமாடும்
வெத்திபெற வைத்ததன மெல்லாஞ்சேரும்
வேதாந்தச் சித்துமிக விளைவுண்டாகும்
பத்திமிக வுண்டாகும் பயமோயில்லை
பரமகுரு மையெனவே பணிந்திடாயே. (55)

பணிந்துமிக விந்நூலைப் பதனம்பண்ணு
பார்தனிலே மூடருடன் பகரவேண்டாம்
கனிந்துமிகக் கசிந்துருகிக் கனலைத்தூண்டிக்
கண்மூக்கு மத்தியிலே கருதிப்பார்த்துச்
சினந்துவரும் பகைஞருட பேரைச்சொல்லிச்
சீக்கிரத்தில் ஓதிடவே நசித்துப்போவான்
தனித்திருந்து யிக்கருவைத் தானேதானய்ச்
சற்குருவைத்தியானித்துத் தனதாய்நில்லே. (56)

தனதாக ராமனுட வயித்யந்தன்னைத்
தாரணியில் விள்ளாதே தனதாம்வித்தை
மனதாக யின்னமொரு கருவைச்சொல்வேன்
மானிலத்திற் சகலபிணி மாண்டுபோக
இனமான அண்டமென்ற கல்லைவாங்கி
இடுசமனய்ப் பிண்டமென்ற நாதந்தானும்
குணமான ரவிபீசம் யெட்டிலொன்று
கூட்டியே விரவிநன்றாய்க் கூறக்கேளே. (57)

கேளப்பா வாய்குவிந்த கலசந்தன்னிற்
கெட்டியா யிட்டுமே லோடுமூடி
ஆளப்பா தமரிட்டுச் சீலைசெய்தே
ஆனகுளித் தயிலமதை அன்பாய்வாங்கிச்
சூளப்பா குப்பிதனிற் பதனம்பண்ணிச்
சுந்தரஞ்சேர் சற்குருவைத் தொழுதுபோற்றி
வாளப்பா யிக்கருவை வெளிவிடாதே
மணிமந்திர அவுஷதமாம் வணங்கிப்பாரே. (58)

பாரப்பா யித்தயிலம் பதனம்பண்ணிப்
பார்தனிலே மனிதருக்கு வருநோய்க்கெல்லாம்
காரப்பா பணவிடைதான் காவிறத்தக்
கலைகாணு தோடிவிடு மின்னங்கேளு
சீரப்பா குளிர்சுரங்கள் தோஷம்போகும்
சிவசிவா மகோதரங்கள் குட்டந்தூலே
நேரப்பா வோடிவிடுந் தயிலப்போக்கு
நிசஞ்சொன்னேன் குருவருளா னேர்ந்துகூடே. (59)

கூடவே யின்னமொரு கருவைக்கேளு
குவிந்ததொரு முட்டையிலே அஞ்சாந்திங்கள்
காடவே யினமறிந்து கருவைவாங்கி
நாமொன்று சொல்லுகிறோம் நன்றாய்க்கேளு
வாடவே வேண்டாங்காண் ரவிபீசத்தில்
மாட்டுவாய் கழஞ்சியிடை வெல்லங்கூட்டிப்
போடவே மூன்றுநாள் காய்வெதும்பிப்
பூமியிலே விதனமன்றி வருத்தானே. (60)

தானென்ற காரியக் கட்டிவாங்கிச்
சாற்றுவாய் முப்பூவைக் கீழ்மேலிட்டுக்
கோனென்ற பீங்கானில் வைத்துநல்ல
கொடிக்கள்ளிப் பாலிலொரு சேரைவார்த்துப்
பானென்ற ரவிமுகத்தில் வைத்துப்பார்க்கப்
படபடத்து உருகியது பசுமையாகி
மானென்ற மெழுகுபத மாகிநிற்கும்
மக்களே இம்மெழுகைப் பதனம்பண்ணே. (61)

பண்ணியதோ ரிம்மெழுகை யுலகத்தோர்க்குப்
பகராதே யிந்நூலே வெளிவிடாதே
உண்ணியதோர் பொருள்கோடி குவித்திட்டாலும்
ஒருவருக்கும் ராமனுட நூலீயாதே
தண்ணியமா யுன்னிடத்திற் றெண்டபெண்ணிச்
சதாகாலம் உனதுபதஞ் சார்ந்தோர்க்கெல்லாம்
புண்ணியமா யிதனிலொரு தொழிலைச்சொல்லு
புத்தியுடன் குருபதத்தைப் பூண்டபோரே. (62)

பூண்டுகொண்டு பூரணமே தெய்வமென்று
புத்தியுடன் மனதறிவைப் பூசைபண்ணி
ஆண்டுகொண்டு அவன்பதத்தைப் பணிந்துகொண்டால்
அரகரா சிவயோக மதுதானுண்மை
வேண்டுவது பூரணத்தை வேண்டவேணும்
வேதாந்தப் பதியில்மனம் நிறுத்தவேணும்
தூண்டாத மணிவிளக்கைத் தூண்டவேணும்
தூண்டுவது பூரணத்தால் தூண்டிப்பாரே. (63)

பாரப்பா சத்தியுட பூசைசொன்னேன்
பரமகுரு ராமருட வாக்கியத்தால்
சாரப்பா ரேசகபூ ரகமும்பண்ணிச்
சமத்தாகக் கும்பகத்திற் சார்ந்தாயானால்
நேரப்பா குருவினுட பதியைப்பாரு
நேர்ந்துகொண்டு அப்பதியில் நினைவைத்தாக்கு
கூரப்பா ரெகுராம தேவனென்று
கொண்டாடி யிந்நூலைக் கூர்ந்துபாரே. (64)

கூர்ந்துபார் கொங்கணவர் நூலைப்பாரு
கொண்டதிலே பட்சணியின் கருவைப்பாரு
தேர்ந்துகொண்டு யெந்தனுட நூலைப்பாரு
தெரிந்ததிலே ஐம்பதும்ப் பதும்பாரு
சாந்தமாய்ப் பொதிகைமுனி சாஸ்திரத்தில்
தன்மையுள்ள பட்சணியைச் சார்ந்துபாரு
நேர்ந்துபா ரெந்தனுட நூலிலேதான்
நிச்சயமாய் வயித்தியத்தை நிறுத்தினேனே. (65)

நிறுத்தியொரு கருமையைச் சொல்லக்கேளு
நேரான தாமரையின் கொடியைவாங்கிக்
கறுத்ததொரு காராமை யோட்டில்வைத்துக்
கனலடுப்பிற் றுனேத்திக் கருக்கிக்கொண்டு
பெறுத்ததொரு ஐங்கோலத் தயிலந்தன்னிற்
பிரளவே அரைத்துமொரு சிமிழில்வைத்து
நிறுத்தியே பூரணத்தைப் பூசித்தேதான்
நேரான குருபதத்தை நினைவிற்காணே. (66)

காணவே சிமிழெடுத்துக் காத்திலேவைத்துக்
சனையான பூரணங்கலந்து தியானஞ்செய்து
பேணவே ரேசகபூ ரகமும்பண்ணிப்
பெலமாகக் கும்பித்துத் திலகம்போடு
தோணவே கோடாளி தன்னைப்பாரு
தொடங்கி னி யொடிவிடுஞ் சொன்னேனப்பா
பேணவே மையெடுத்து நாவிற்றடித்தப்
பொல்லாத தோஷமொடு காசம்போமே. (67)

காசமொடு விஷபாகங் கண்டமாலை
கபாலமிடி சூலைமுதற் சன்னிப்புத்து
பேசவொண்ணா நெஞ்சடைப்பு மூர்ச்சைவாய்வு
பின்மூலம் முன்மூலம் பித்தரோகம்
பூசலது செய்கின்ற குன்மக்கோடி
போகாத நோய்களெல்லாம் போவதற்கு
வாசமுள்ள மையெடுத்து நாவிற்றடித்த
வஞ்சகமாய்க் கண்ணிலிட வாங்கிப்போமே. (68)

போமப்பா யின்னமொரு கருவைக்கேளு
பூவான பூரசத்தின் பற்பஞ்சொல்வேன்
நாமப்பா ஐங்கோலத் தயிலந்தன்னில்
நாலுதரம் நீயுருக்கிச் சாய்த்தாயானால்
ஓமப்பா நீர்வத்திக் கட்டிப்போகும்
உற்பனமாய் முப்பூவைக் கவசம்பண்ணி
ஆமப்பா அஞ்செருவிற் புடத்தைப்போடு
அப்பனே நீறியது சுண்ணமாச்சே. (69)

சுண்ணமது பணவிடைதான் தேனிற்கொள்ளத்
துலையாத வெட்டையொடு சூலைபோகும்
எண்ணவொண்ணாச் சயமீளை யிருமல்போகும்
யெழுந்தபுத்துக் கிரந்திமுதல் யெடுபட்டோடும்
வண்ணாதிரி கடுகுரூ ரணமேசெய்து
மக்களே சுண்ணமதிற் சரஞ்சேகூட்டிக்
கன்னிநிரு குயப்பாலிற் கொண்டாயானால்
காசமொடு தோஷம்போங் கருதிப்பாரே. (70)

சுருவறியார் மடையர்மெத்த உலகத்துள்ளே
கண்டுகொண்டு அகற்றிவிடு தர்க்கம்வேண்டாம்
குருவறியாச் சீஷருக்குக் குறிதானென்ன
குறியறிந்து அவர்களுடன் பேச்சுப்பேசு
பருசுடைய பூரணமே தெய்வந்தெய்வம்
பார்தனிலே வேறுமொரு தெய்வமுண்டோ
நெறியறிந்து குறியறிந்து பூரணத்தை
நேரறிந்து கொண்டவனே சித்தன்தானே. (71)

சித்தான சித்திலொரு விபரங்கேளு
செம்பக்குந் திகைப்பூடு தன்னைவாங்கிச்
சுத்தமுள்ள காரோட்டிற் கருக்கிக்கொண்டு
சுருக்குள்ள கருவாலே மத்தித்தேதான்
முத்தான சிமிழில்வைத்துத் தாயைப்பூசி
முன்னவனைத் தியானித்துத் திலதம்போட்டுப்
பத்தியுடன் ரேசகபூ ரகமும்பண்ணி
பரமான கும்பகத்திற் பணிந்துபோற்றே. (72)

போற்றியே யெதிர்நோக்கிப் பார்க்கும்போது
பூமிதனி லுள்ளஅதி சயங்கள்தோற்றும்
நாற்றிசையி லுள்ளவுயிர் பயிர்களெல்லாம்
நாதனென்று வணங்கியுன் வசமாம்பாரு
வேற்றுமைக ளில்லையடா மையின்போக்கு
வேணபொரு ளீய்ந்தாலும் விள்ளவேண்டாம்
சாற்றுவிதம் சொன்னனடா யிந்தப்போக்குத்
தரணிதனி லிந்நூலைத் தான்காட்டாதே. (73)

தானவனாய் நின்றதொரு ராமன்நூலைத்
தரணிதனிற் கண்டவர்கள் நாம்தானப்பா
வானவர்கோன் தானறிந்து மெச்சிக்கொண்ட
வயித்தியந்தா னெண்பதுவும் வாலையென்று
மோனமுடன் கண்டவர்கள் கொடுக்கமாட்டார்
மூதண்ட ராஜரிஷி முறைதானென்று
ஊனான உயிர்போலே பதனம்பண்ணி
உள்ளிட்டே வாசிதனை உற்றுப்பாரே. (74)

தொண்டு பண்ணும் நாற்பத்து மூன்றுகோணம்
சுருக்குமுடன் தானெழுதி நடுக்கோணத்தில்
அண்டர்தொழு மேருவைத்தா னதன்மேல்வைத்து
அருளான நந்திபத மன்பாய்காட்டிச்
சென்றங்கே சதாசிவத்தின் நிஷ்டைகூடிச்
சிவந்தமலர் தன்னாலர்ச் சனையேசெய்து
கண்டதொரு மேருவைத்தான் தெண்டம்பண்ணிக்
கருணைதருங் கற்பமென வணங்கிப்போற்றே. (79)

வணங்கியே பூரணிமேல் கியத்தைத்தானும்
வைத்திருக்கும் மேருவைத்தான் முன்னேவைத்து
இணங்கியே யென்தாய்பூ ரணியேயென்று
இன்பமுடன் மேருவைத்தான் திறந்துகொண்டு
பணங்கமழும் மாதாவே யென்றுசொல்லி
வரிசையுடன் போற்றிசெய்து மைந்தாகேளு
குணங்கவொரு மனதாகக் குவிந்துபோற்றிக்
குன்றிமணி தன்னளவா யெடுத்திடாயே. (80)

எடுத்திடது கரத்தில்வைத்துத் தாயைப்போற்றி
இன்பமுள்ள வலதுகர மதன்மேல்வைத்துத்
தொடுத்ததிக ரேசகபூ ரகமும்பண்ணிச்
சொரூபமுள்ள கற்பமதை நாவில்வைத்து
நடுத்தரமாய்க் கும்பித்துக் குருவைக்காரு
நற்கமலச் செகசோதி பாதந்தோற்றம்
அடுத்ததொரு வாசியது அசையாதப்பா
ஆண்டொரு நாழிகைபோ லாகுந்தானே. (81)

தானான கற்பமது கொள்ளும்போதும்
தயவாக நூலெடுத்துப் பார்க்கும்போதும்
தேனான மதியமுத முண்ணும்போதும்
சிவபூசை குருபூசை செய்யும்போதும்
நானென அகம்போக்கி நீதானென்று
நன்மையுடன் மவுனமதா யிருக்கவேணும்
கோனான சற்குருவைக் காக்கவேணும்
குணமுடைய பூரணத்தை வணங்கத்தானே. (82)

வணக்கமுள்ள இந்நூலை வெளிவிடாதே
வஞ்சகருடன் பேசாதே வாதாடாதே
இணக்கமில்லா மாந்தருட னிணங்கவேண்டாம்
இன்பமுள்ள வயித்திய நூ லியம்பவேண்டாம்
மணக்குமலர் மதிதனிலே மனந்தனைவைத்து
வயித்திய நூலென்பதையும் வகையாய்ப்பார்த்து
தனக்குமிது பொருளெனவே வணங்கிப்போற்றிச்
சதாகாலங் குருபதத்தைச் சார்வாய்முற்றே. (83)

இராமதேவர் வயித்திய சூஸ்திரம் ௫௱.

முற்றிற்று.





திருமங்கலத்திலிருக்கும் அருணாசலம்பிள்ளைகுமாரர் வைத்தியம் சுப்பிரமணியபிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதிபின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருவே துணை.

அறுபத்துநான்காவது:

இராமதேவர் திருவாய் மலர்ந்தருளிய

# ஞானம் ௫.



நாட்டினே னென்னவென்றால் மைந்தாகேளு
நாதாக்க ளெல்லோருங் கூடியேதான்
வீட்டினையா யவரவர்தான் சொன்னாரப்பா
வெகுவாக யென்றாலே வெளியாய்ச்சொன்னேன்
பாட்டிலே சொன்னதென்று யெண்ணிநீயும்
பலிக்குமோ பலியாதோ வென்றெண்ணாதே
நீட்டியதோர் நவமணிகள் கோர்த்தாப்போலே
செப்பினேன் சித்தரெல்லாம் இயங்கினாரே. (1)

இயங்கினார் கருவெல்லா மொளித்துவைத்துத்
திருட்டாகச் சாஸ்திரத்தைச் சொன்னதாலே
மயங்கினா ருலகத்திற் பிழைக்கவென்று
மனதிரங்கிச் சூத்திரத்தில் வகையதாக
அயங்காம லிருநூற்றி லடக்கிச்சொன்னேன்
அப்பனே பலபலவாங் கருவையெல்லாம்
தயங்காதே பலவிதமா யறிவைப்போக்கித்
தாக்கிப்பார் பொருளெல்லா மொன்றுதானே. (2)

ஒன்றான தொன்றென்றும் பலவாமென்றும்
உள்ளென்றும் புறமென்றும் உளறுவார்கள்
ஒன்றான வெளிக்குள்ளே பிரித்துநின்றே
ஒத்திருந்த தல்லாமல் மற்றொன்றில்லை
ஒன்றான கருவுமொரு குருவுமாச்சு
உயர்ந்துநின்ற சத்திசிவ மிரண்டுமாச்சு
ஒன்றான மூலமெல்லா மதற்குள்ளாச்சு
உத்துநின்று மனமுவாத்தா லொன்றுதானே. (3)



உ

கணபதி துணை.

அறுபத்தைந்தாவது:

இராமதேவர் திருவாய் மலர்ந்தருளிய

# பூஜாவிதி ம.

ஆதியென்ற மணிவிளக்கை யறியவேணும்
அகண்டபரி பூரணத்தைக் காணவேணும்
சோதியென்ற துய்யவெளி மார்க்கமெல்லாம்
சுகம்பெறவே மனோன்மணியென் றுந்தாள்தன்னை
நீதியென்ற பரஞ்சோதி ஆயிபாதம்
நிர்க்குணத்தி நின்றநிலை யாருங்காணார்
வேதியென்ற வேதாந்தத் துள்ளேநின்று
விளங்குவதும் பூசையிது வீண்போகாதே. (1)

போகாமல் நின்றதோ ரையாநீதான்
பூரணத்தி னுடகலை யைந்தும்பெற்று
ஆகாம லானந்த வல்லியாலே
அடிமுடியும் நடுவாகி ஆறுக்குள்ளே
வாகாமல் வாலையுட மூலத்தாலே
வழிதோன்றும் மூன்றெழுத்தை யுரைக்கவேணும்
சாகாமல் சாகுமடா யிந்தமூலஞ்
சதிர்வட்டம் நடுகோண முக்கோணந்தான் (2)

முக்கோண மூலசுழி கோணமாகி
முதலான மூலமணி வாலைதன்னில்
நற்கோண நாலுவரை நயந்துகாக்க
நாயகியாள் பரஞ்சோதி நாட்டமுற்றுத்
திக்கோண திக்குதிசை யிருந்தமாயம்
தெரிந்திடவே யுரைத்திட்டேன் விபரமாகத்
தக்கோண விட்டகுறை யந்துதென்றால்
தனியிருந்து பார்த்தவனே சித்தனாமே. (3)

சித்தான மூன்றெழுத்து செயலாஞ்சோதி
சிவனும் பெண்சத்தியும் ஒன்றதான
முத்தான வெழுத்து செபிக்கச்சித்தி
முப்பதின்மே லெதிரென்று பெய்கட்டுத்தான்
வித்தான வித்தைமுட் டதும்பாரு
விரிவான முக்குருவும் மூன்றுஞ்சேரு
சத்தான அதன்கருவும் சிலையில்வைத்துச்
சதிரான இதுவிபரம் அறியக்கேளே. (4)

கேளப்பா பெலிகொடுத்துப் பூசைசெய்து
கிருபையுள்ள வுருவேற்றத் திட்டமாக
வாளப்பா சுடுகாட்டின் சாம்பல்தன்னில்
வளமாகப் புதைத்துவிடு நடுசாமத்தில்
ஆளப்பா அடியற்று மரணமாகி
ஆண்டிருந்த தவசுநிலை தான்குலைந்து
காளப்பா கண்மணியே வீழ்வான்பாவி
கறைதெரியச் சொல்லுகிறே னின்னம்பாரே. (5)

இன்னமின்னங் கண்முன்சே தனையுமாகும்
ஈடேற வேணுமென்று விதனிற்சூட்சம்
அன்னமின்று வயிற்கட்டை தேவதாரம்
அறிவுடைய முனைசீவி சிங்களத்தில்
வன்னமின்றார் பேர்சொல்லி நசியென்றேதான்
வலுவான நூற்றெட்டு உருவும்போடு
சன்னமின்று மரத்தடியி லிருந்துகொண்டு
சதிராக ஆணிகொண் டடித்திடாயே. (6)

அடித்தகுழை பிடுங்கிவைத் திறக்கிப்போடு
ஆனந்த வுருக்குலைத்து பட்டுப்போகும்
தொடுத்தமுதல் நாலாநாள் கண்டுதானும்
தொலைகமுடித்து விரசனதடா வித்தப்போக்கு
விடுத்தபின்பு விஷமேறி கருகிப்போகும்
விரித்துரைத்தேன் பூட்டிதுவே வீண்போகாது
தடுத்துவிடு நரகத்தி லடித்துப்பாரு
தட்டழிந்து உயிர்முதலாய்ச் சேதமாமே. (7)

ஆமப்பா அதிகரித்த சிங்களத்தில்
அதிசயங்காண் கண்டவர்க்கு அடைக்கலம்போல்
விமப்பா வெளிதிறந்து சொன்னேன்பாரு
விளையாட்டு யில்லையடா விந்தப்போக்கு
சோமப்பா சுத்தியுடன் தலையும்மூழ்கி
சுருக்கெனவே தியானிப்பா யாத்தாள்மூலம்
தாமப்பா சத்தியமே சொன்னேம்பாரு
தவறாது ராமனுட வாக்யந்தானே. (8)

தானென்ற மூலமுடன் சித்திபண்ணு
தனதான நாற்பெட்டுக் குள்ளேசித்தி
ஆனென்ற அண்டர்பதி யெட்டுமாடும்
அறுபத்து நால்மூலி யெல்லாமாடும்
கோனென்ற கோடிசித்து க்ஷணத்திலாடும்
குணமாக ரேவதிநாட் செய்யநன்று
வானென்ற அஷ்டமியிற் செய்யநன்று
வளர்பிறையிற் செய்தவனே யோகியாமே. (9)

யோகிசளா யாவதற்கு வுனக்குச்சொன்னேன்
ஓகோகோ முன்னுரைத்த மூலத்தாலே
ஏகிகளா யேகாந்த வல்லியாட்டு
யேட்டிலே யெழுதினதா லெல்லாமாச்சு
தாகிகளாய் தாயுடைய கிருபையாலே
தவமாகு மவமாகும் சுபமுண்டாகும்
மோகிகளாய் மூலபூஜா விதிபத்தாலே
முத்திபெறச் சித்திவினை பத்துமுற்றே. (10)

இராமதேவ ரருளிச்செய்த பூஜாவிதி ம.

முற்றிற்று.



மாவூற்று சாதுக்கள் மடத்திலிருக்கும் சாமிபார் இராமகிரி கோசாயிசுவாமிகளிட மிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதிபின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

கடவுள்துணை.

அறுபத்தாறுவது:

இராமதேவர் திருவாய் மலர்ந்தருளிய

# குருசூஸ்திரம் ௰௬.



ஓமமதில் நின்று
வாமமதை யுண்டு
ஊமையென நின்று
ராமனுரை செய்யே. (1)

நந்தியைப் போற்றி நாதாந்தத் துள்ளிற்
றந்தியைத் தொழுது தாயையும் போற்றி
மந்திரங் கொண்டு மவுன லகிரியால்
அந்திர வாத மறையவுங் கேளே. (2)

கேளே முன்னூல்கள் கெடியான வாயினாற்
காளேநான் சொன்னது கங்குகரை யில்லை
ஏழே சமுத்திரம் யென்றாற்குக் காப்பிடத்
தாளே சரியில்லை சாஸ்திரந் தானே. (3)

தானே குருமுனி சாற்றினா ரெனைப்போல்
வேனே திருமூலர் வெகுகோடி கொட்டினார்
மேனேயென் னூல்தான் வெட்டவெளி யாகும்
தேனே தான்கண்டு தெளிந்தவர் சித்தரே. (4)

சித்தரே கேளுஞ் செப்புவேன் நிலமை
முத்தரே வண்டின் முட்டையாய அப்பிடு
கத்தரே வெள்ளையாய்க் காணுமே கண்டு
அத்தரே கண்டு ஆடிடீர் மக்களே. (5)

மக்களே தம்பிகீர் வாங்கியே நீங்கள்தான்
வெக்களே குரிச்சி விதமான சந்திரன்

அக்களோ விற்பனி யான பிலத்துடன்
வக்களே பூணைப்பீ வாசனை கண்டிடே. (6)

கண்டிடு நீரிற் கரைத்துப் பணியில்லை
யென்றிடு சுண்ணநீ ரெனவிதன் பேரு
அண்டிடு மிதனா லஞ்சுசுண்ணஞ் செய்திடு
தண்டிடு வாதந் தப்பாது பாருமே. (7)

பாரு மினிமை பலதோஷம் போக்கியும்
நேரிடை சேர்த்து நீகம்பி யந்திடை
ஆருமே நீரா லரைத்துப் புடமிடு
கோருமே நல்ல கொடுஞ்சுண்ண மாகுமே. (8)

ஆகுமுன் செய்த ஆல்முட்டை யேழுக்
கேகுமே பூசி யிதைவை ரவியிலே
பாகுமே காஞ்சபின் பஞ்சபூ தத்தில்வை
ஏகுமே வைக்க யியம்புவேன் கேளுமே. (9)

கேளுநீ அக்கினி சாலங் கெடியாக
நாளுநற் சுண்ணநீர் விட்டுநன் றாயாட்டி
வாளுங் குருத்தியில் வைத்தூது சுண்ணமாம்
ஏழுஞ் சுடர்க்கொடி யிப்படி யூதிடே. (10)

ஊதிடச் சுண்ணமா முறைசேர்கல் லுப்பை
வாதிடச் சுண்ணமாம் வைத்தூது வெண்காரி
யேதிடச் சுண்ணமா மீணங்கனைப் போட்டூது
போதிடப் பஞ்ச பூதக் குகையிலே. (11)

பூதக் குகையிற் போட்டூது ஆதியை
ஆகிமுன் சொன்ன அஞ்சைமே லப்பி
வேதமா லாயி விளங்கப் புடமிடு
காதனே கேளு நலத்திடு சுண்ணமே. (12)

சுண்ண மிதைப்போற் சொல்வார்கள் சித்தர்கள்
அண்ணைத்த வேதை ஆடலாம் பாரு
வண்ணைத்த சித்தர்கள் மறைத்தே ஒளித்திடார்
இன்னைத்தான் வஸ்துவிற் சேர்க்க புரியுமே. (13)

மூரித்தகதை புண்ணா மூச்சை யடக்கிடு
சரித்தநின் வேதை சாற்றுவேன் மக்களே
சரித்திடுந் சுண்ணத்திற் சாரத்தை யாட்டிடு
கிறுத்தமுன் பிக்கையும் நீர்சேர்த்து ஆட்டிடே (14)

ஆட்டிடக் கேறுந் ஆனதோர் விரனை
காட்டிட மணிபோல் கன்று புருக்கிடும்
ஓட்டிடத் தங்கஞ்சேர் ஒன்பதில் வேதைதான்
சோட்டிய பேஷன் சொன்ன வுறுதியே. (15)

உறுதிதான் தாய்க்கு உரைத்தகதை யாத்தாள்
நறுதிசேர் அற்புதா நந்திக்கே சொன்னாள்
விருதிதைச் செய்து வெகுகோடி யாடினார்
அருதி புலைக்கி னற்புதஞ் சொன்னாரே. (16)

சொன்னாரே யென்குரு சூட்சாதி சூட்சத்தை
அன்னா நிலைதக்கொண் டாடினேன் வாதந்தான்
மன்னரு லோகர்க்கு மறைவிட்டே சொன்னேன்
யன்னாரும் பொய்யில்லை பரையாணை முற்றுமே. (17)

இராமதேவர் குரு சூஸ்திரம் ௰௬,

முற்றிற்று.



திருமங்கலத்திலிருக்கும் அருணாசலம்பிள்ளைகுமாரர் வைத்தியம் சுப்பிரமணியபிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருவே துணை.

அறுபத்தேழாவது:

இராமதேவர் திருவாய் மலர்ந்தருளிய

# தண்டகம் ௱



மூலமுத லாதார விஞ்சைதனையோதி
முனையான சுழிமுனையின் மேலாகநின்று
பாலமெனும் மயிர்ப்பாலத் தந்தமதிற்றாவிப்
பத்திகொண்டு நெருப்பாறிற் பதிவாகச்சென்று
சீலமுடன் அப்பதியிற் காலையுமேநாட்டிச்
சின்மயமாஞ் சற்குருவைச் சிந்தைதனில்நினைந்து
தூலமுடன் சூக்ஷமொடு காரணமாய்நிறைந்த
தொந்திவயிற் றைங்கரனைத் துணையெனக்கொண்டேனே (1)

கொண்டதொரு சிவஞான கேசரியைக்கண்டு
குருவான மேருகிரி நடுவானபதியிற்
சென்றந்த மதியமுத மருவியதையுண்டு
திருவான பூரணியைச் சிந்தைதனில்நினைந்து
அண்டர்பிரா னருளதனை யனுதினமும்நோக்கி
அன்பான சிவயோகத் தந்தமதில்நின்றேன்
கண்டந்த மனோமணியும் வாராமாவென்று
கருவான தண்டக்கங் கடாட்சித்தாள்பாரே. (2)

பாரான தண்டக்கம் பதினெட்டும்பார்த்துப்
பரமகுரு அருளதனாற் பகுத்தறியும்போது
நேரான பொருளதனை யொன்றாகக்கண்டேன்
நிசமான அப்பொருளைப் பதினெட்டுப்பேரும்
சீராக அவரவர்கள் பரிபாஷையாகச்
செம்மையுடன் பாடினதைத் தெரிந்தெடுத்துக்கொண்டு
கூறாத பொருளென்றும் பாஷைபதினெட்டாய்க்
கூறினும் பொருளறிந்து கூறுவதுமரிதே. (3)

அரிதான பொருளதனை நிசமாகவேதான்
 அரனருளைப் போற்றிசெய்து அன்பாகச்சொன்னேன்
குருவான தண்டக்கங் கருவானநூலிற்
 கூறாத பொருளொன்று பிரமமயமாகும்
நெரியான பிர்மமய மானகருமைந்தா
 நிசமான அண்டமுதற் பிண்டமயமாகும்
பெரிதான அண்டமுதற் பிண்டமதுரெண்டும்
 பெருமையுள்ள தண்டக்கங் கருமானமாமே. (4)

ஆமென்ற கருமானத் தண்டக்கமாகும்
 அருவுருவ மானசெய லாருமறியார்கள்
நாமென்ற தண்டக்கம் நாதமொடுவிந்தாய்
 நடுவாகி நின்றதொரு கருமானப்பொருளைத்
தாமென்று சொன்னகரு வாருமறியார்கள்
 தன்மையுடன் தானறியக் கருமானங்கேளு
ஓமென்ற சத்தமடா ரவிமதியின்கலைதான்
 ஓடையிட்ட நாதமடா மவுனமதுவாமே. (5)

மதுவான நாதமது கெர்ச்சிக்கும்போது
 மலரான விந்ததுவும் மனதடங்கிச்சேர்ந்து
பொதுவான தலமென்ற முக்கோணமதிலே
 போதமய மானகுரு நாதனருள்செயலை
மெதுவான தண்டக்கங் கருவானபொருளை
 மேன்மைபெறச் சொன்னகரு ஆதிமயமாகும்
ஏதுவான ஆதியது அண்டகேசரியாம்
 இதமான சுழிமுனையது முனைமையமாமே. (6)

ஆமென்ற முனைமையம் விந்துநிலைபீசம்
 அரிதான தண்டக்கங் கருமானம்ரெண்டும்
தாமென்று ஒன்றாக ரேசிக்கும்போது
 தன்மனதிற் குருவென்று தந்தமதின்கிழில்
ஓமென்று லவுக்கதின்மேல் அஞ்சனாதேவி
 ஊசாடும் மந்திரமும் பேசாதபொருளாம்
நாமென்ற கருமானம் மையமதில்சுமையை
 நன்றாக மெய்க்கண்ணில் நயமாகத்திட்டே. (7)

திட்டிநீ நன்றாகக் கீழ்மேலும்பாரு
திட்டிக்குப் பொய்யாமல் மெய்யாகக்காணும்
கூட்டியே பாராதே அதனிலதிசயத்தைக்
குடிபோன வீடென்று குறியாகத்தள்ளி
ஆட்டுநீ சக்கரமும் அசையாமலேதான்
அந்திரமா பீடமடா அண்டகேசரியாள்
நாட்டின தண்டக்கக் கருமானபின்னம்
நயமாகச் சொல்லுகிற நன்மையதைக்கேளே. (8)

கேளடா சல்லியன் பாடினதோர்நூலிற்
கெடியான கொடிமூலம் முடிவானபூவில்
ஆளடா ரவிநாத மடிமேலும்பூட்டி
அசையாத மேருதனி லன்பாகநாட்டிக்
கோளடா அசையாமல் வாய்மூடிமவுனம்
கொண்டுநீ மண்டலங் குளிவெட்டிக்காரு
நாளடா தப்பாமல் நீநின்றுகாரு
நயமான கெங்கையடா செயநீருமாமே. (9)

நீராக ஊறும்நீ ராவியானகெங்கை
நிசமான மதியான கெங்கைதனைக்கூட்டச்
சேரான தயிர்போல அமுதரசமாகும்
திவ்யரச மானதொரு பூரணநீராகும்
கூராத பூரணநீர் செப்பதனில்வாங்கக்
குருவான உதகநீர் மிதமானநஞ்சாம்
பேரான பாசாண மெச்சரக்காலும்
பெருமையுடன் கட்டுமது முழுக்கட்டுமாமே. (10)

கட்டான சரக்குவகை அறுபத்திநாலும்
காரசா ரத்தின்வகை யிருபத்தியஞ்சும்
கெட்டான உபரசம் நூற்றிரண்டுபத்தும்
நிசமாக மூன்றுவகைப் பேருமுறவாவார்
செட்டான செட்டுவகை யென்னவென்றுசொல்வேன்
சிவசிவா சுருக்கமுடன் செப்புவதுகேளு
எட்டான யெட்டெட்டு அறுபத்திநாலு
இசைக்குமுன் னூடுமது இருந்துநீபாரே. (11)

இருந்துநீ பார்ப்பதற்கு இன்னமொருவகைகேள்
ஏகாந்த நாதமடா பிறவிசாகரமாம்
விருந்துநீ கொள்வதுபோல் மனமதனிற்சென்றால்
மேன்மைபெறத் தானமுடன் பானமதுகொள்ளு
அருந்துநீ மெதுவாக ஆதரவாய்க்கொண்டால்
ஆக்கையுட கபடமது மசையாதுமைந்தா
பொருந்துநீ கொள்ளவுமிடகலையைப்பாரு
பூரணமாம் பிங்கலையும் பூரணமுமாமே. (12)

பூரணமாய் நீயிருந்து வெட்டெட்டிச்சித்தும்
பொறுமையுடன் தானுடந் தலமகிமைஅதிகம்
காரணமாய் நின்றதலஞ் சதிரானகிரியாம்
கருவான பொன்மேரு கிரியினடுவாக
மாரணமாய் நடனமிடும் முன்காலீட்டி
மலரான திவ்யமலர் முப்பூவின்வாசம்
சீரணமாய்ப் போகாது வாசிசிவயோகம்
சிவயோக வாசனைக்கு வாடைமணங்கேளே. (13)

கேளடா வாடைமணம் பொல்லாதவாசம்
கிருபையுள்ள வாசமது மனோமணியாய்நிற்கும்
ஆளடா அவள்பாதம் பாதாரவிந்தம்
அனுதினமும் பூரணமா யன்புமனங்கொண்டால்
தேளடா வாடையதின் துற்கெந்தவாசம்
தேவிமனோ மணியினுட தெளிவதனால்மைந்தா
கோளடா யில்லாத நற்கெந்தமாகிக்
கொள்கையுட னவரவர்கள் நினைக்குமணமாமே. (14)

ஆமடா மனமான வாசனையினாலே
அடங்கலுமே உன்வசமா யாளுவதுமெய்யே
ஓமடா யின்னமொரு கருமானமுண்டு
உவமையில்லா வாசமதிற் கடுகளவுவாங்கி
நாமடா வென்றமதங் கருவானபீசம்
நலமான புனுகிலொரு கடுகளவுவாங்கித்
தாமடா கைதனிலே மத்திக்கும்போது
தருகாது கம்மென்று வாசம்வெகுதுலையே. (15)

துலையாத வாசமதின் பெருமையதினாலே
துடியான லோகமது படிவாகநிற்கும்
கலையான சந்திரனும் ரவியானவீட்டிற்
காலுறங்கிக் கண்ணுறங்கிக் கருவையறிந்ததினால்
நிலையாத நெருப்பாறில் மயிர்ப்பாலம்நாட்டி
நினைவாகத் தானடக்க வாய்வேகமதிகம்
மலையாதே யிதனில்வெகு அதிகமதாயொன்று
மனவேகி யென்றதொரு மனோமணியைக்கேளே. (16)

மணியான மணிவகையி லனந்தவிதமுண்டு
மந்திரமாஞ் சொரூபமணி மார்க்கமதுதன்னைக்
கணிகரமாய்ச் சற்குருவின் பாதமலர்கண்டு
கசியமன முருகவேதான் தொண்டுமிகச்செய்தால்
வணிகரமா யெடுத்தணைத்து அமுதரசமூட்டி
மகத்தான சிவயோக வண்மைதனைக்காட்டிக்
கெணிதான மணிமந்த்ர விந்துஊற்றுக்காட்டி
கெவுனமென்ற ரசகுளிகை கிருபைதனைக்கேளே. (17)

கேளடா ரசகுளிகை கருவானவித்தை
கெட்பிர மானதொரு மலரானவிந்து
ஆளடா விந்தினிடை ரவியானநாதம்
அன்பாகக் கூட்டிநீ யொன்றாகக்கண்டால்
வாளடா ஒன்றான ரவிநாதவிந்தை
மகத்தான கல்வமதில் வைத்துநீமைந்தா
தேளடா கொட்டுதல்போற் கலிங்கமதிற்சேர்ந்தால்
செயலான நாதவிந்து கட்டுமதிற்பாரே. (18)

பாரடா நாதவிந்து ஒன்றாகக்கட்டிப்
பருவமுடன் தானிருக்கும் பதிவாகமைந்தா
சேரடா ரசவாலை மணியதுபோற்செய்து
செம்மையுட னதுக்குநிகர் துருசினுடசுண்ணம்
வாரடா கல்வமதி லமுதத்தினாலே
மார்க்கமுடன் சுத்திசெய்து மனதானமணிபோல்
நேரடா மணிசெய்து மத்தினுடகாயில்
நிசமாக வைத்துமொரு புடமாகவில்லே. (19)

நில்லென்ற புடமாறி யெடுத்துநீபாரு
நிசமாக ரசகுளிகை வசமாகக்காணும்
கல்லென்ற ரசமணியை யெடுத்துநீமைந்தா
கருவான நாதநீர் தன்னிலுறவாக
வில்லென்ற விசைபோலே சாரணையுமாகும்
மேலான விந்துரச மணியதனிலூட்டி
சொல்லொன்று மில்லாத மனவேகியாகும்
சுகமான மனவேகி மனோமணியின்மணியே. (20)

மணியான மனவேகி மனோமணியாய்நின்று
மனமான மனோமணியைக் காணுவதுமைந்தா
கனியான வேதமது சிவயோகதீபம்
காலடங்காத் தீபமது அறிவானபோதம்
குனியான போதமதை யாருமறியார்கள்
குருவாகி மலரான விந்துசெயல்தன்னைத்
தனியான பொருளாகும் அருளுமதுவாகும்
தயவான மணியதுவுஞ் சொரூபமணியாமே. (21)

ஆமென்ற சொரூபமணி யரூபமணிமைந்தா
ஆனந்த போதமது அருளுமணியாகும்
ஓமென்ற போதமதில் மவுனமதாய்மணியை
ஊடாடும் நாவதனின் மேலாகவைத்து
தாமென்ற வலதுபுற அலகதனிலொதுக்கிச்
சங்கையுட னம்மென்று தான்மனதில்நின்றால்
நாமென்ற அமுதமது குமிழியதுபாயும்
நலமான அமுதமது பசிதீரவுண்ணே. (22)

உண்டுநீ யுண்ணுவது சுழினையதின்மேலே
ஓமென்று பரமகுரு பாதமதில்நின்றால்
கண்டுநீ யுரையாதே கண்காட்சிதானும்
கண்டதொரு காட்சிதனைக் கருதாமல்நின்றால்
அண்டமே சரியாகு ஆனந்தமாகும்
அப்பனே முன்செய்த சொரூபமணிவாங்கி
விண்டுநீ யுரையாதே கமலாசந்தன்னில்
மெய்யான கன்னியுட கூடலாவாரே. (23)

வாருநீ யிடைசரியாய் நன்றாய்க்கூட்டி
மயங்காமற் கையதனால் மத்திக்கும்போது
நீருடனே நீர்சேர்ந்து சயிலமயமாகும்
நிசமான சயிலமதிற் சொரூபமணிநிறுத்திச்
சீருடனே ரவியான காந்திதனில்வைத்தால்
சிவசிவா சொரூபமணி சயிலமதையுண்ணும்
பேருடைய சொரூபமணி சயிலமதையுண்டால்
பிலமான மணியதுதான் கமலிமணியாமே. (24)

ஆமென்ற கமலியுட மகிமைதனைக்கேளு
அடங்காத சித்துவினை யாடுமேதுமைந்தா
ஓமென்ற நாவதனி லடக்கமதுசெய்து
உரிமையுட னிடதுபுற அலகதனிலொதுக்கி
நாமென்ற சொல்லதனை சுழிமுனையில்நிறுத்தி
நன்றாக மேல்மூலத் தடியில்நடுவாகத்
தாமென்று கூணிகமதில் மனதுடனேநின்றால்
தன்மையுடன் சிவயோகம் உண்மையதுவாமே. (25)

உண்மையுட னின்னமொரு கருமானங்கேளு
உருவான முப்பூவுங் கருவானவித்தை
நண்மையுள்ள கருமான மாருமறியார்கள்
நடுவான பீடமடா அண்டகேசரியாள்
தண்மையுள்ள அடிமூலம் நடுவானவிந்து
தயவான மேல்மூலம் ஒன்றாகக்கூட்டி
நுண்மையுடன் கல்வமதி லமுதமதினாலே
நோகாமல் மெதுவாக அறுசாமமாட்டே. (26)

ஆட்டிநன்றாய் வழித்துருட்டி வட்டதுபோற்பண்ணி
அலரவே காய்ந்தபின்பு மண்சீலைசெய்து
காட்டியே புடம்போடு புடமதனில்மைந்தா
நலமான சுண்ணமது கடுங்காரமாகும்
பூட்டியே முனபோலக் கல்வமதிலாட்டி
புத்தியுட னேமூன்று புடமதனில்மைந்தா
தாட்டிகமாய் நீறியது குருவானபூவாம்
தயவான பூவதுவும் முப்பூவுமாமே. (27)

ஆமப்பா மூப்பூவுஞ் சவுக்காரவைப்பு
அரகரா ஆயிரத்தி லதிகமதாய்ச்சொன்னேன்
நாமப்பா சொன்னமொழி நிசமானவார்த்தை
நலமான குருநவினுட வுபதேசப்படியே
ஓமப்பா கருமான மாராய்ந்துபாரு
உண்மையுடன் தண்டக்கக் கருமானத்தோறும்
காமப்பால் கானற்பால் கொண்டு கதிதேறு
கருவான தும்பையடா செந்தும்பையாமே. (28)

ஆமடா செந்தும்பை வனுவானமூலி
அரகரா அம்மூலி யாருமறியார்கள்
நாமடா சொல்லுகிறோம் தண்டக்கமாக
நடுவான செந்தும்பை கருவானபூடு
ஓமடா அப்பூடு சமூலமதைவாங்கி
ஒன்றாக மத்தித்துக் கல்வமதிலாட்டிக்
தாமடா சரக்குவகை யெச்சரக்கானாலும்
சங்கையுடன் தான்பொதிந்து புடமதினிற்போடே. (29)

போட்டடா புடமாறி யெடுத்துநீபார்த்தாற்
பொன்னான சரக்குவகை யெண்ணமற்கட்டும்
ஆட்டடா கட்டுவகைச் சரக்கதனைக்கொண்டு
அட்டமா சித்துவிளை யாடுமிந்தமூலி
தேட்டடா அம்மூலி சிக்குவதுகடினம்
செகமெல்லாம் அதினுடைய செயலதுதான்மைந்தா
காட்டடா யின்னமொரு கருமானஞ்சொல்வேன்
நடுவான பச்சையடா ரூபியெனலாமே. (30)

ஆமிந்த ரூபியுட மகிமைதனைக்கேளு
அடங்காத பச்சையடா மயிலாடும்பாவை
ஓமிந்தப் பாவையுட கருமானங்கேளு
உண்மையுடன் ஆண்பெண்ணு மொன்றாகக்கூடி
நாமிந்தப் படியாகச் சொல்லுவதைக்கேளு
நலுங்காது பச்சோந்தி சேரும்போது
தாமிந்தப் படிபார்த்து அடையாளமாகத்
தடையான காலுடனே வால்முதலாய்வாங்கே. (31)

வாங்கடா மொழிபார்த்துக் கண்டித்துமைந்தா
வலுவான புத்தியுடன் தேனிலதைப்போடு
பாங்கடா பதமாக ரவிதனிலேவைத்தாற்
பதிவான கருவஞ்சும் பதமாகநிற்கும்
தாங்கடா அக்கருவைக் கைமேலுமாகத்
தங்கமென்ற குளிசமதை முன்கையிற் கட்டித்
தூங்கடா சுழினையுட முனைமையமீதில்
தூங்கினதோர் சுகமதனைச் சுகமாகப்பாரே. (32)

பாரடா சுகமான சந்தோஷங்கேளு
பரமான கைலாச சிதம்பரத்தின்மகிமை
ஆரடா அறிவார்கள் நடுவானமூலம்
அஞ்சான அஞ்சறையும் அறுகோணம்நடுவே
சேரடா நடுவறையில் யகாரமதைநாட்டிச்
சிவாயகுரு சதாசிவத்தின் கனையதனிற்பூட்டி
மாரடா யெழுத்துவகை நடுவானவறையில்
மயங்காதே முதலறைக்குள் நமசிவயமென்னே. (33)

எண்ணியே நடுவணையை நடுவறையில்மாறு
இன்பமுட னறைதோறு மாறினதால்மைந்தா
உண்ணியே பாயுறதோர் சக்கரமுமாச்சு
ஓயாம லாடினதோர் சக்கரத்தைக்கீறி
வண்ணியென்ற சக்கரந்தான் வசமாகமைந்தா
மக்களே யின்னமொரு கருமானங்கேளு
புண்ணியனே தங்கமென்ற பலகையுடநீளம்
புகழான பலகையது அங்குலமுமெட்டே. (34)

எட்டான அங்குலமுஞ் சதிரானபலகை
இன்பமுட னேசெய்து முன்பாகநிறுத்தி
சட்டான பலகையின்மேல் விபூதிதனைநிரப்பி
கண்ணான சிதம்பரத்தைக் கருணையுடனெழுதி
திட்டமுடன் விபூதிதனை உத்தளமாய்ப்பூசி
சிவாயகுரு சக்கரத்துக் கெதிராகமைந்தா
சட்டமுடன் பூரணமாய்க் கும்பமதுவைத்துச்
சமத்துடனே சந்தனமுந் தயவாகச்சாத்தே. (35)

நாத்துநீ தாம்பூலம் ரசமானவர்க்கம்
சட்டரச முப்பழமும் தேங்காயும்படைத்துப்
போத்திரி புட்பவகை அட்சதையிரைத்துப்
புகழாக அர்ச்சனைகள் பூரணமாய்ச்செய்து
பாத்திபனே முன்செய்த மயிலாடும்பாலை
பதிவான குளிசமதைச் சிகைதனிலேதரித்து
நாத்திசையும் வெல்வதற்குக் கருமானங்களே
நலமான யெண்டிசையிற் கீழ்திசையைப்பாரே. (36)

பாரடா கீழ்திசையி லிந்திரனைநோக்கிப்
பதிவான படிகமணி செபமாலைவாங்கி
காரடா ஓம்ஹ்ரீ யென்றுஉருமாறக்
கண்ணான விண்ணொளிவு கருகாதுமைந்தா
நேரடா அந்தவொளி பூரணமாய்நின்று
நினைத்தபடி முடிக்குமது நிசமானவித்தை
ஏரடா யெண்டிசையு மேகாந்தமாக
எட்டான சித்துவகை யாடுவது மெய்யே. (37)

மெய்யான தென்கிழக்கு அக்கினிதன்மூலை
மேலான அக்கினியின் திசைதனிலேநோக்கிப்
பொய்யான பயல்களுட பேரதனைமாறப்
பொல்லாத பீடைகளும் போயவனைச்சுத்தும்
கையாரத் தென்திசையிற் சத்துருவின்பேரைக்
கால்மேலுந் தலைகீழாய் மாறினதால்மைந்தா
அய்யனே யெமனுடைய கோட்டாலையாலே
அவனுடைய சீவகலை யடிமடிந்துபோமே. (38)

போமடா நிருதியுட திசைதனையேநோக்கிப்
பொல்லாத சத்துருவின் பேரையுருமாறி
ஆமடா அவனுடைய அறிவுகளுமங்கி
ஆக்கைநிலை தெரியாமல் அலைந்துமதிகெட்டுப்
போமடா அக்கினியி லாகுதிகள்செய்தாற்
பொல்லாத பேயருட மாரணமதாகும்
தாமடா தன்னுடைய நிலைதனிலேநின்று
சணத்திலே உருமாறப் பூதிதனையூதே. (39)

ஊதியே மேல்திசையிற் சக்கரத்தைவைத்து
உரிமையுடன் வாராம தேவெனவேகூவு
நீதியுடன் மேகமது கர்ச்சித்துமைந்தா
நீள்திசையில் மழைமாரி நிரம்பமிகச்சொரியும்
சோதியென்ற தீபவொளி அதிகமதாய்மைந்தா
சுழினையிலே பிரகாசந் தோன்றுவதுமெய்யாம்
ஆதியென்ற வடமேற்கு வாய்வினுடவீடு
அப்பனே அவ்வீட்டை யறிந்துமிகநோக்கே. (40)

நோக்கியே சக்கரத்தை யெதிராகவைத்து
நன்னிமையா யர்ச்சனைக ளறிவாகச்செய்து
தாக்கியே வாசிவா வென்றுசெபம்செபிக்கத்
தருகாத வாய்வதுவுந் தணலில்மிகச்சாடித்
தூக்கியே ஆவியது சண்டமதில்நின்று
துணையாகச் சிவயோகந் துலங்குமதுபாரு
பாக்கியமாய் நின்றசிவ யோகமதுவாலே
பக்குவமாய்க் கருப்பொருளும் பதிவதனைப்பாரே. (41)

பாரடா வடமுகமாய்ச் சக்கரத்தைவைத்து
பரமான மந்திரங்கள் வடமாலைசாத்து
நேரடா பழந்தேங்காய் தாம்பூலம்வைத்து
நிசமாகத் தூபமுடன் தீபமதுசெய்து
சாரடா செபமாலை கைதனிலேவாங்கிக்
கண்ணான விண்ணொளியிற் கருத்தைமிகவைத்துச்
சாரடா நிசமான பாக்கியமிதுவென்றே
தனதான்ய சம்பத்துத் தவறாதுமெய்யே. (42)

மெய்யனே யின்னமொரு கருமானங்கேளு
மேலான அட்சயபாத் திரமதொன்று
கையனே சொல்லுகிறேன் கருவானமூலம்
காலான மூலமடா அண்டகேசரியாள்
துய்யனே கேசரியு மண்டலமுமூன்றாய்த்
துலங்குமது நடுவான கமலமதுவாங்கி
அய்யனவன் பிச்சையெடுத் தாண்டவனுமானார்
ஆனதா லட்சயபாத் திரமீதாக்சே. (43)

ஆச்சப்பா பிரமனுட கபாலமதுவாங்கி
அருளான பிரணவம்போ லாகவுருச்செய்து
பாச்சப்பா கமலாசப் பால்தனிலேபோட்டாற்
பழியான சாபமது பதையாமலோடும்
நீச்சப்பா சாபமது நீக்கினதினாலே
நிசமான அட்சயபாத் திரம்தாகும்
பேச்சப்பா ஒன்றுமில்லை பாத்திரங்கைக்கொண்டு
பெருமையுட னின்னமொரு கருமானங்கேளே. (44)

கேளடா சேர்மானங் களஞ்சியங்கள்கட்டிக்
கிருபையுடன் தனதான்ய சம்பத்துவைத்து
ஆளடா வியாழமது திசைதனிலேமைந்தா
அட்சயமாம் பாத்திரத்தை அம்மெனவேவாங்கிக்
கோளடா யில்லாமற் களஞ்சியந்தன்னிற்
குபேரனுட விடெனவே குறியாகநிறுத்தி
வாளடா தனதானிய சம்பத்தையெடுக்க
வளருமொண் ணட்சயமாய் வளருவதைப்பாரே. (45)

பாரப்பா வடகிழக்கு யீசானமூலை
பதிவாக அவ்வீட்டிற் றேவதைகள்வாசம்
ஆரப்பா அறிவார்கள் தேவதைகள்பெருமை
அரகரா பெருமைதனை அறிவதுவைக்கேளு
நேரப்பா சக்கரத்தைக் கைதனிலேவாங்கி
நேசமுடன் சற்குருவின் பாதமதைத்தொழுது
சேரப்பா யீசான பார்வையதாய்வைத்துச்
சிவசிவா பரிமளங்கள் திகழ்தமிகச்சாத்தே. (46)

சாத்தியே சகலரச வர்க்கமுடனமுது
தாம்பூலம் பழந்தேங்காய் சதிராகவைத்துப்
போத்தியே தூபமொடு தீபமதுகாட்டிப்
பூரணமாய் மூலமதில் வாசிமலர்சாத்தி
நாத்திசையும் யெனைக்காக்கும் பராபரமேயென்று
நலமாகச் சிவயோக நாட்டமதுவானால்
பாத்திபனே தேவதைகள் தெரிசனமுமாகும்
பத்திகொண்டு தேகமது சித்தியமாமே. (47)

சித்திமய மாவதற்கு அட்டாங்கயோகம்
செப்பியதோர் தண்டக்கக் கருமானப்படியே
பத்தியுட னிந்திரமாங் கோபமுடன்காலி
பதிவான புனுகுடனே மூன்றுகருவாங்கிப்
புத்தியுட னோரண்டத் தெண்ணெய்யதினாலே
பூரணமாய்க் கல்வமதிற் பொருந்தவுறவாக்கி
அத்தியுட சிமிழ்தனிலே வழித்தெடுத்துவைத்து
அன்பாகத் திலதமிட வசியமெனலாமே. (48)

ஆமப்பா வசியமதில் விஷவசியங்கேளு
ஆதியென்ற அண்டமடா மயிலினுடமுட்டை
நாமப்பா சொல்லுகிறோம் அண்டத்தின்கருவை
நலமாக வாங்கியொரு பீங்கானில்வைத்து
ஓமப்பா கற்பூரம் வீரமதிலூட்டி
ஒன்றான கருவதிலே நன்றாகச்சேர்த்துத்
தாமப்பா ரவிதனிலே மெழுகுமயமாகும்
சமத்தான மெழுகினுட தன்மைதனைக்கேளே. (49)

கேளடா மெழுகதிலே கடுகளவுவாங்கி
கெம்பீர மானவிஷங் கேசரியில்நின்றால்
தேளடா கொட்டுதல்போற் கடிவாயில்வைக்கத்
திரும்பாத விஷமதுவுந் திரும்புவதுமெய்யாம்
வேளடா யெரித்தசிவன் நஞ்சமுதமுண்ட
விசையான அமுதமும்மெய் யானபோதம்
கோளடா யில்லாத அமுதமதுவாங்கக்
குறியொன்று சொல்லுகிறோ மறிவாகக்கேளே. (50)

கேளப்பா அறிவான காலமதில்மைந்தா
கேடான மீனிறச்சி யெண்ணெய்யென்றவகையும்
தாணப்பா புளியுடனே தாம்பூலங்கோபந்
தள்ளியலே போவதற்குச் சாதகத்தைக்கேளு
நாளப்பா நினைத்தபடி நன்மையெனக்கொண்டு
நலமான காலமடா விடிவேறுதனிலே
கோளப்பா யில்லாத அகாரமதின்விந்து
குருவான சதுரகிரி அடிவாரந்தானே. (51)

தானென்ற அடிவாரம் வெண்சாரைபீசம்
  தருகாத பீசமதை தன்னுருக்கொண்டேதான்
கோனென்ற ரவிபீசம் அனுவாகச்செலுத்தி
  குருவான கேசரிதன் பாதமதைத்தொழுது
தேனென்ற மூலியடா செந்தும்பைமகிமை
  திரமான மூலியதைத் தினமனுவாய்க்கொண்டால்
ஊனென்ற தேகமடா உறுதிமயமாகும்
  உண்மையுட னிப்படியே உறுதியுடன்நில்லே. (52)

நில்லென்ற நிலையிலொரு கருமானங்கேள்
  நிசமான தேவர்க்கு வசமானபச்சை
கல்லென்ற பச்சையடா கருவானசிப்பி
  கண்ணான சிப்பியுட கருவதனைவாங்கிச்
சில்லென்ற ரவிதனிலே நவநாள்தான்வைத்துச்
  சீர்பெறவே பார்க்கையிலே சுண்டியதுபோகும்
சுல்லென்ற ரவிதனிலே சுண்டியிகக்காய்ந்தால்
  சுகமான கருவிரண்டும் மெழுகதுவுமாமே. (53)

ஆமப்பா மெழுகுடனே சேரும்வகைகேளு
  அடங்காத வெடியுடனே காரமுடன்சாரம்
ஓமப்பா ஒன்றாகக் கல்வமதிலிட்டு
  உருவான காயரசம் வனுவானநீரால்
காமப்பால் கனலொடுங்க யீராறுசாமம்
  கசகாமற் றரைட்டக் கருவானமெழுகாம்
தாமப்பா மயங்காமல் மேருதனில்வைத்துத்
  தன்னிலையைத் தானறிந்து தனதாகவூட்டே. (54)

ஊட்டடா பணவிடைதான் கருவானமெழுகை
  உறுதியுடன் மண்டலமே கொண்டுசெயல்கண்டால்
நாட்டடா சுழினையதில் வாசியுடகம்பம்
  நாமான காலதிலே நந்தியுடசெந்தீ
மூட்டடா மூலமதில் முனையானசுழியில்
  முன்காலும் பின்காலும் ஒன்றாகநின்று
ஆட்டடா சக்கரமுஞ் சுழியானவெளியில்
  அடங்காத போதமய மானகுருவாமே. (55)

குருவான ரசவாதங் கருவானவித்தை
கூறுத வித்தைதனை நேராகச்சொல்லுவோம்
திருவான பூரசமும் புனல்ரசமுங்கூட்டிச்
சிவசிவா மகாரசமும் அதனிடையேசேர்த்து
உருவான பச்சையுட னடியானதாரம்
ஓமென்ற பூரமுடன் வீரமதுகூட்டிக்
கருவான காரமுடன் நவமூலமாச்சு
கைகண்ட நவமூலம் ஒன்றாகக்கூட்டே. (56)

கூட்டியே கல்வமதிற் பழச்சாறுவிட்டுக்
கூசாம லீராறு சாமம்வரையாட்டி
நாட்டியே யாட்டினதால் மெழுகதுபோலாகும்
நன்றாக வழித்துருட்டி வட்டதுபோற்பண்ணி
பூட்டியே ரவிதனிலே நன்றாகக்காய்ந்தால்
புதுசான ஓடதனில் வைத்துமேல்மூடி
ஆட்டியே மண்சீலை வலுவாகச்செய்து
அரகரா அம்மென்று கணபதியைப்போற்றே. (57)

போத்தியே புடம்போடு நிதானமதாய்மைந்தா
பூரணமாய் ஒன்றாக நவமூலங்கட்டும்
ஆத்தியே புடமதனை நீயெடுத்துப்பாரு
அப்பனே வட்டதுவுங் கல்லதுபோலாகும்
நீத்தியே ஆடுதற்குக் கல்லானவட்டை
நிசமாக முன்போலே பழச்சாற்றினாலே
காத்துநீ கல்வமதில் நன்றாகஆட்டிக்
கனமாக மூன்றுபுட மிப்படியேசெய்யே. (58)

செய்யடா புடமூன்றில் நவமூலமொன்றாய்ச்
சிவசிவா நீறியது சிவமானகுருவாம்
மெய்யடா சொன்னமொழி நிசமானவித்தை
மேலான வித்தையிது கருவானபொருளாம்
கையடா பதாமற் சிவாயகுருதன்னைக்
கருணையுடன் போற்றிசெய்து கண்ணுணபொருளைப்
பையடா வைத்ததின்மேற் கருமானங்கேளு
பக்தியுடன் பூரணமாய்ப் பணிந்துமிகநில்லே. (59)

இல்லென்ற நிலைதனிலே நிசமாகநின்று
நீமகனே குருவிலொரு பணவிடைகாலெடுத்துக்
கல்லென்ற கமலரச அமுதமதிற் கொண்டால்
காலான வாசியது கண்டமதில்நின்று
ஓல்லென்ற கமலமதில் மேலானதீபம்
ஒடுங்காது வளையாறில் நடுவானமனையில்
வில்லென்ற விசைபோலே வாசிசிவயோகம்
மெய்யாகக் காணுமது கையாரப்பாரே. (60)

பாரப்பா நவமூலஞ் சிவாயகுருதன்னைப்
பணிந்துநீ யுரிமையுடன் பணவிடைதானெடுத்து
ஆரப்பா அறிவார்கள் பரியானதேசி
அரகரா அப்பரிதான் பரமானகுருவை
நேரப்பா பூசியொரு புடமாகநின்றால்
நிசமான மாதுரதி வசமானகுருவாம்
சாரப்பா மாதுரதி குருவையடிபணிந்து
சங்கையுடன் வாங்கியொரு பணவிடைதான்கொள்ளே. ()

கொள்ளடா உதயமதில் மதுவானதேனில்
கொண்டுநீ மண்டலந்தான் குறியாகநின்றால்
அள்ளடா சுபமான கூத்துவனுமோடி
அடிமாண்டு போனயிடம் ஆருமறியார்கள்
தள்ளடா கூத்தனுயி ரடிமாண்டதாலே
தனுவான ஆக்கையிது பிலமானதேகம்
கல்லடா அசையாது வாசிநிலையாகக்
கருவொன்று சொல்லுகிறேன் கண்காட்சிபாரே. (62)

பாரடா வெள்ளியுட தகடதிலேமைந்தா
பசுமையொளி மாதுரதி குருவையதிற்பூசி
நேரடா பூப்புடத்தில் வைத்துநீபாரு
நிசமான தங்கமது வனுவானபொருளாம்
காரடா தாம்பூரத் தகடதிலேபூசி
கருவான பூப்புடத்திற் றணலாறிப்பார்த்தால்
ஆரடா அறிவார்க ளீரஞ்சுபத்து
அழகான வயதுடைய அதிரூபமாமே. (63)

ஆமப்பா விந்துநிலை அரூபமணிவாசல்
ஆருமறி யாததொரு அணுவானகிரகம்
ஓமப்பா ஓமென்ற ஒளியானவீட்டுள்
ஒருநாளும் ஓயாத மெதுவானசத்தம்
காமப்பா வென்றமத சத்தமதினாலே
நடுவான தீபமடா அறிவானபோதம்
காமப்பால் கானற்பால் கொண்டுகெதிகண்டால்
கயிலாச மேருகிரி கண்காட்டிபாரே. (64)

பாரப்பா கயிலாச தெரிசனமுமாகப்
பத்தியுட னின்னமொரு கருமானங்கேளு
ஆரப்பா அறிவார்க ளரிதானவித்தை
ஆதிமய மானதொரு விந்துரசம்வாங்கி
நேரப்பா வெள்வங்க ரசிதமதுகூட்டி
நிசமான வெள்ளையடா பாஷாணநஞ்சாம்
சேரப்பா அந்தயிடை நிசமாகக் கூட்டித்
திருவான கல்வமதி லமுதமதுவாரே. (65)

வாரடா கமலரச முலைப்பாலினாலே
வரிசையுட னரைத்துருட்டி வட்டதுபோற்பண்ணி
நேரடா நீர்வத்த நன்றாகக்காய்ந்தால்
நிசமாய்நீ முன்போலே புடமாகவைத்துக்
காரடா கனலாறி யெடுத்ததனைப்பாரு
கருவான மூன்றுகரு ஒன்றாகக்கட்டும்
ஆரடா அறிவார்கள் கட்டானவித்தை
அப்பனே அந்தயிடை வெள்ளிதனைச்சேரே. (66)

சேரடா வெள்ளியது உருகுமுகந்தனிலே
செம்மையுடன் கட்டினதை அந்தயிடைசேரு
சாரடா குகைதனிலே உருகியதுஒன்றாய்த்
தயவான ரசிதமது குருவாகநிற்கும்
நேரடா அந்தயிடை ரசமதனைவார்த்து
நிசமான வெடிபூரம் நேராகக்கூட்டிக்
காரடா கல்வமதில் நன்றாகமுன்போற்
சேகாமற் றுருட்டி வட்டதுபோற்செய்ய. (67

செய்ததொரு வட்டதுவும் நன்றாகக்காய்ந்தால்
திறமான புதுவோட்டில் வைத்துமேமண்செய்து
கைதவறு மனமாகப் புடத்திலதைவைத்தாற்
கருவான ரசிதமயக் குருவதுவுமாகும்
கொய்ததொரு ரசிதமயக் குருவதுவைவாங்கிக்
குருவான தாம்பூரத் தகட்டதிலேபூசி
மெய்தவறுப் பூரணமாய்ப் புடமதனில்வைத்தால்
மேலான விந்துகளை பதினாறுமாமே. (68)

ஆமப்பா யின்னமொரு சூதானவித்தை
அடிமுடியு மொன்றாக அம்மிதனில்நிறுத்திக்
காமப்பால் தன்னாலே ஆட்டிமிக வழித்துக்
கருவான லிங்கத்துக் கங்கிமிகச்சாத்தி
தாமப்பா மண்சீலை வலுவாகச்செய்து
தாழவொரு சாணளவு புடமாகவைத்து
ஓமப்பா தணலாறி நீயெடுத்துப்பாரு
ஒடுங்காத லிங்கமது ஒடுங்குமிதுமெய்யே. (69)

மெய்யாக இன்னமொரு கட்டுவகைகேளு
மேலான தாரமுடன் நாரலதுகூட்டிக்
கையாரக் கலசமதின் பாலதனாலாட்டிக்
கருவான லிங்கமதுக் கற்புதமேசெய்து
ஐயனே குகைதனிலே வைத்துமேல்மூடி
அடவாக மண்சீலை வலுவாகச்செய்து
துய்யனே நிதானமதாய்ப் புடமதனில்வைத்தாற்
சுகமான சாதிலிங்கம் வலுவானகட்டே. (70)

கட்டான இன்னமொரு கருமானங்கேள்
கருவான உப்புவகை காணா மாட்டார்
தெட்டான ஆதியடா ஆதியுப்பு
சிவமான பூரமடா வீரம்பச்சை
மட்டான சாரமுடன் காரங்கூட்டி
மக்களே அறுசரக்கும் வாய்நீராலே
இட்டமுடன் கல்வமதில் நன்றாயாட்டிச்
சிவசிவா உருட்டியொரு குகையில்வையே. (71)

வையடா வச்சிரமாங் குகையினுள்ளே
வைத்துமேல் மூடிநன்றாய்ச் சீலைசெய்து
மெய்யடா புடமதனில் வைத்துப்பாரு
மேலான உப்புவகை கட்டிப்போகும்
அய்யனே உப்புவகை கட்டித்தானால்
அடங்கலுமுன் வசமதா யாடலாகும்
வையடா மூன்கட்டு லிங்கம்வாங்கி
மாங்கமுட னந்திடைக்கு உப்புச்சேரே. (72)

சேர்த்துநன்றாய் வாய்நீரால் நன்றாயாட்டிச்
சிவசிவா வழித்துருட்டி வட்டுச்செய்து
பார்த்துநீ ஓட்டில்வைத்து மண்ணும்பூசி
பரமகுரு சீர்பாதம் பணிந்துபோற்றி
போத்தியே புடமதனில் வைத்துப்பாரு
பொற்குருவாஞ் சற்குருவைப் போலேகாணும்
காத்துநீ களிம்பான செம்பிலேதான்
கணக்குடனே பத்துக்கு ஒன்றுதாக்கே. (73)

தாக்கிநன்றாய்க் குகைதனிலே உருக்கிக்கொண்டு
தயவான தங்கமதிற் பத்துக்கொன்று
நோக்கியே தான்கொடுத்து உருக்கிப்பாரு
நோயில்லாப் பொன்வகையை யென்னசொல்வேன்
பாக்கியமே தான்கொடுக்கும் பசுமைத்தாயைப்
பக்குவமா யவள்பதத்தைப் பணிந்துமிக்க
ஆக்கியதோர் கருமானஞ் சித்தியாகும்
சுகமான நாகமதின் பெருமைகேளே. (74)

கேளடா நாகமதி லனந்தமுறையுண்டு
இருமையுள்ள நாகமதி லிரண்டுவகைகேளு
கோளடா யில்லாதகரு நாகமொன்று
குருவான செந்நாகம் வலுவானதஞ்சாம்
நாளடா நலமான தினந்தனிலேமைந்தா
நன்றாகக் கட்டியொரு கல்வமதில்வைத்து
வாளடா வலுவாகக் கமலரசம்வாரு
வலுவான ரசமதுவை வணங்குவதுமெய்யே. (75)

மெய்யாக வணங்குமிரு நாகமதுவொன்றாய்
மேலான விந்துரச பாணமதினாலே
கையாரக் கண்டவுருப் போலவசமாகும்
கருவான நாகமது கட்டுவதுமெய்யாம்
செய்யாமற் செய்ததொரு உதவியதுபோலாம்
செயராகு கேதுவது கிரமாகும்பார்
துய்யான வாக்குந்தான் வசமதாய்க்கண்டால் (76)
சுகமான தெரிசனத்தைத் துலக்கினதுதானே.

துலக்கினதோர் கருமான மென்னவென்றாற்
சுகமாகக் கட்டினதோர் நாகந்தன்னில்
மலங்காதே பச்சையுடன் வீரம்பூரம்
மகத்தான வெடிசாரந் துத்தங்காரம்
கலங்காம லெண்சரக்கும் ஒன்றாய்க்கூட்டிக்
கல்வமதில வாய்ச்சால நன்றாயாட்டி
இலங்கவே வழித்துருட்டி யட்டிசெய்து (77)
ஈரமது தான்சுவற வெயிலிற்போடே.

போடப்பா ரவிதனிலே நன்றாய்க்காய்ந்தால்
புதுசான ஓட்டில்வைத்து மண்ணுஞ்செய்து
நாடப்பா காட்டெருவிற் புடத்தைப்போட்டால்
நல்லதொரு நாகமது குருவாய்ப்போகும்
தேடப்பா யிப்படியே மூன்றுபுடம்போட்டாற்
சிவாயகுரு வேகமதை யென்னசொல்வேன்
பாடப்பா பாடுபட்ட பலனேகாணும் (78)
பக்குவமாய்ப் பணவிடைநீ குருவிற்கொள்ளே.

கொள்ளடா கமலரசம் பாலிலேதான்
கூர்மையுடன் மண்டலமே கொண்டாயானால்
அள்ளடா உன்தேகம் வச்சிரமாகும்
அடங்காத வாசியது அடங்கும்வீட்டில்
மெள்ளடா வாசியது அடங்கித்தானால்
மேலான மனையில்வினை யாடலாகும்
நில்லடா அந்தநிலை சொந்தமாக (79)
நிசமான நாதகுரு யேவதகேளே.

வேதையென்ற கருமானம் நிசந்தான்மைந்தா
மெய்யாளுற் பொய்யிதுதா னுருங்காணூர்
பாதையென்றால் வெகுதுலேதா னடக்கப்போமோ
பத்திமனங் கொண்டதொரு பாதையாலே
போதையிலே வெகுதெளிவா மந்த்ராங்கம்
பொருந்திநின்ற சுழியிலொரு சுழியிலேதான்
வாதையென்ற சிவகலை நிறைந்துதானல்
மகத்தான மிருளறுத்துச் சோதிபாரே. (80)

சோதியென்ற தீபவொளி மெய்யாய்க்கண்டால்
சுழியிலொரு பேதமில்லை சுழுத்திவீடு
ஆதியென்ற மாளிகைதான் சுத்தப்பாழாம்
அதனிலொரு வெளியொளியா மண்டவீதி
வீதியென்ற வீதியிலோர் பொய்கையுண்டு
மெய்யான பொய்கையிலோர் சுத்தவெள்ளை
சாதியென்ற ஆண்புசத்திற் பஞ்சவர்ணம்
தனமான பூமலரில் நடுவிருப்பாரே. (81)

பாரான மனையிலொரு மனைதானுண்டு
பரமான அம்மனையை யெட்டிப்பாரு
நேரான திசமுகமா யரூபமான
நிர்மலமா மனோமணிதான் நேரேநிற்பாள்
ஊரான ஊர்ப்பெருமை அடக்கமாக
ஒருநினவா யொருமொழியா யுரைத்தபோது
மேரான மதியமுதங் கரத்தில்வாங்கி
மெய்யாக மகனெனவே புகட்டுவாளே. (82)

புகட்டுவாள் மந்த்ரகலை சோணுவாரி
பூரணமாய்ச் சகலகலைக் கியானமெல்லாம்
பகட்டுவாள் பஞ்சறிவு மொன்றாய்க்கூட்டிப்
பருசுடனே அஷ்டதிக்கும் பணியவென்று
அகட்டுவா ளனுக்கடக்கா லந்தக்காலே
அணையொதுங்கிப் போகாம லமுதம்வாரி
முகட்டுகோர் கடைக்காலே மூலத்தூணி
முத்திபெற்றுப் பூரணத்தில் வாழ்வாயே. (83)

ஆமப்பா பிராணனிலே காணவென்றால்
அரகரா வெகுசுலப மார்தான்காண்பார்
நாமப்பா சொல்லுகிறோம் நன்றாய்க்கேளு
நடுவான அமுர்தமுமொன்றாய்க்கூட்டி
ஓமப்பா ரவிகனலிலே வைத்துப்பாரு
ஒன்றிரண்டு மூன்றுமொன்றா யொடுக்கமாகிச்
சோமப்பால் சுருதியுடன் மெழுகாய்ப்போகும்
சொரூபத்திலே மெழுகதுவைப் பதனம்பண்ணே. (88)

பண்ணப்பா வெகுகடினம் பதனமாகப்
பக்குவமாம் மேருநுனி லடக்கம்பண்ணி
விண்ணப்பா தானேங்கி மவுனமாக
வேதாந்த மெய்ப்பொருளின் மெழுகிலேதான்
உண்ணப்பா கடுகளவு நாவில்வைத்து
ஓமெனவே அந்தமுர்தம் உள்ளேகொண்டால்
கண்ணப்பா சாயாது ஞானக்கண்ணிற்
கருத்துறவே பாயுமடா கண்ணைப்பாரே. (89)

சண்ணான விண்ணொளிய ஞானதீபம்
சணமான தீபமடா பிராணனுக்கும்
நன்றான பிராணனது பிர்மமாச்சு
ஓசையிட்ட நாதமடா சத்தமாச்சு
விண்ணான சத்தமடா காலுமாச்சு
விசையான காலதுகொண் டேறலாச்சு
தண்ணான பிராணனிலே பிடிக்கலாச்சு
தாயான மூலவனல் சார்புதானே. (90)

தானென்ற மூலவனல் சார்புதன்னை
தாரணியி லாரறியப் போறாரையா
கோனென்ற குருமூலம் அறியாமாந்தர்
குவலயத்தில வாய்மதங்கள் பேசிக்கொண்டு
நானென்ற ஆணவமே குறியாயெண்ணி
நல்லோரைப் பெரியோரை நகைத்துப்பேசி
ஊனென்ற உடம்பதனை யறியாமற்றான்
உறுதிகெட்ட மானிடரை ஒதுக்கித்தள்ளே. (91)

தள்ளடா சண்டாளப் பெயர்கள்தன்னைத்
　　தத்துவத்தை யறியாத சவங்கள்தன்னை
அல்லடா அவர்களைநீ கண்டாயானால்
　　அப்பரத்தி லொதுங்கிவிடு அதுதான்போதம்
நில்லடா அறிந்தந்த நிலையைத்தேடு
　　நிசமான தண்டக்கப் பொருளைப்பாரு
செல்லடா அப்பொருளை மேலாயெண்ணிச
　　சிவயோக தீபமதைத் தினமும்நோக்கே. (92)

நோக்கடா பூரணமே யென்றுநீயும்
　　நுண்மையுடன் நோக்கிமன தொருமையானால்
தாக்கடா அப்பொருளை மூலத்தூணி
　　தமரான அனுவாசற் குள்ளேசென்று
தூக்கடா வாசிகொண்டு ஆவிதன்னைச்
　　சுகமானயில்லறத்திற் றாக்கிவைத்தால்
நரக்கடா உண்ணுக்கு மேலதாக
　　நாதநீர் பகீரதியும் வருவாள்பாரே. (93)

பாரப்பா பகீரதிதான் வருஞ்சிங்காரம்
　　பகுத்தறிந்து சொல்வதற்குப் பாரம்பாரம்
தேரப்பா மனந்தேறி அடிமைதானும்
　　தெரிந்தமட்டுங் கூறுகிறேன் தெளிவாய்மைந்தா
நேரப்பா நின்றதொரு கயிலைமேரு
　　நிசமான மேருஅடி முடியிலேதான்
ஆரப்பா அறிவார்கள் அடித்துவாரம்
　　அரிதான துவாரமதை யறிந்துகாரே. (94)

காரப்பா மனதொடுங்கி யுள்ளேசென்றால்
　　கருவான பகீரதிநீர் கடூரமாக
நேரப்பா ஒருமுகமாய்ப் பாயுஞ்சத்தம்
　　நிலைக்கமன முடியாது நிலைத்துதானால்
பேரப்பா கெங்கைமுதற் குமரியந்தம்
　　பெருகியே யெண்முகமாய்ப் பிறந்ததையா
ஆரப்பா அறிவார்கள் துவாரபகீரதியை
　　அறிந்துமன தொன்றுகஅவள் பதத்தைப்போற்றே. (95)

அமிர்தரச மகிமையினாற் பிர்மதிஷ்டி
அப்போதே உண்டாச்சு ஆதிஅதி
குமிர்தம்வாலி சகலகலைக் கியானமொன்றாய்க்
கூடினதோர் பிண்டமடா தேகமாச்சு
திமிர்தவுரு வானதொரு தேகமப்பா
செயல்நாத விந்துவினாற் செனித்தபாகம்
தமரிதுவாய்ச செனித்ததொரு பாகங்கண்டால்
தாரணியில் மலடதுவு மில்லைத்தானே. (104)

இல்லையடா மலடதுவும் வியாதியாலே
இன்னமொரு சோதனைகேள் வியாதிபோகக்
கொள்ளையடா அம்பலத்தின் கரிசலுப்பு
கொண்டுநீ ரொன்றாகக் குணமாய்ச்சேர்த்துத்
தில்லையடா பூரமதிற் பத்துக்கொன்று
சேர்த்துநன்றா யாட்டியொரு வட்டுச்செய்து
சுள்ளையென்ற ஓட்டில்வைத்துப் புடத்தைப்போடு
சுகமான கரிசலுப்புப் பற்பமாச்சே. (105)

ஆச்சப்பா பற்பமதை யெடுத்துமைந்தா
ஆயிழைதான் மாதவிடை யானபோது
பாச்சப்பா விராகனிடை பத்துநாளும்
பதிவாகக் கொண்டதினாற் குடிலம்போச்சு
மூச்சப்பா உண்டாகிக் கெற்பமாச்சு
மூவுலகும் ஆள்வதற்குக் கெதியுண்டாச்சு
பேச்சப்பா பேசுதற்கு நாவுண்டாச்சு
பிலமான அப்புஉப்புப் பெருமைதானே. (106)

பெருமைவிட்டு உரிமையதா யுலகந்தன்னிற்
போரான நாதவிந்து செயலைக்கண்டு
அருமையுடன் யெடுத்தாட்ட நாவோயில்லை
அரகரா அபமிருத்து அசந்துபோச்சு
உருமையுடன் பிரமலபி விலக்கலாச்சு
ஓசையிட்ட நாதமதுக் குயிரதாச்சு
வருமையென்ற மாயையெல்லாம் மாண்டுபோச்சு
மகத்தான சிவயோக வாழ்க்கைதானே. (107)

தானென்ற தண்டகந் தன்னைப்பார்த்துச்
சார்பாயா யிரமுமைந் நூறும்பாரு
கோனென்ற யோகமிரு நூறும்பாரு
குணமான விநோதவகை நூறும்பாரு
தேனென்று வயித்தியமும் பட்சணியும்பாரு
திறமாக முப்பூமுப் பதும்பாரு
நானென்ற பரிபாஷை பதினெட்டோடு
நலமான சோதியமோ பத்தும்பாரே. (108)

பாரப்பா பத்திகொண்டு பத்துவகைசூஸ்திரம்
பாதாதி கேசமுதற் பார்த்ததினால்மைந்தா
நேரப்பா ஏமகூட பருவதமேலேறி
நிசமான கயிலாச நடுவரையில்நடுவாய்
காரப்பா அதனிலொரு கற்பூரதீபம்
கயிலாச மேருகிரி தீபமெனலாகும்
தேரப்பா மனந்தேறி மனோமணிதன்பாதம்
தெளிந்துமனங் கொண்டதினாற் சித்துமயமாமே. (109)

சித்தான கருமானந் தண்டகந்தன்னை
தெளியாத மாந்தரிடஞ் செப்புவதால்மைந்தா
பத்தான திசதீட்சை பதிவானவீடு
பாழாகிப் போகுமென வேதமதுவோதும்
மூத்தான கருமானந் தண்டகப்பொருளை
முன்னிலையாய் மவுனமுடன் முழுதுமிதைப்பாரு
வத்தாத யோகமடா சிவயோகதீபம்
மைந்தனே தூண்டாத தீபமதைப்போற்றே. (110)

போத்தடா பத்துவகைச் சூஸ்திரமொன்றாகப்
புத்தியுடன் கோர்வைதனைப் பூரணமாய்ப்பார்த்தால்
நாத்திசையும் வெல்வதற்குக் கருமானந்தோணும்
நாலான காரியமும் வகையுடனேகாணும்
பாத்துநீ மகிழாமற் கேவலமாய்நின்றால்
பரமான கயிலாசம் பாங்காகத்தோணும்
காத்துநீ கயிலாச வாசல்தனைக்கண்டால்
கண்ணான நடுமனையிற் கமலமதுமுற்றே. (111)

இராமதேவர் தண்டகம் ௱௰ முற்றிற்று.

கொள்ளப்பா முன்னீரா லரைத்துசாமம்
குணமாகக் குக்குடமாய்ப் போட்டெடுக்கத்
தெள்ளப்பா குருவாகுந் துருசுசெம்பில்
திறமாக உருக்கியிடை குருவைத்தாக்கு
மெள்ளப்பா அதைவாங்கித் தட்டத்தூளாம்
வெள்ளியது நால்சேர்த்து ஊதிப்போடு
நல்லதங்க மூதினதோ ரிடைக்குச்சேரு
நலமாக உருக்கியே தகடுதட்டே. (4)

மெல்லவே கல்லுப்புப் பலமும்நாலு
மேன்மைபெற்றச் செங்கல்மா மூன்றுமாகும்
கொல்லவே பொடித்துமிதற் குள்ளேவைத்துக்
கொடுமையாய் மூன்றுபுடம் போட்டுவாங்கு
மல்லாதிப் புடமிறங்குந் தங்கந்தானும்
மயமாகுங் கொண்டிடவே வெண்மையாக
எல்லவர்க்கும் மேலான குருவைப்பேணி
யின்னமதின் பாகமதை யியம்பக்கேளே. (5)

கனகமது ரெண்டிடைதா னிறங்குமந்தக்
கனகத்தை யெடுத்துமெள்ள வித்துக்கொள்ளு
இன்மத்த யிடந்தனிலே நின்றுவாழு
மினிதான ஞானத்தி னியல்புபாரு
உனவுடனே ஆறுதல மேறிப்பாரு
உத்தமிதாய் வந்துநிற்பாள் உலகந்தன்னில்
சனகனருள் பெறுவீரா மிந்தப்போக்குத்
தாஷ்டிகவான் யாக்கோப்புச் சொன்னவாறே. (6)

சட்டியிட்டு யிரும்புஅரப் பொடியும்பத்துத்
தாக்கிவிடு தாளகமவ் விடையேசேர்த்துக்
கொட்டிவிடு கலயத்தி லிட்டுப்பாணீ
குணமாக நாளொன்று அரைத்தெடுத்து
முட்டியிட்டு யிரும்புஅர பொடியும்பத்து
முடிவாகத் தாளகமவ் விடையேசேர்த்து
ஓட்டிவிடு குகையிலிட்டு உருக்கிப்பாரு
உருதிபெறக் கல்நிற்கும் உற்றப்பாரே. (7)

எடுத்துப்பா ரிருப்பதுவுங் கழிந்துநல்ல
　　யிதமான தாளகத்தி னியமாகும்
அடுத்துநிறு காலாகும் வீரம்போட்டு
　　அதையரைத்துப் பொற்றலையின் நீரினாலே
விடுத்துப்பார் வில்லைபண்ணிப் புடமூன்றிட்டால்
　　விதயாகச் செந்தூரம் பூப்போலாகும்
கொடுத்துப்பார் துருசனுட செம்பில்நூறு
　　குணமாக வொன்றிடவே யேமமாமே. (8)

ஏமமாம் பணவிடைதான் தேனிலுண்ண
　　யிருந்தவிடந் தெரியாது சிலேற்பனங்கள்
காமமா யிகுதியுறும் வாயுவெல்லாங்
　　கடற்புக்கும் பித்தமுந்தான் காணுதோடும்
வாமமாம் பெண்கள்தான் மயங்குவார்கள்
　　வடிவதுதான் செவ்வலரி போலாம்மேனி
சோமன்போ லாகுமிந்தச் செந்தூரந்தான்
　　சொல்லரிது யாகோப்புச் சொன்னதாமே. (9)

கருநாகந் தனைக்கரண்டி தன்னிலிட்டுக்
　　கரிதனிலே உருக்கிஅசம் நீரிற்சாய்த்து
வருநாகஞ் சுத்தியதாம் குகையிலிட்டு
　　வலகயாக உருக்கியிடை அரிதாரத்தைப்
பரிவாகக் கிராசமிடு நொறுங்கும்நல்லாய்ப்
　　பார்த்துயெடு கல்வமிட்டு அரையன்னத்தால்
சிறுசாக வில்லைபண்ணி அங்கியிட்டுத்
　　திடமாக மாளமட்டும் புடத்தைப்போடே. (10)

போட்டுபுடஞ் சிவக்கமட்டும் போட்டெடுக்கப்
　　பொறுமையுடன் செம்பருத்தம் பூப்போலாகும்
தாட்டிகமா யெடுத்துவைத்துத் துருசுச்செம்பில்
　　தனையுருக்கி யிடைகொடுக்கத் தூளாய்ப்போகும்
காட்டாதே யித்தூளை மதியில்லாவில்
　　கணக்காக வொன்றிட்டு ஊதிப்போட்டு
வாட்டமுடன் யேமமிடை சேர்த்துருக்கு
　　வலகபாசத் தகடுதட்டிப் புடத்தைப்போடே. (11)

இறங்குமது திரியிடையி லொன்றுதப்பும்
இதமாக வெடுத்துவித்துச் செலவுசெய்து
திறங்களது குன்றுமற் செந்தூரத்தை
நிர்ணயமா யுண்டிடவே காயந்தானும்
உறங்குமது தாதுக்க ளிருகிப்போகும்
உதிரத்தின் நோயெல்லா மொழிந்துபோகும்
வரங்களது முண்டாகு மயக்கந்தீரும்
வழுத்தினார் யாகோப்பு வசனித்தேனே. (12)

எப்படியும் பிழைப்புக்கு வாதஞ்சொன்னேன்
இறைவனின் கிருபையதா லின்னஞ்சொல்வேன்
செப்பமுள்ள மக்கமதி னத்துக்கேகி
திரும்புகையில் மெய்யென்ற தேகந்தன்னை
இப்புவியில் நெடுநாளா யிருப்பதற்கு
எத்தனையோ பாகமது சொல்லிவைத்தேன்
முப்பொருளை யறிந்துநீ சுண்ணமுப்பு
முடிப்பதற்கு வகையான கூத்துத்தானே. (13)

கூத்தனிடை வாழ்மடந்தை யிடையேசேர்த்துக்
குழிக்கல்வ மிட்டரைத்து யெருக்கம்பாலால்
நேத்தியதா யரைத்துருட்டிக் கதிரில்வைத்து
நேருள்ள அப்பிரகம் வீரங்காலாம்
பார்த்துமரை பாணியதால் வெண்ணெய்யாகும்
பதிவாகப் புடமிட்டு யெடுத்துக்கல்வம்
சேர்த்துஅரை பாணியுமுன் னுண்டையேலே
செப்பியிடு உண்டையொன்று கவசம்நாலே (14)

கவசமது கட்டிஅன்னந் தன்னிலிட்டுக்
கனியவதை மேல்மூடிச் சுண்ணத்தாலே
துவசமெரி அடுப்புதனிற் கடோரமாகத்
தூக்குபிரு சாமமெரித் தெடுத்துப்பாரு
நவசமது மேற்கவசம் பிரித்துத்தள்ளி
நாடியெடு குழிக்கல்வ மிட்டுநன்றாய்
உவசமதா யுண்டையிடை யிரதஞ்சேர்த்து
உண்மையுள்ள வீரமது அரைக்கால்போடே. (15)

போட்டுபச்சைக் கற்பூர மரைக்காலிட்டுப்
புகலரிய அன்னமென்ற சோத்தாளாட்டி
நீட்டுவில்லை அங்கியிட்டு யெடுத்துமேலே
நிலவரமாய்த் துணிசுத்திச் சுண்ணமுப்பும்
காட்டுமதை யரைக்கட்டு பெரியதாகக்
கருத்துறவே புடம்போடக் குருவுமாகும்
தேட்டிவரும் சொன்னேன்யா கோப்புயானும்
திறமாகக் களங்கமிது செய்துபாரே. (16)

களங்கத்தைத் துருசுடனே செம்பிரண்டிற்
கணக்காக வொன்றிடவே பொடியுமாகும்
உளங்குளிர மதியதனை ஊதிப்போடு
உண்மையுள்ள பட்டமதிற் பாதியேமம்
தளம்பவதைத் தகடடித்துப் புடங்களிட்டாற்
றப்பாமல் யேமமாம் தாக்கியாடும்
பளம்பழுத்த வாறுக்கும் வாதமாகும்
பதிவான யாகோப்புப் பலன்சொன்னாரே. (17)

பொய்யாது வாதங்கள் களங்குமார்க்கம்
போக்கோடே செய்தாக்கால் யேமமாகும்
வையகத்திற் காட்டாதே செயலைத்தானும்
வடிவான பொருளறியார் மாடுமொக்கும்
மெய்யாகச் சொன்னாலும் விருத்தமாண்பர்
மேதினியிற் பொய்யென்பார் முழுமூடர்தான்
கைதனிலே வெண்ணெய்தனை வைத்துக்கொண்டு
கனிவாக வுருக்கறியார் கருத்திலாரே. (18)

அரிதாரம் நாற்களஞ்சி அயமும்நேராய்
அதையரைத்து உருக்கிமெள்ளக் கல்வத்திட்டு
பெரிதான நாகமது களஞ்சிநாலாம்
பிசகற்றால் வீரமிட்டு நையத்தட்டி
விரிவாக அரைத்துநாக மல்லிச்சாற்றால்
விதமாக வில்லையங்கு புடமுமிட்டால்
குறிபோலா மஞ்சளது யெல்லாம்பற்பம்
கூட்டியெடு முன்அயத்தி விடையேசேரே. (19)

இடைசேர்த்துப் பொற்றலைபா லாட்டிவில்லை
　　யெடுத்துகதிர் காயவைத்துப் புடமூன்றிட்டுத்
தடையறவே சிகப்பாகு மெடுத்துநல்ல
　　தக்கமுள்ள தருசுரவி மட்டம்போலாம்
விடையாகச் சேர்த்திடவே யேமமாகும்
　　வெற்றிபெறப் பணவிடைதான் தேனிலுண்ணத்
தடைபடா நோயெல்லாந் தவறிப்போகும்
　　தாட்டிகமாய் யாகோபு சொன்னவாறே. (20)

குருட்டுநாய் யீசலைத்தான் தாவித்தாவி
　　குணமற்று ஊளையிட்ட குணமதாகும்
திருட்டுநாய் சிறுவீட்டி னுள்ளேசென்று
　　திடமாகக் கதவடைத்து அடிபட்டாப்போல்
இருட்டறைக்குட் புகுந்தகள்ளன் பிடிபட்டாப்போல்
　　இனமாகக் கைபாகந் தெரியாமாண்பர்
உருட்டுகின்ற தேங்காயை நாய்போலொக்கும்
　　உண்மையாய்ச் சொன்னேன்யா கோபுதானே. (21)

சரக்கதனை யரைக்கவதன் காரந்தாக்கிச்
　　சரியாகக் கண்சிவந்து குதறிற்றானல்
பரக்கவெடு வெண்கலத்தின் கிண்ணிதன்னைப்
　　பாங்காகக் கவிழ்த்துபழச் சாற்றையூத்தி
உரக்கவுரைத் துருப்பிடித்த வட்டிதன்னில்
　　யுரைத்துமே களிம்பாக்கிக் கண்ணிலிட்டால்
சூரைகண்ணி லிட்டிடக்கண் வலியுந்நீங்கும்
　　குற்றமற யாகோபு குணஞ்சொன்னாரே. (22)

வாதவயித் தியந்தன்னை யொருவருக்கும்
　　வகைகாட்டில் நரகமது உனக்குமாகும்
வேதமது நால்வேதத் தொகுப்பாய்நின்ற
　　வினையுமுள்ள கைபாக மறியவேணும்
யோகம்வந்து ஒருபொருளைக் கற்றுக்கொண்டால்
　　ஊமையதை ஒருவருக்குஞ் சொல்லப்போகா
சூத்முனி யிம்மார்க்க மருளிச்சொன்னார்
　　சுயமாக யாகோபு சொன்னவாறே. (23)

வாருனக்கு உலகத்தில் வாதஞ்சொல்லி
மைசயான பண்டிதமும் வகையுஞ்சொன்னேன்
சாருமேவன் கைபாகம் வரிசைபாரு
சரிவரவே களங்குமுதற் சாட்சிசொன்னேன்
பேருலகு தனில்மாட்டு நடப்பும்பார்த்துப்
பேதாமே தங்கமெல்லாம் பெருமைகண்டு
காருலவு பரிகாரம் முன்னேசெய்து
கர்த்தனுட வாதத்தைப் பின்புசெய்யே. (24)

வாசுகியி னிடைசமமாய்ச் சாரிசேர்த்து
வட்டமிட்டு உருக்கிவிடு அன்னந்தன்னில்
நீசமறச் சாய்த்துவெடு ரெண்டுபத்து
நிலவரமாய்க் களிம்புஅறுங் குகையிலிட்டு
ஆசையுடன் அரிதார மிடையேதாக்கு
அதுகருக்குங் கலவமிட்டு அன்னந்தன்னால்
தாசமற அரைத்துவில்லை கரியில்வைத்துத்
தாட்டிகமாய்ப் புடம்போட்டு யெடுத்துப்பாரே. (25)

எடுத்தன்ன மிதிலிட்டுச் சாமமெட்டு
யிழுத்தரைத்து இப்படியே சிவக்கமட்டும்
அடுத்துவிடு செந்தூரம் முருக்கம்பூப்போல்
அதையெடுத்துத் துருசுரவி நூறொன்றிட்டால்
கொடுத்துவைத்த யேமமா மிந்தவித்தை
கொள்ளைகொள்ளை யாயிருக்கும் வாதமாட்டு
தொடுத்தகை பாகத்தை மறக்கவேண்டாம்
தொல்லுலகில் ரசவாதத் தொழிலுமாமே. (26)

கண்டுவெடு பணவிடைதான் தேனிலுண்ணக்
கதிர்மதியாந் தேகமது கற்றூணாகும்
தொண்டுசெய்வா ருலகத்தோர் சொல்லவேண்டாம்
தோகையர்தன் வசமாவார் துலங்கத்தானும்
பண்டுசெய்த பழவினைகள் தீர்ந்துநல்ல
பதிவான பிணியகலும் கடலேபுக்கும்
வண்டுமயிர் போலாகும் பாகமாக
வழுத்தினூர் யாமோப்பு வண்மையாமே. (27)

நாகமது பவளம்போற் கலருதானும்
நற்சிகப்புச் செந்தூரம் அலரிப்பூப்போலாம்
பாரமது சுண்ணமுமல் லிகைப்பூப்போலாம்
பதிவான மெழுகதுதா ளிளக்கமாகும்
தாகமது தயிலந்தான் நிறங்கறுப்பு
தாஷ்டிகமாய் நிறங்களறி மருந்துதன்னை
யோகமது வந்திடுங்காண் பாகமாகும்
யூகமாய் யாகோபு உரைத்தேன்பாரே. (28)

சத்தெடுத்தாற் கறுப்பாக விருக்கும்பாரு
சரியான வயஞ்சேர்த்தா லிப்படிக்கு
முந்தான வெள்காரஞ் சேர்த்துருக்க
முடிவான அயச்சட்டை நீக்கும்நீக்கும்
நத்தியே சத்துநிறஞ் சிவந்துகாணும்
நலமில்லை யென்றுமே மயரியவேண்டாம
சித்தான அயத்திலுள்ள செம்பெடுத்தாற்
சீமானைப் போகலாந் தெளிந்துபாரே. (29)

நல்லாகச் சிவந்தசத்தைக் கல்வத்திட்டு
நலமான புகைநீரை விட்டுப்பார்க்க
எல்லாமுந் துருசதுபோல் நீலமாகும்
இதனைவைத்து உருக்கிடு லோடிப்போகும்
வல்லமையாய்க் கேசரியைச் சட்டியிட்டு
வகையாக உருக்குமுகந் தன்னிலீயச்
சல்லாப மாய்ச்சாயம் வைத்தெடுத்துத்
தாம்புரத்தில் மெய்க்களங்கு தாக்கிடாயே. (30)

இழுத்ததொரு செம்பைத்தான் காரஞ்சேர்த்து
இயல்பாக உருக்கிப்பார் செம்புமாகும்
வழுத்தவே மதியேழு செம்புமூன்று
வகையாகச் சேர்த்துருக்கித் தங்கஞ்சேர்த்து
அழுத்தமுள்ள தங்கம்டா ஆணிக்கொக்கும்
அடவான செம்பிடைக்குத் தங்கங்கூட்டிப்
பழுக்கஅடி தகடாக அடித்துநீயும்
பாங்காகக் களங்குபண்ணிற் சித்தியாமே. (31)

அடுத்துநின்ற அயச்செம்பிற் றங்கந்தானும்
அடவாகப் பிறந்ததினால் நிறத்தைக்கேளு
கொடுத்துவைத்தப் பசுமையாம் நிறங்குன்றாது
குணமான யீயத்திற் பிறந்ததங்கம்
நடுத்தரமாம் நிறங்கேளு அணிக்கொப்பாகும்
நலமான தாளகத்திற் பிறந்ததங்கம்
பழுத்துமே பழுப்பான தங்கமாகும்
பகரிய கெந்தகத்தின் பரிசுகேளே. (32)

நல்லாகச் சாணாக் காசுமாகும்
நலதங்க மாயிருக்கும் நாட்டம்பாரு
சொல்லான முன்னோர்கள் சொன்னசொல்லைத்
துப்பறவாய்ச் சோதித்துப் பார்த்துச்சொன்னேன்
எல்லாமுஞ் சூதத்திற் பிறந்ததங்கம்
இயல்பான பீர்க்கம்பூ நிறமதாகும்
பல்லாமல் வீரத்திற் பிறந்ததங்கம்
பாலான வெள்ளைநிற மாகுந்தானே. (33)

உண்டான தங்கத்திற் பிறந்ததங்கம்
உறுதிபெற நிறமதனை சொல்லக்கேளு
கண்டான தங்கம்போல் நிறமுமாகும்
கருத்தான தாயைப்போற் பிள்ளையாகும்
பண்டான நிறஞ்சொன்னேன் பதிவுகண்டு
பக்கமுள்ள நீறுதற்கு உபாயஞ்சொல்ல
பண்டான வேதைமுகங் கண்டுயாகோப்
பாகமதைச் சொல்லுகிறேன் பரிந்துகேளே. (34)

எல்லாமும் நீற்றுதற்கு உபாயங்கேளு
எரிபுனுகு வீரமொடு பூரம்வண்டு
வல்லான உரஞ்சூதஞ் சவுக்காரந்தான்
வகையான கார்முகியுஞ் கூடனோடு
நல்லாக யிதுசேரிற் பொருமிநீறும்
நாதாக்கள் சொன்னஇந்த நாட்டப்போக்குச்
செல்லாத யிடங்களிலே செலுத்தாதென்று
செப்பினார் யாகோபு திறமிதாமே. (35)

உண்டான களங்குகள்தான் செய்தபோது
உறுதிபெறப் புடம்போட லாகாதென்று
கண்டவுடன் சாக்கெல்லாஞ் சேர்த்தரைத்துக்
கனிவாகக் கதிரில்வைத்துக் காயப்போட்டுப்
பண்டான சுடர்கொடியோன் பலமெடுத்துப்
பதிவாக நாலாகப் பிரித்துநீயும்
முண்டாகக் கொழுத்தியே களங்கையிட்டு
முதிராம லஞ்சுதரம் வாட்டிக்கொள்ளே. (36)

வாட்டியே குகையிலிட்டு உருக்கித்திரு
வகையாகக் காரமது கூடச்சேர்த்துக்
கூட்டியே உருக்கிடவே சத்தின்னின்ற
குணமானக் கசடகலும் சிவந்துநிற்கும்
தாட்டிகமாய்ப் புகைநீரை விட்டுநீயும்
தன்மைபெற நாளெட்டுப் பார்க்கும்போது
நீட்டிவிடும் நீலம்போற் குழம்பாய்நிற்கும்
நேராக வொட்டிடவே யெரித்திடாயே. (37)

நல்லாக யெரித்திடவே உருகிநிற்கும்
நாட்டிலே யிச்செம்பை யெடுக்கக்கேளு
வல்லமையாய்த் துருசினுட செம்புருக்கு
வகையாக இடைக்கிடைதான் கிருசம்போடு
வெல்லவதை யிழுத்திடுங்காண் மட்டஞ்சேரு
விதமாகத் தங்கத்தைச் சேர்த்துலூக
எல்லாமுந் தங்கமாம் நேர்மையாரு
இதமான யாகோபு யெழுதினாரே. (38)

சொன்னபடி செம்புதான் வருகாப்போனால்
சொற்பெரிய வங்கத்தை வெடியுப்பாலே
முன்னமே சொன்னபடி வுருக்கிச்சேர்த்து
முக்கியமா யுலைவைத்துச் சுத்தினாடே
நன்னயமாய்ச் சேர்த்தவாத்து உருக்குத்திரு
நல்லசெம்பு பிடித்திழுக்கு மதியிற்றுக்கு
கன்னல்போல் மதிதன்னிற் றுக்குத்தங்கம
கனிவாகச் சேர்த்தூதத் தங்கமாமே. (39)

நல்லாகச் சத்தில்நின்ற செம்புதானும்
நாடியே வருகாமற் போனாற்கேளு
உல்லாச மானகே சரியைத்தானும்
உத்துமே சட்டியிட்டு உருகும்போது
வில்லாகப் புகைநீரிற் பிரிந்துநின்ற
உறுதியாய்க் குழம்புதன்னை யதிலேதாக்கு
கல்லாகச் சேர்த்தசெம்பை யிழுத்துக்கொள்ளும்
கழிந்துமே மதிதனிமேல தாக்கிப்பாரே. (40)

அடுத்தநின்று சேர்த்தசெம்பு மதியிற்றானும்
அடைவாகச் சென்றபுக்குந் தங்கஞ்சேரு
கொடுந்துருக்கித் தகடுதட்டிப் புடத்தைப்போடு
குணமுள்ள தங்கமிரண் டிடையுநிற்கும்
படுத்துமே போகாது களங்குதங்கம்
பார்க்கடையிற் சொல்லிவிட்டேன் கைபாகந்தான்
எடுத்தாக்கா லெப்படியும் பலனுமாகும்
ஏழையாம் வாதிக்குச் சொன்னவாறே. (41)

சத்திலுள்ள செம்பெடுக்க வியச்செம்பு
சரியான கேசரியு மூன்றுபேரும்
நத்திபிடித் தெடுத்துமெடுக் காமற்போனால்
நலமான தங்கமில்லை பிரட்டிலோர்க்கு
முத்திபெறச் சத்திலாச் செம்பைச்சேர்த்து
மூவுலகும் மச்சமதி தன்னிலீந்தால்
சுத்திநிற்குத் தீயைவிட்டுச் செம்புதானும்
துரிதமாய்க் கழன்றுவிடுந் திண்ணந்தானே. (42)

களங்குசெய்து புடம்போட்டு யெடுக்கவேண்டாம்
கனிவாகச் சூடனுட தீயில்வாட்டு
உளங்குளிரச் சாகாது உயருமாத்து
உயர்வான லோகமுந்தான் பழுத்துப்போகும்
வளங்களாய் வாட்டயிலே நெருப்புமிஞ்சில்
வடிவாக வில்லையது உதித்துப்போகும்
தளங்கள்பெற வுறத்தூது நன்றாய்த்தானே
தடையறவே தப்பினுங் கருமமாமே. (43)

நல்லறிவாய் யுபரசங்கள் நவலோசங்கள்
நாடதிலே பாஷாணங் காரசாரம்
சொல்லுமுனே சூதமுதற் செந்தூரிக்கச்
சுருதிபெற மால்தேவி சிலைதான்கெந்தி
கல்லான கெவுரியப் பிரகந்துத்தம்
கடிதான வெடியுப்பு யிவைகள்சேரில்
உல்லாச மாகவிது சேர்த்தாளுகில்
உண்மையா யெல்லாமுஞ் சிவந்துபோமே. (44)

சாயமா யினச்சரக்கைச் சாற்றக்கேளு
தடையுற்ற வுப்போடு நாகந்தங்கம்
மாயமதா யிரும்போடு நிமிளை சூதம்
வடிவுபெறக் கெவுரியுட வர்னமாகும்
நாயமா ரிதையறிந்து சொன்னாரப்போ
நான்பார்த்து உங்களுக்கு நடத்தைசொன்னேன்
காயமது நிலையில்லை கண்டுமுன்னே
கணக்காகச் செந்தூர முண்டுதேறே. (45)

எச்சரக்குங் கட்டவொரு செய்திகேளு
இனியவெடிச் சுண்ணத்தாற் சரக்குக்கட்டும்
தடையற்ற திராவகத்தால் சரக்குக்கட்டும்
தற்செயலாந் தயிலத்தாற் சரக்குக்கட்டும்
இச்சையுடன் செயநீராற் சரக்குக்கட்டும்
இதமான மெழுகாலே சரக்குக்கட்டும்
நச்சரவ மூலிகையாற் சரக்குச்சாகா
நாகரிக யாகோபு நலஞ்சொன்னேரே. (46)

சத்துருக்குங் காலமதைச் சாற்றக்கேளு
சரியான ஐப்பசிகார்த் திகையுமாகும்
பத்துருக்கு மார்கழியு மிக்காலத்திற்
பதியவே உருக்கியெடு எலும்புபோலாம்
நத்தியே உபசரங்க ளெல்லாஞ்சத்தாம்
நலமாக முன்னோர்கள் சொன்னசொல்லை
நித்தியமும் பார்த்தறிந்தே னிவைகளெல்லாம்
நிதானித்தேன் யாகோபு நிசஞ்சொன்னேனே. (47)

குருமுடிக்குங் காலமது மாசியாகும்
குணமாகும் பைங்குனியுந் தையுமாகும்
வருகுமது செயநீருங் கேணிநீர்போல்
வாகாக யெடுக்கெடுக்க வெள்ளமாகும்
திருமுகமாஞ் சரக்கெல்லாங் கட்டுங்காலம்
க்ஷணத்திலே வாதமுமாஞ் செயலோமெத்த
உருக்கினமுங் கட்டினமும் நல்லதாகும்
உளத்துமுறை யாகோபு வோதினூரே. (48)

செந்தூரக் காலமது ஆடிமாதம்
சிவந்திடுமா வணிபுரட் டாசிதன்னில்
அந்தமுடன் புகைநிற்குங் காலமாகும்
அறிவாயக் காலத்திற் செய்துகொள்ளு
வந்தவொரு காலத்தில் வண்மையாகும்
வகைகண்டு சரக்குமுதல் சிவந்துநிற்கும்
முந்துவினை காலத்திற் செந்தூரத்தை
முனிவாக வுண்டிடவே சித்தியாமே. (49)

புடம்போடுந் திட்டங்கள் பேசக்கேளு
பேரான யெருவொன்று காடையாகும்
நடம்போடுங் கவுதாரிப் புடமுநல்ல
காடியே யெருமூன்று ஞானிக்குத்தான்
விடம்போடு பத்தெருவிற் புடமுமாகும்
விராட்டிதான் வனத்தின் செயலுக்குத்தான்
கடம்போடு அறைதோறு மமுக்கிநல்ல
கனமாகப் போடவது கணக்குமாமே. (50)

திட்டமா யெருநூறு கனபுடந்தான்
திடமான கெசபுடமும் ஆயிரந்தான்
வட்டமா யடுக்கிபுடம் போட்டெடுத்தால்
வதையாமற் சாரவரும் பரிவுமெத்த
விட்டகுறை வந்தாலோ கிட்டும்பாரு
விடுபடா திருந்தாக்கா லெல்லாம்பாழாம்
சட்டமதா யாமுய்ந்து நூல்கள்பார்த்துத்
தாக்கினூர் யாகோபு தன்மைதானே. (51)

சுண்ணமது செய்யவென்றால் துருத்தியொன்று
　　துடியாக ரெண்டானால் உருக்கலாகும்
நன்னயமாய்ச் சத்துயென்ற செம்புக்குத்தான்
　　நாட்டிடுநீ நால்துருத்தி நல்லதாகும்
கன்னல்போ லுருகியது சத்துமாகும்
　　களிம்பறவே யுருக்கிற்பொன் நிறம்போலாகும்
இன்னிலத்திற் பாகமது யியல்புமெத்த
　　இருந்துரைத்தார் யாகோபு யினியவாக்கே. (52)

பதங்கமது வைப்பதற்கு யெரிப்புக்கேளு
　　பதியவொரு விறகதுதான் தீபமாகும்
விதங்களாம் விறகிரண்டு கமலமாகும்
　　விரும்பஞ்சாம் விறகுகாடாக் கினியுமாகும்
அதங்களாம் முட்டீயு மருளிச்செய்தேன்
　　அருள்பெருகும் பற்பஞ்செந் தூரமெல்லாம்
இதமாக விட்டுவிட்டு யெரிக்கவேண்டாம்
　　இன்பமாய் யொருவிதமா யெரித்துக்கொள்ளே. (53)

சத்துருக்கும் குகையதனைச் சொல்லக்கேளு
　　சரியான பொருக்குமண் ணீராறும்
நத்தியிடும் உமிக்கருக்கு ஆறதாகும்
　　நலமான கழுதைமலம் ரெண்டதாகும்
முத்திடும்வெண் கற்பொடிமா விரண்டிேனாடு
　　முனிவான சீலைசுட்ட சாம்பல்ரெண்டு
நித்தியமாய் கடுக்காயின் கஷாயத்தாலே
　　நிலைக்கவிடு வுரலிலிட்டு மூசைபண்ணே. (54)

பண்ணிடுநீ குகைபண்ணி யதிலேவைத்தும்
　　பதிவாக உபரசங்கள் உருக்கிப்பாரு
தண்ணீர்போ லுருகுமது குகையும்போகா
　　தாக்கியெடு கிழியாது உறத்துநிற்கும்
விண்ணிவிடி விழுந்தாலு முடையாதப்பா
　　விரும்பியிந்தக் குகையிலிட வலுவுமெத்த
உண்ணமது உபரசங்கள் சத்துமாகும்
　　உத்துணர யாகோபு உரைசெய்தாரே (55)

சொல்லாய்ந்த பெரியோர்கள் சொன்னசொல்லைத்
துறந்தார்கை பாகமதாய்ப் பார்த்துத்தேறி
நல்லாய்ந்து நூல்வளமை கண்டுதேறி
நாட்டினேன் யெழுநூற்றுச் சொட்சமாக
வல்லவர்கள் காண்பார்கள் சாஸ்திரத்தை
வகையில்லார் காணவுமே மாட்டாரென்று
உல்லாச மாகவேதான் வாழ்வீரென்று
உறுதிபெற்ற யாகோபு உண்மைதானே. (56)

ஒருதரத்துக் கிருதரமாய்ப் பார்த்துப்பாகம்
உறுதியெடு பாகம்வரும் மெழுகுமாகும்
பெருகுமது பாகம்வந்தா லனேகலாபம்
பெற்றிடுங்காண் ரசவாத வித்தைதானும்
திருகுவது வாராமற் செய்துதேறு
திட்டமுடன் வயித்தியங்கள் நன்றாய்ப்பாரு
குருவதுதான் நூலாகும் படித்துத்தேறு
கொட்டினேன் யாகோபு குறிப்புத்தானே. (57)

யாக்கோப் வாத சூஸ்திரம் ௭௦௦,

முற்றிற்று





மதுரை வடக்குப்பெருமாள் மேஸ்திரி வீதியிலிருக்கும் உலக சுந்தரம்பிள்ளை அவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ
குமரன்றுணை.

அறுபத்தொன்பதாவது:

சதோககாதரென்ற யோகச்சித்தர் திருவாய்மலர்ந்தருளிய

# ஞான சூஸ்திரம் ௰௭.

சுழியான முனைகண்டு சோதிகண்டு
தூயமணி முச்சுடரி னொளியுங்கண்டு
வழியான முக்கோண வீட்டைக்கண்டு
வல்லபையுங் கணேசனையும் வணங்கிப்போற்றி
களிப்பான சிவயோக மதனைத்தானுங்
காட்டிடுவே னென்மகனே கருத்துள்ளோனே
வெளியான வெளிகண்டு மவுனங்கொண்டு
மெய்ஞ்ஞான பொருள்கண்டு விளங்குவாயே. (1)

விளங்கவே மனஞ்சிவத்தை நாடும்போது
விற்பனமா யின்னமொரு கருவைக்கேளு
துளங்கவே ஓரிதழின் குமுதந்தன்னில்
தூய்மையுடன் சிங்கெனவே தமர்க்குட்செல்ல
களங்கமின்றி நாடோறும் பழக்கம்பண்ணி
கண்டுசுழி முனையதிமேல நின்றுபாரு
வளங்கவே ரவிமதியின் பாகந்தன்னில்
வாச்சுதென்றே சோதிநிற்கு மிடத்தைக்காணே. (2)

காணவே சோதிதலத் தமுதவாசற்
கண்டுகொண்டு பாசபந்த மகலத்தள்ளி
தோணவே அமுதமது சிந்துகின்ற
சுத்ததல மதிற்சென்று பானம்பண்ண
ஆணவ யுனசடல மிறப்பிப்போகும்
அருளொளிபெற் றிலங்கிடுமே காயந்தானும்
வீணல்லே வாதியென்று பேருண்டாச்சு
விளங்கிநின்ற பூரணத்தின் மகிமைதானே. (3)

தானென்ற அண்டவரை செல்லும்போது
தயங்காம லம்மலையின் சிகரத்தேறி
நானென்ற வகாரு வரியில் நிற்கவல்லன்
நலமான சித்தர்களிற் கொங்கணர்தான்
வேனென்ற மகிமையுடன் கீர்த்திபெற்றார்
விண்டுலோக்க வயரன்றி மற்றாரில்லை
ஏனென்றா லவர்சித்தி யோகந்தன்னி
லிணையற்ற மவுனியென வியம்பலாமே. (4)

ஆமென்ற சித்தருங்கண் டதிசயித்து
அகமகிழ்வ ரிருடிமுனி வோருமாக
தாமென்ற வல்லர்களி லவரைப்போலத்
தாரணியி லெவ்விடத்துங் கண்டதில்லை
ஓமென்ற உலகமெலா மொருகணத்தி
லுலவிவரு வார்ககன மார்க்கமாக
காமென்று அன்னவர்முன் செல்லொண்ணாது
நன்றிபெறு சித்தர்களில் கண்டிலேனே. (5)

கண்டிலேன் முனிகணங்கள் சாலந்தன்னில்
கயிலாச பரம்பரையின் குழாங்கடோறும்
அண்டம்வரை யிலுஞ்சென்று பார்த்தேனங்கு
அருள்ஞானந் தன்னையுற்று மேலோரான
தொண்டர்களை யறியாம லிருந்தேனப்போ
சொன்னாரீ சன்றானும் ரகசியத்தை
விண்டவா றறிந்துதவ முற்றுமெய்தி
மெய்ஞ்ஞான சிவயோகத் திருப்பார்பாரே. (6)

பாரப்பா பூரணத்தை நாடினோர்கள்
பதமாக வாசியைத்தா னடக்கினோர்கள்
சீரப்பா காயகற்ப முண்டபேர்கள்
சித்தியென்ற பிரமநிலை தனையுணர்ந்தோர்
நேரப்பா சஞ்சலமி லாதிருந்தோர்
நித்தியதத் துவமுணர்ந்தோர் சித்தரென்னச்
சேரப்பா அறிவறிந்து நிலையில்நின்று
சிற்பரத்தி லேசிறந்து வாழ்குவோமே. (7)

ஓமென்ற பிரணவத்தோ டைந்தெழுத்து
முற்றுநின்று பஞ்சகர்த்தாள் வாழும்வீடு
நாமொன்றுந் தவறாமல் நவின்றேனப்பா
நாட்டினிலே யெனைப்போல வாருரைப்பார்
வாமென்ற மனமதனை நிலைநிறுத்தி
மதிரவியாய் ரவிமதியாய் மாற்றவல்லார்
தாமெனறும் நாமென்று மிரண்டில்லாத
சச்சிதா னந்தமதிற் சார்வார்சீரே. (8)

சர்வரோக நிவாரண பட்சணி.

சீரான வுலகினிலுள்ள மாந்தருக்குச்
செகத்திலுற்ற நோய்விபரஞ் சொல்லப்போமோ
மாரான நடக்கையினாற் றற்போகத்தால்
வல்லிருளிற் றயிலமிட்டு முழுகல்தன்னால்
வீரான பசிவேளைச் சேர்க்கையாலே
வெயில்தனிலே மெய்நோவ நடக்கல்தன்னால்
பேரான பற்பலநோய் சடத்திற்றோன்றி
பிரபலமாம் விக்குவினால் விளைந்தவாறே. (9)

விளைந்தவா றத்தனையு மறிந்துகொண்டு
வின்னாகேறே னவிழ்தமொன்று கருத்தாயப்பா
வளைந்தவெட் பால்மிளகு சீரகந்தான்
வாய்விளங்கந் திப்பிலியு மேலமோமம்
குளைந்தசத குப்பையொடு கரியபோளம்
கூட்டுவாய் கிராம்புசுக்கு கையாஞ்சாரை
தளைந்தமல்லி பலமுக்கால் போட்டுநன்றாய்
தானெடுத்து சுக்குபல மிரண்டுகூட்டே. (10)

ரெண்டான முன்மருந்திற் கையாஞ்சாரை
நிழலுலர்த்தி சூரணித்த தூட்பலங்கால்
பண்டான மருந்தனைத்துங் கால்பலந்தான்
பக்குவமாய்க் காயவைத்துச் சூரணித்து
துண்டாகக் கரியபோ ளத்தைநெய்யிற்
துருக்காண்டி தன்னிலிட்டு கொதிக்கவைத்து
பண்டமதைப் பூசித்து மருந்தையெல்லாம்
பக்குவமா யொன்றாச் சேர்த்துக்கொள்ளே. (11)

கொள்ளேநீ பசுவின்பால் படிதானொன்று
கூசாமற் சட்டியிட்டு அடுப்பிலேற்றி
அள்ளேநீ சீனிபலம் பனிரெண்டிட்டு
அதைப்பாகு பதமாகக் காய்ச்சிக்கொண்டு
தள்ளேநீ யிறக்கிவைத்து மருந்தைத்தூவித்
தானதனைக் கிண்டிடுவா யிறுகமட்டும்
விள்ளேநீ தேத்தாவித் தளவதாக
மேன்மைபெற வுண்டைசெய்து பதனம்பண்ணே.

பண்ணிவைத்துக் கொண்டுசித்ர மூலஞ்சுக்குப்
பரிவான திப்பிலிதிப் பிலியின்மூலம்
எண்ணியே வெருக்கன்வே ரமுக்ராவேளை
எளிதான சாரணையின் வேருங்கூட்டி
நண்ணியே கண்டங்கத் திரிசமூலம்
நலம்பெறவே பெருபெருக்கையாயிடித்து
கண்ணியே யிடித்துயிந்தத் தூளையெல்லாம்
கைதவறி டாதபடி வைத்துக்கொள்ளே.

கொள்ளுவாய் சுத்தஜலம் படிதானொன்றில்
கூறியதோர் தூளில்வெரு கடியேபோட்டு
மெள்ளவே கால்படியாய் வத்தவைத்து
மேன்மைபெற்ற மாத்திரையி லொன்றெடுத்து
கள்ளமின்றி நோயாளிக் கீய்ந்துயிந்தக்
கசாயமதை யுங்கொடுத்துத் தப்பாமற்றான்
உள்ளபடி நாற்பதுநாள் கொண்டாரானால்
ஓடுகின்ற நோயனைத்து முரைசெய்வேனே.

வேறான வாதமெண் பதும்போகும்
விப்புருதி சூலைகண்ட மாலையோடும்
நாலென்று வருமேக மோடிப்போகும்
நடுக்குவா தஞ்சன்னி தோஷம்போகும்
[illegible] யாதருச்சு வயிற்றிலூற்று
[illegible] ஞ்சூத கக்கட்டி வணங்கியோடும்
தேறும் நீரிழிவு பெரும்பாடெல்லாஞ்
சிதறியே யோடிவிடுந் திண்ணந்தானே.

இன்னந்தான் குன்மமெட்டுந் தீர்ந்துபோகும்
திரிதோஷ மனையாப்புத் திமிக்கிட்டோமும்
இன்னந்தான் வெள்ளைவெட்டை கிரந்திதீரும்
திரமான காக்கைவலி யிசிப்புதீரும்
இன்னந்தான் மூலமொன் பதுவும்போகும்
தீராத வெண்குட்டந் தீர்ந்துபோகும்
இன்னந்தா னிம்மருந்தை யுண்டபேர்க்குத்
தீராத வெப்பிணியுந் தீருந்தானே. (16)

தீருமிந்த மருந்ததற்குப் பத்தியத்தைச்
செப்புபா சிப்பயறு முருக்கம்பிஞ்சு
சேருமிந்தக் கீரையொடு பசும்பாற்கஞ்சி
சேர்க்கலாஞ் சர்க்கரையு முண்மையாகப்
பாருமிந்த வகைதவிர மற்றொன்றாகா
பகரீடவே வருத்தவுப்பு வெண்ணீர்கூட்டிக்
காருமிந்தப் படியேதான பத்தியத்தைக்
காத்தவர்க்கு வாலையருட் கடாச்சிப்பாளே. (17)

யோகச்சித்தர் ஞான சூஸ்திரம் ௰௭.

முற்றிற்று.





கோவில்பட்டித்தாலூகா இடசெவல் சத்திரப்பட்டி கிராமத்தி
லிருக்கும் வைத்தியம் வா. அ. சுந்தரலிங்கம்பிள்ளையவர்களிடமிரு
வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருவேதுணை.

எழுபதாவது:

சதோகநாதரென்ற

# யோகச்சித்தர் பாடல் சஉ.

## கண்ணிகள்.

அக்கரங்கள் தோன்ற அருள்கொடுக்கும் பூரணியென்
பக்க மிருந்து பலகலையுஞ் சொல்வாளே. (1)

வாலை யபிராமி மாரிதிரி சூலியருட்
பாலை யெனக்கருளும் பார்வதியின் றாள்போற்றி. (2)

அம்பிகைமால் சோதரியென் னுத்தாள் திருப்பாதம்
கும்பிட்டு ஞானக் குயிற்கண்ணி கூறுவனே. (3)

ஓங்கார வட்டமதி னுட்பொருள்கண் டோர்ந்ததற்பின்
நீங்காத ஆசை நிலைக்குமோ மாங்குயிலே. (4)

இயம்பு மிடைகலைக்கும் இன்பதாம் பிங்கலைக்குச்
சுயமாஞ் சுழிமுனையுந் தோற்றுமடி மாங்குயிலே. (5)

ஆன்மா பரத்தோ டமருந் திருக்கூத்தை
நான்வாயி னாலே நவில்வனோ மாங்குயிலே. (6)

அஞ்செழுத்தைக் கண்டு அதனுண்மை யுந்தெரிந்து
வஞ்சகங்க ளற்று மகிழ்ந்திருந்தேன் மாங்குயிலே. (7)

சூரியனுஞ் சந்திரனுந் தோன்று மிடைநின்றே
பூரித்தா னந்தசுக போகமுற்றேன் மாங்குயிலே. (8)

ஊமையெழுத் தாலேதான் ஓங்கார மாகினதைச்
சீமையிலுள் ளோர்கள் தெரிவரோ மாங்குயிலே. (9)

முப்பாழுந் தாண்டி முடிவி னிடந்தாண்டி
அப்பாழுந் தாண்டிற் கறிவுளதோ மாங்குயிலே. (10)

அட்டாங்க யோக மறிந்து தெரிந்தபின்பு
வெட்டவெளி புண்மை விளங்குமே மாங்குயிலே. (11)

ஆறுதா ரத்தில் அறிவை மிகச்செலுத்திச்
சீராய்த் தவசிருந்து சிக்கறுத்தேன் மாங்குயிலே. (12)

துற்குணத்தைச் சுட்டறுத்துச் சூட்ச நிலைதெரிந்து
நற்குணத்தோ டொண்டியங்கு நானிருந்தேன் மாங்குயிலே (13)

அல்லலெல்லாம் நீக்கி அறிவையறி வாலறிந்து
வல்லசித்த னென்றே மகிழ்வுற்றேன் மாங்குயிலே. (14)

ஆனந்தம் பொங்கி அறிவே மயமான
ஞான மறிந்து நலமுற்றேன் மாங்குயிலே. (15)

மெய்ப்பொருளைக் கண்டுடனே வேதாந்த வீடடைந்த
வைப்பதனி லொன்றில் மகிழ்ந்திருந்தேன் மாங்குயிலே. (16)

நாதாந்த வுண்மை நடுவறியா மாந்தருக்கு
வேதாந்தப் பேச்சதுவும் வேண்டுமோ மாங்குயிலே. (17)

நித்திரையும் விட்டு நினைவையறி விற்செலுத்தி
சித்தியெலாம் பெற்றுத் தெளிவுற்றேன் மாங்குயிலே. (18)

பேச்சொடுங்கி நின்ற பிரமநிலை யையறிந்தோர்
ஏச்சுக் கிடமற் றிருப்பார்காண் மாங்குயிலே. (19)

காணுப் பொருளதனைக் கண்டுபேர்மா னந்தமுற்று
வீணுளொ ழித்துமுத்தி வீடடைந்தேன் மாங்குயிலே. (20)

அருள்வெளியி னுட்பொருளை ஆராய மோனக்
குருமொழியை யன்றியில்லை கோதையெனும் மாங்குயிலே. (21)

அத்துவிதந் தன்னை யதுவதுவாய்க் காண்பதற்குத்
தத்பதத்தைக் காட்டித் தருவாயே மாங்குயிலே. (22)

நம்பி யுனைப்பணிந்து நாடோறும்பூ சிப்பதற்குத்
தொம்பதத்தை யென்று துலக்குவாய் மாங்குயிலே. (23)

நிசிபகலென் றெண்ணாது ஞேயஞா னத்தால்
அசிபதத்தை நீயென் றருள்செய்வாய் மாங்குயிலே. (24)

நித்தநித்தம் என்னுளத்தில் நீயிருப்ப துண்மையெனில்
தத்துவம சிற்பொருளைத் தந்தருள்செய் மாங்குயிலே. (25)

சுத்த நிராமயத்தின் தோற்றத்தி ஞானுதித்த
வத்துவெலாஞ் சுத்த மயமன்றோ மாங்குயிலே. (26)

தேறுப் பொருளனைத்துந் தேறித் தெளிவதற்கு
யாருநின் னின்பமது வாய்க்குமோ மாங்குயிலே. (27)

அசரா சரத்தினுற்ற அண்டபிண்டம் பல்லுயிரும்
நிசிதமெனக் கண்டறிந்து நின்றேறுன் மாங்குயிலே. (28)

பாசபந்தம் விட்டுப் பரகெதியென் றேயிருந்தாற்
பேசவொண்ணுப் பிர்மம் பிறங்குமே மாங்குயிலே. (29)

அந்தக்கர ணத்தை அடக்கிப் பரவெளியைச்
சொந்தமென நம்பித் துதிப்பாய்நீ மாங்குயிலே. (30)

சுத்தப்பிர மத்தின் தொடர்புவழி யேகாணில்
முத்திநிலையத் தேட முழிப்பாயோ மாங்குயிலே. (31)

எக்கனியை பும்பரித்து ஏக்கமறச் சாப்பிடலாம்
லைக்கனியே பிர்மமெனக் கண்டுதேர் மாங்குயிலே. (32)

துற்கந்தத் தாலெடுத்த தூலமிது பொய்யெனநீ
நற்கந்த மானசுக ஞானமறி மாங்குயிலே. (33)

வெட்ட வெளியதனில் மெய்ப்பொருளைக் கண்டபின்பு
பட்டப் பகற்றீபப் பார்வையேன் மாங்குயிலே. (34)

எங்கும் நிறைந்துநின்ற ஏகபர வஸ்துவினை
அங்கைநெல் லிக்கனிபோல் யானறிந்தேன் மாங்குயிலே. (35)

சத்தாகிச் சித்தாகித் தாபரமுந் தானுகி
வித்தாகி வந்த விதந்தெரிவாய் மாங்குயிலே. (36)

அருவா யுருவாகி அண்டாண் டந்தானுய்க்
கருவாகி வந்த கணக்கறிவாய் மாங்குயிலே. (37)

ஆதிசகத் தென்றும் அனுதி மகத்தென்றும்
சோதிச் சுயவடிவாய்த் தோன்றுமே மாங்குயிலே. (38)

பார்க்குளா காயமதைப் பார்த்துப்பார்த் தெல்லைகண்டு
யார்க்குஞ் சொலவெளிதே ஆய்ந்திடுவாய் மாங்குயிலே. (39)

அண்டத்துக் குள்ளே அனுதி பரவெளியைக்
கண்டறிந்து கொண்டேன் கவலைவிட்டேன் மாங்குயிலே. (40)

அணுவுக் கணுவாய் அருட்சோதி யென்றகுரு
மணியாய் விளங்கும் மகிமையறி மாங்குயிலே. (41)

பற்றற்று நின்றே பரவெளியைக் கண்டேனன்
வற்றற்ற வாசை மறந்திருந்தேன் மாங்குயிலே. (42)

சதோகநாதரென்ற யோகசசித்தர் பாடல் சஉ,

முற்றிற்று.





கோவில்பட்டிக் தாலூகா இடசெவல் சத்திரப்பட்டி கிராமத்தி லிருக்கும் வைத்தியம் வா. அ. சுந்தரலிங்கம்பிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



குமரன்றுணை.

எழுபத்தோராவது:

ஆதிநாதரென்ற வேதாந்தச்சித்தர் திருவாய்மலர்ந்தருளிய

# ஞான சூஸ்திரம் உக.



மூலமுக் கோணத் துற்ற முதற்பொரு ளதனைப் போற்றி
ஞாலத்தி லெவரு முய்ய நாட்டுவேன் வாசி மார்க்கம்
பாலத்தி லேறி யந்தப் படிதவ றாமல் நின்று
சீலமுற் றுணர்ந்தோர் தாளைச் சென்னியிற் சூட்டிச் சொல்வாம்.

சொல்லுவோ மதியை வாங்கிச் சூரியன் றன்னிற் சேர்த்து
மெல்லவே சுழினை தன்னில் மேன்பட நிறுத்திக்கொண்ட
தல்லவோ காய கற்பம் அற்பமீ தல்லச் சொன்னேன்
நல்லவ ரறிந்து தேறி நயம்பெற வாழ்குவாரே. (2)

வாழ்வதற் குறுதி யென்ன மனதொரு நிலையாய்க்கொண்டு
தாழ்விலா வாசி யுந்தன் கைவசப் பட்டு தானால்
ஊழி யூழிகள் சென்றாலு முன்சட மழிய மாட்டா
தாழியான் பாதத் தானை யறைந்தனன் றெரிந்து கொள்ளே. (3)

சந்திர னிடப் பக்கத்தே தயங்கிடா திருக்கு மாகில்
அந்தம தான வீட்டில் அமருமே அப்போ துந்தன்
சுந்தரத் தேகந் தன்னிற் றுளிக்குமே அந்த நீரா
மந்தவீ டயார மாகு மரும்புக மூசீ நீரே. (4)

ஊசிநீர் சுழினை யந்த,உச்சமீ தெனுவென் றக்கால்
நாசியின் மேலை யோடும் நாலதங் குலத்துக் கப்பால்
வாசியின் வீடு அங்கே வரபதி யிருப்ப தாகும்
பேசியே பெயர்முக் கோணம் பிறக்கும் வல்லபை கணேசன் ()

வல்லபை முக்கோ ணத்தில் வழக்கிடு முழக்கம் ரெம்ப
சொலறுதற கரிய வாசிச சுழிமுனை யமரு மப்பா

நல்லவ ரறிவா ரந்த நாயகன் வீட்டுக் கப்பால்
அல்லலற் றிருக்க நக்க ளுமிழை யறைந்திட் டாளே. (6)

அறைந்ததைத் தைந்து பூத மசையாது நிறுத்தி னுக்கால்
சிறந்ததோர் வாசி தானுஞ் சிக்கென நின்றுபோகும்
பறந்தெங்கு மோடி டாது பாழ்செய்யுங் கெட்ட மாயை
இறந்திடு மென்று நம்பா வியம்பினு ரீசன் றுனே. (7)

ஈசனு ரெனக்குச் சொன்ன ரிழுத்திடும் வாசி தன்னை
வாசமாய் வங்கென் றேத்தி வாங்கினி நிறுத்திக் கொண்டு
நேசமா யங்கென் றேதான் நினைவதும் பிசகி டாமல்
பாசமாய்ச் சிங்கென் றூதி பரையரு ளாலே வீசே. (8)

வீசியே வாசி தன்னை விடாமலே யிருக்கிக் கட்டி
ஆசியோ லோடி டாமற் றுலங்கவே நிறுத்திக் கொண்டு
மாசிலா ரவியிற் றேய மதிதனை யூடி சேர்த்து
ஏசிலா நன்மை தன்னை யின்னமு முரைசெய் வோமே. (9)

ஓமென வலப் புறத்தே யோடிடுஞ் சூரியன் றுன்
நாமெனும் நிலையைச் செப்ப நாடினு லாகா தப்பாப்
போமெனுஞ் சந்திரன் றுன் புறப்படு மிடப் புறத்தே
தாமெனும் வாசி நின்று தளர்வின்றி வளரும் பாரே. (10)

வளர்ந்திடு முடியைத் தானே வகுத்தனர் முன்னம் நல்லோர்
தளர்ந்திடு மதியால் நீயுந் தயங்கியே யிறக்க வேண்டாம்
கிளர்ந்திடும் பொறியைத் தானே கீழுற வீழத் தள்ளி
நிளர்ந்திடா நிர்மலம்போல் நிற்பவர் மகிமை யோரே. (11)

மகிமையோர் நிலையில் நிற்பார் மற்றவர் நிற்க மாட்டார்
மகிமையோ ருலகிற் சொற்ப வாழ்வினை மதிக்க மாட்டார்
மகிமையோ ராதி யந்த மறிந்தவ ராவா ரென்றும்
மகிமையோர் வணங்க யாருங் கனம்பெற வாழ்கு வாரே. (12)

நாகபற்பம்.

கனமான நாகந் தன்னைக் களிக்கவே பற்ப மாக
இனமதாய்ப் புகலக் கேளு ஏற்பன பலமு மைந்து
வினவிடு மிலுப்பை நெய்யில் விரைவுட னுருக்கிச் சாய்த்துத்
தினமிக மகிழ்வதாகச் செய்முறை யிருப தாமே. (13)

இருபது தரமே சாய்த்து எலுமிச்சம் பழந்தின் சாற்றுற்
பெருகவே உருக்கிச் சாய்ப்பாய் பெலப்படக் கசடு நீங்க

குருவதா யாவ தற்குக் குணமுடன் கரண்டி தன்னில்
உருகவே உருக்கிக் கீழ்நாய் நெல்லிமே லதனூற் றுக்கே. (14)

தாக்கியே இன்டி யாட்டிக் தயவுடன் புகலக் கேளு
நோக்கியே சுத்தி செய்து நூன்முறை ரசம தன்னை
ஆக்கிய இருப லத்தை அடைவுட னெடுத்துக் கொண்டு
தேக்கிய நாகத் தூட்டித் தெளிவுட னரைத்துக் கேளே. (15)

கேளப்பா தாள மட்டை கெதிவருஞ் சாற்று லாட்டி
வழுப்பா வில்லை தட்டி யுலரமே லோட்டில் வைத்து
நாளப்பா வோடு மூடி நலம்பெறக் காய்ந்த பின்பு
வாழப்பா நிதான மாக வாரணப் புடத்திற் போடே. (16)

புடத்தன லறிந்து பார்த்துப் புன்மையென் றுணர்ந்தாற் பின்பு
திடத்துட னரைத்து முன்போற் சிறக்கவே புடத்தைப் போடு
நடத்தைந்து தரம தாக நலம்பெறப் புடமோ தீர்ந்தால்
குடப்பணஞ் செலவிட் டாலுங் கொடுப்பரோ இந்தப் பற்பம் ()

எடுத்துநீ பரணி தன்னில் எழிலுற வடைத்துக் கொண்டு
அடுத்தவோர் பிணிகள் பார்த்து அடைவுடன் கொடுக்க நன்று
தொடுத்திடுஞ் சயங்கள் காசம் தோன்றிடு மிருமல் வாந்தி
கொடுத்திடக் கிராணி தோஷங் குளிர்முத லனுகா தென்னே.

காணுது பித்த வாய்வு கனத்திடு மதிசா ரங்கள்
தோணுது பவுந்தி ரங்கள் துயரறத் தீர்க்கு மப்பா
வீணுன தென்று நீங்கள் விஞ்ஞானம் பேச வேண்டாம்
கோணுது அறிந்த பேர்க்குக் குணமது வாகு மென்னே. (19)

ஆகிய வியாதி தன்னை அடைவுட னின்னங் கேளு
போகிய ரான பேருக் குற்ற சொற் றவறிடாது
ஆகிய நடையைக் கண்டு அறிவினிற் புக்கியே தான்
போகியென் றுணர்ந்தி டாமற் போதிப்பார் சுகம் தோன்றே.()

போதித்த நாக பற்பம் போடலாம் வியாதி கண்டு
நீதிசொற் றவறி டாது நிலைபெறு மொழிதப் பாது
விதியாம் மனதைத் தேற்ற விளங்கிடுஞ் சோதி தானும் [மே.
காதியென் றேற்றும் வீண்சொல் வாய்மையெந் திரம்போ லா

வேதாந்தச் சித்தர் ஞான சூஸ்திரம் உக.

முற்றிற்று.

—∽—

உ

குமரன்றுணை.

எழுபத்திரண்டாவது:

## ஆதிநாதரென்ற

# வேதாந்தச் சித்தர் பாடல்.

கண்ணிகள்.

ஆதிமத் யாந்தமதைக் கிளியே
அன்பா யறிவதற்குச்
சோதிச் சுடரொளியைக் கிளியே
தோத்திரஞ் செய்துகொள்ளே. (1)

வாசாம கோசரத்தின் கிளியே
மார்க்க மறிந்துகொண்டு
நேசவநு பவத்தில் கிளியே
நின்று தெளிவாயே. (2)

அசல மூலமதிற் கிளியே
அந்த மறிவாயோ
விசன மற்றவிடம் கிளியே
மேவித் தெளிந்துகொள்ளே. (3)

சுத்தயிர் மத்திமேலேயில் கிளியே
தோன்றிய சத்திதன்னில்
வித்தார முண்டான கிளியே
விபர மறிந்துகொள்ளே. (4)

சத்தாதி வாக்காதி கிளியே
தனுகர ணங்கட்கெல்லாம்
வித்தான மூலமதைக் கிளியே
மேவித் தெளிந்துகொள்ளே. (5)

சத்தியி லுண்டான — இனியே
சதாசிவ மானதென்று
நித்தியம் நீயறிந்து — இனியே
நின்று தெளிவாயே. (6)

அச்சிவ மானதிலே — இனியே
அண்டபிண் டங்களெல்லாம்
உச்சித மாயுதித்தே — இனியே
உண்மை யறிந்துகொள்ளே. (7)

நாலு வகையோனி — இனியே
ஏழுவகைத் தோற்றத்
தாலு மசரசரம் — இனியே
தத்துவ முற்றதடி. (8)

அகாரம் உகாரம்ரெண்டும் — இனியே
மகாரம் உருவாச்சு
சிகாரம் வந்தவிதம் — இனியே
தேறித் தெளிவாயே. (9)

சத்துச்சித் தானந்தம் — இனியே
தத்துவஞ் சொல்லுகிறேன்
நித்தியா னந்தமதைக் — இனியே
விஸ்தாரஞ் செய்யுகிறேன். (10)

சாமி அருள்வேணும் — இனியே
சாதனை நால்வேணும்
வாமி தயைவேணும் — இனியே
வஸ்தவ னாகவேணும். (11)

அஞ்சு பஞ்சகோசம் — இனியே
ஆராய்ந்து பார்க்கவேணும்
நெஞ்சந்தெளிய வேணும் — இனியே
நீயோநா னாகவேணும். (12)

ஆசபா சங்களையே — இனியே
லேசமு மெண்ணாதே

வாசனை மூன்றினாலே கிளியே
மோசமும் போகாதே. (13)

மானாபி மானமற்று கிளியே
தானென் றகமுமற்று
நானாப்பிர பஞ்சமற்று கிளியே
நாதமயத் தைப்பற்று. (14)

பத்தரை மாற்றுத்தங்கம் கிளியே
சுத்த வெளியாகும்
எத்திசை பார்த்தாலும் கிளியே
தத்துவ மாயிருக்கும். (15)

மூலா தாரமுண்டு கிளியே
முக்கோண வட்டமுண்டு
வாலை கணேசனுண்டு கிளியே
வல்லபை சத்தியுண்டு. (16)

சுவாதிஷ் டானமுண்டு கிளியே
சுத்தபிர் மாவுமுண்டு
உவாதினி வாதிக்கெல்லாம் கிளியே
உற்றவர் கண்டுகொள்ளே. (17)

மேலே மணிபூரகம் கிளியே
விட்டுணுக் குற்றவிடம்
காலா தீதத்துக்கும் கிளியே
கர்த்த ரவர்தாமே. (18)

பாரு மனாகதத்தில் கிளியே
பார்வதி நாதரங்கே
சேருந் தலமிதென்று கிளியே
தெரிசித்துக் கொள்வாயே. (19)

கண்டம் விசுத்தியல்லோ கிளியே
கஞ்சம் பதினாறு
அண்டபிண் டங்களெல்லாம் கிளியே
ஆஞ்ஞையும கேசனுக்கே. (20)

இரண்டு கண்ணாடிவே இனியே
இருக்கும் மயேசுரனை
திரண்ட சிந்தையினால் இனியே
தேறித் தெளிந்துகொள்ளே. (21)

ஆயிரத் தெட்டிதழில் இனியே
அமர்ந்த சதாசிவத்தை
நேயமதாக வேதான் இனியே
நிதப்பணிந் தேற்றிக்கொள்ளே. (22)

ஈதோர் குணமாச்சு இனியே
இரண்டாங் குணந்தனையும்
மூதோர் மொழியெனவே இனியே
மூற்றினு மெண்ணுவையே. (23)

சாதனம் நாலுவகை இனியே
சிற்று நிதானமதாய்
போத மிகுதியினால் இனியே
புத்தியென் றேவுணர்வாய். (24)

சமாதி யாறுகுணம் இனியே
சாமானிய மலவே
உமாம கேசனுக்கே இனியே
உற்றதென் றேதெளிவாய் (25)

உற்ற சமந்தானும் இனியே
ஒன்றிவைக் கும்பின்னும்
மற்றும் தமகுணத்தை இனியே
மாற்ற லரிதலவே. (26)

விடல் சகித்தல்தனை இனியே
மேன்மைய தாகக்கொண்டு
தொடர்ச மதானம் இனியே
தொடங்கும் நமக்காமே (27)

சிரத்தை யெப்பொருட்டும் இனியே
நீயிர யாதுமந்த

கிளியே
பரத்தைத் தானடைய
பற்றொன்று மில்லைகண்டாய் (28)

கிளியே
பத்தியை விட்டுவிட்டுப்
பாவனை யைக்கடந்து

கிளியே
அத்துவி தானந்தத்தைக்
அநுபவித் துய்வாயே. (29)

கிளியே
பெண்ணாசை பொன்னாசை
பூமியின் மீதாசை

கிளியே
மண்ணாசை யெண்ணாதே
வாசியுன் னாலறியே. (30)

கிளியே
தேகந் தேகிரெண்டு
தேகம்பொய் தேகிமெய்யே

கிளியே
மோகாந்தம் விட்டாக்காற்
முத்தி யடைவாயே (31)

கிளியே
பாவ அபாவமற்று
பரத்தினுடன் பொருந்திச்

கிளியே
சுவானுப வந்தனிலே
சொக்கிநீ வாழ்வாயே. (32)

வேதாந்தச் சித்தர்பாடல் ௩௨,

முற்றிற்று





மதுரை மேலமாசி வீதியிலிருக்கும் ஆர். அரியநாயகம் பிள்ளை அவர்களிட மிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருவே துணை.

எழுபத்திமூன்றாவது:

பிரமமுனி திருவாய்மலர்ந்தருளிய

# ஞானம் ௭௩.



பூரணமாய் நின்றதொரு பொருளைநோக்கிப்
　　பொய்யன்றி மெய்யுணர்ந்த பெரியோர்பாதம்
காரணமா யெந்நாளுங் கருத்திலாய்ந்து
　　கதிர்முனையி லாடிநிற்குங் கடவுளானை
நாரணனும் நான்முகனு மறியாரென்றும்
　　நால்வேத மோதுகின்ற ஞாயந்தன்னைச்
சீரணமாய்ப் போகாம லெட்டுநாளும்
　　சேர்ந்துவொரு சுழியேறத் தெரியுந்தானே. (1)

தெரியவென்று வெளிதல்ல வாய்ப்பேச்சல்லச்
　　செகஜாலக் கூத்தெல்லாஞ் செல்லசாகா
பிரியவென்று லைம்புலனை யறுத்துச்சாடிப்
　　பேதமையெல் லாமகற்றிப் பெரியோர்பாதம்
அறியவென்று லெந்நாளைப் படியோகாணேன்
　　ஆறிரண்டு சமயமெல்லா மகலத்தள்ளு
கூறியவென்றுற் சொல்லுகிறேன் குறிப்புள்ளோர்க்குக்
　　குன்றுமகா மேருநடு நிலைத்திடரே. (2)

நிலைத்துமனங் கடைத்தேற மச்சமில்லை
　　நேரறிந்த பெரியோர்தான் நிலைத்துநின்றார்
உலைத்துவிட்ட யிந்திரிய விடையத்துள்ளே
　　உள்ளுடைந்து போகாதோர் வழியேசெல்லும்
மலைத்திடிலா காமனது செவ்வையானால்
　　மதிவாசற் றூன்றிறக்கும் வருமோபோதம்
துலைத்துருவி நடுவீதி செல்லச்செல்லத்
　　தூண்டாத சுடற்காலுஞ் சூட்சமாமே. (3)

சூட்சமதி லாண்டவரு ளெளியோன்சொன்ன
சொற்பேத மில்லாத துரையிலேக
மாச்சல்மனஞ் செய்கின்ற மாந்தரோடே
மருவாதே குவியாதே வாதாடாதே
பூச்சலென்ன வொன்றுமில்லை லோகத்துள்ளே
பூண்டுநீ திரியாதே புலம்பிடாதே
நீச்சமதில் வாசியென்று மோட்சம்பூண்டு
நேரான வெல்லைவழி நேர்ந்துயேறே. (4)

ஏறவென்றால் வெகுகடின மேறொட்டாது
யிழுக்கான மலக்காடு வழுக்கல்மெத்தக்
கூறவென்று லெள்ளளவுந் தப்போயில்லைக்
குறியறிந்து கொண்டவர்க்கு லெகுவாய்க்காணும்
தேறவென்றாற் றனையறிய வழியுந்தோணும்
சிவரூப மருளாகக் கண்ணிற்காணும்
நேரவென்று விருள்தனிலே விளக்குங்காணும்
நேர்ந்தாக்கா லருட்பொருளாய் நிலைக்குந்தானே. (5)

தானென்ற சுழிமுனையை யருளாற்கண்டோர்
சாதிகுலம் வரம்பற்றுத் தானேதானாய்
ஊனென்ற சுவைபோக மொளித்துவிட்டு
வுயர்பாவுங் கரணம்போ யொடுங்கிநின்று
நானென்ற சொல்லற்று அறிவினுற்று
நான்மறைக்கு மெட்டாத பொருளோடொற்று
வானென்ற மதிப்பாலைத் திறந்துகொண்டு
வாழ்ந்திருப்பா ரெந்நாளு மாயார்தானே. (9)

மாயாம விருக்கவென்றால் மதிப்பால்வேணும்
மற்றமற்ற முறைளெல்லா மறவுண்டாகும்
ஆயாய்நீ வேதாந்த நூல்கடன்னை
அறிந்துணர்ந்து பிரமசுழி யேறுயேறு
காயான கற்பங்க ளனந்தங்கோடி
காட்டினார் நூல்தோறுங் கறையோயில்லை
வாயாலே வாய்ச்சமர்த்துப் பேசுமாந்தர்
வருவதுவும் போவதுவும் வகைகாணாரே. (7)

காணாம லிருந்தினாற் பலந்தானென்ன
    கர்மவினைக் கீடாகக் கணக்கதாச்சு
தோணாமற் போனதென்ன மாந்தரையா
    துடக்கான விசப்பாம்பைச் சுடாததாலே
பூணாம லிருந்துகொண்டு மாயந்தள்ளிப்
    புருவநடுத் தமர்வழியே பூண்டுதேறு
நாணாம லோடுந்தீ வினைகளெல்லாம்
    நல்வினையுந் தீவினையும் நாசமாச்சே. (8)

நாசமுற்ற மால்மாயை வீருபோச்சு
    நலமுற்ற பானமுனைக் காச்சுவாச்சு
காசமுற்றக் கண்ணாலே மனமாய்ப்பார்த்துக்
    கதிர்முனையி லருட்காணுங் காணுங்காணும்
பாசமுற்றக் கருவிதொண்ணூற் றாறுபேரும்
    பரஞ்சுடரில் மாண்டுபோம் பாருபாரு
நேசம்நின் றறிவாலே நின்றுகொண்டு
    நெறிநின்றோர் சொல்முறையை நேர்ந்துகூடே. (9)

கூடென்று முன்னுரைத்தார் பெரியோரையா
    கோடியிலே யொருவருண்டு கூடினோர்கள்
பாடென்று விடாதேநீ பற்றிப்பாரு
    பழவினைகள் கோடியுந்தான் பறந்துபோகும்
ஊடென்று யெந்நேரம் நாட்டங்கண்டு
    நடுவான தமர்வாசற் கப்பாற்செல்லும்
தேடென்றெந் நேரமரு ளாசைபூண்டு
    சேர்ந்தவர்க்குக் குருவாசை செலுத்துங்காணே. (10)

காணப்பா விட்டகுறை வந்தாலெய்துங்
    காரணமாய்ச் சற்குருவைக் கண்டாற்கிட்டும்
வீணப்பா மற்றொன்றிற் றெரியப்போகா
    மெய்யறிவாய் நின்றோர்கள் விளம்பினோர்கள்
தோணப்பா தோணுமனஞ் செவ்வையானாற்
    சுடர்போலே காணுவது சூட்சாசூட்சம்
கோணப்பா கோணாமல் நின்றுபாரு
    கும்பமகா மேருவுச்சி வழிசெல்வாயே. (11)

வழியோடே நின்றுணர்ந்து பழக்கமாகி
　　மதிவாசல் ராகுவெனுங் கேதுக்கப்பாற்
சுழியான மேல்வாசல் தில்லைக்குள்ளே
　　தூண்டாத சுடர்க்காலைத் தூண்டிக்கொண்டால்
அழியாத பதமுமுண்டா மமுதமுண்டாம்
　　அப்பவல்லோ வானந்த லகிரிதுக்கும்
விழியான கண்மயக்க மெல்லாம்போச்சு
　　வேதாந்த மெய்ப்பொருளோ டுறவதாச்சே. (12)

உறவான பிரிவதில்லை யுகந்தான்கோடி
　　ஒருபொருளாய் நிறந்தரமா யுணர்ந்தோர்க்கெல்லாம்
துறவான துறவுக்கு யிதுவேமார்க்கம்
　　சொற்பெரிய வேதாந்தஞ் சூட்டுமறைநூட்கள்
மறவாம லிருந்துகொண்டு மதியைத்தாண்டி
　　மாசற்ற வனுபூதி வந்துகொள்ளும்
இரவேது பகலேது யெல்லையேது
　　யேகநிரா மயச்சுடரா யிருக்கலாச்சே. (13)

பிரமமுனி ஞானம் ம௯.

முற்றிற்று.



மதுரை பாத்திரக்கடை வியாபாரம், ந. ரா. ம. கணபதியா பிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருவேதுணை.

ஏழுபத்தி நான்காவது:

பிரமமுனி திருவாய்மலர்ந்தருளிய

# பிரம ஞானம் ௩௪.



ஒன்றான வெளியொளியே பாதங்காப்பு
    வுலகமெல்லாம் நிறைந்தபரா பரையேகாப்பு
வன்றான வகாரமதி னின்றோர்காப்பு
    வாதியந்த மில்லாத பரனேகாப்பு
நன்றான நாதவொளி யானசித்தர்
    நளினமலர்ப் பாதமெந் நாளுங்காப்பு
வென்றாடும் பூரணமே தாயேகாப்பு
    வேதாந்தஞ் சித்தாந்தங் காப்பதாமே. (1)

ஆமென்ற வப்புவிலே தேய்வுதோன்றி
    யதீதமென்ற தேயுவிலே வாய்வுதோன்றி
தேமென்ற வாயுவிலே யுந்திதோன்றித்
    திடமான பிருதிவியும் வாயுவாச்சுக்
காமென்ற பஞ்சகர்த்தாள் பஞ்சபூதங்
    கனமாகக் கூடியல்லோ வுலகமாச்சுத்
தாமென்ற வாணுவத்தைப் போக்கிமைந்தா
    சாதகமா யைக்தையுந்தா னென்றதாக்கே. (2)

ஒன்றாக விருக்கவென்றால் வாசிபாரு
    வுத்தமனே பிராணாயக் கருவைப்பார்த்து
நன்றான மந்திரங்க ளொன்றுமில்லை
    நாட்டியதோர் சந்திரகலை தேயப்பாரு
நின்றாடுங் குறிகளெல்லாம் நிலைக்கப்பாரு
    நிலையான ரேசகமுங் கும்பகந்தான்
தன்றான பூரகமுந் தாரகந்தான்
    றலமாமற் சாற்றுகிற வரிசைகேளே. (3)

கேளப்பா முக்கோணஞ் சுளியுமாச்சு
 கெடியான வைங்கோண மறுகோணந்தான்
நாளப்பா வெண்கோண நவகோணந்தான்
 நலமான பிராணயங் கடினமெத்தச்
சூளப்பா யிப்படியே சுற்றியாடுஞ்
 சுகமாகக் குருமொழியாற் றவறிடாமல்
மீளப்பா மவுனியென்று லுடனேசித்தி
 வேதாந்தி யானுக்கா விரண்டுபெத்தே. (4)

பத்தாசைக் குள்ளிருப்பா னுலகில்ஞானி
 பாங்காய்நீ மனத்தைநீபர வெளியில்வைப்பாய்
சித்தான சித்தெல்லா முலகிலாடிச்
 சிவசிவா வென்றிருப்பார் தெளிந்தஞானி
முத்தான முத்தர்தினந் தோறுமப்பா
 முனையான பிராணயம் வழியிற்செல்வார்
கொத்தான தசதீட்சை வந்தோர்க்கப்பா
 குருவருளே கண்டுவழி யேறுவாயே. (5)

ஏறுவார் புரவியென்ற வாசிமீதி
 லேகாந்த வழிதனிலே சவாரிவிட்டுச்
தூருவா ரகண்டத்திற் றாலம்விட்டுச்
 சொற்பெரிய பிராணய வேணிகொண்டு
வாருவா ராயாசந் தெளிந்திருப்பார்
 வல்வினையுந் தீவினையும் விட்டமேலோர்
கூறுவார் பூரணமே யென்றெந்நாளும்
 குறியான பூரகத்திற் கூடுகூடே; (6)

கூடுகட்டிக் குடியிருந்த கூடிதாச்சுக்
 கூடழிந்து போகாமல் வாசிகண்டு
பாடுபட்டுத் தேடியல்லோ பொருளைக்கண்டு
 பரவெளியி லிருந்துமெள்ள வாழவேணும்
மாடுமக்கள் பெண்டாசை வைத்தாலென்ன
 மாயையென்று வுலகத்திற் பற்றிவாழும்
ஓடுதனிற் புளிப்போலே யொட்டிக்கொண்டு
 வுலகத்தோ டொத்திருந்து வோங்கிப்பாரே. (7)

பார்தனிலே சுழற்றிநின்றான் பாணூரன்
பாங்கான முசுகுந்த னரிச்சந்திரன்றான்
நேருடைய கன்னனென்றும் நளன்றனென்றும்
நிலையான ராவணன்றான் சூரனென்றும்
பேருடைய பஞ்சபாண் டவர்களென்றும்
பெருமையுள்ள சோழனென்றும் சேரனென்றுந்
தாரணியில் வாழ்ந்தவர்க ளார்தானின்றார்
தண்ணீரிற் குமிழியைப்போற் றகமையாச்சே. (8)

ஆச்சிந்தப் படியப்பா வுலகவாழ்க்கை
யம்புவியில் மாயையது மெத்தவுண்டு
நீச்சிந்த மாயையைத்தான் சொல்லவென்றால்
நெடிதான பணியோலை கொள்ளாதப்பா
பேச்சென்ற பிராணயக் கருவைக்கண்டு
பெருமையுடன் முக்கோணத் திருந்துவேறு
வாச்சுதடா மவுனமுந்தான் தீட்சைபத்தும்
வாகாகச் சாதித்தால் ஞானமாச்சே. (9)

ஞானமென்றுஞ் சித்தென்று பிரம்மவித்தை
நலமான சித்தப்பாக் கடினமெத்த
மோனமென்ற யட்சரத்தை யறிந்தாயானால்
மூன்றெழுத்து மைந்ததிலே கசிந்துவீழும்
பானமென்ற வமுதத்தை யுண்டாயானாற்
பதறாமல் ஞானமது சித்தியாச்சு
கானமென்ற கெவுனமது வேணுமென்றாற்
கனமான தம்பனமாங் குளிகைசெய்யே. (10)

செய்யயிலே யூசரந்தான் பலமோபத்துத்
திரமாக விரண்டெழுத்து முன்னேநாக்கு
பையயிலே பிராணப மறுகோணந்தான்
பாங்கான வுருவதுதான் லட்சமாகும்
வெய்யதொரு சாரணைதா னன்றாய்த்தீர்ந்து
வேகமென்ற வோரெழுத்தை முகட்டிற்றாக்கும்
வையமெல்லா முன்னுள்ளே கட்டிநிற்கும்
வாய்திறக்க வொட்டாது வழிசெல்வாமே. (11)

வாமென்ற குளிகையை நீ சொல்லக்கேளு
வகையான கெவுனமதுக் கடுத்தகூறு
நேமமென்ற வச்சரந்தா னஞ்சுமாச்சு
நிலையாக விலட்சமூரு வேற்றிப்போடு
சேமமென்ற றீங்கார மிரண்டுங்கூட்டிச்
செகசால வாட்டமெல்லா மாட்டித்திரு
நாமமென்ற பரவெளிமே லொட்டியாடும்
நாட்டுக்கு ளின்னூலை நவின்றிடாதே. (12)

நவிலாதே மாணூக்கா சுலபமாக
நவகோணச் சூட்சமொன்று சொல்லக்கேளு
சிவலோகம் போய்வருமே செய்தியப்பா
சித்தர்களைக் காட்டிவிடும் வுருவமெல்லாந்
தவமான பேர்களுக்குச் சித்தியாகுந்
தரணியிலே மேருவினிற் பூசைசெய்தால்
அவமாகப் போகாது ஆக்தாள்பூசை
யமாவாசை பூரணைக்குஞ் செய்துநோக்கே. (13)

நோக்கப்பா கும்பகத்திற் கடிகைவைத்து
நுண்ணிமையாய்க் காசமூதற் பொதிகைமட்டுந்
தாக்கப்பாப் பூரகத்தில் வாங்குவாங்கு
தயவான ரேசகத்தில் வங்குசிங்கு
நோக்கப்பாப் புரவியின்மே லேறவென்றால்
நொடிக்குள்ளே மூன்றெழுத்தை நிலைக்கப்பாரு
தேக்கப்பா விரண்டெழுத்தை மேலேவைத்துத்
தெளிவான வோங்காரங் கொண்டுவேறே. (14)

ஏறுவார் சதுரகிரி பொதிகைமீதி
லென்னசொல்வேன் சித்தருட வாட்டமாட்டம்
கூறியதோர் குகையளவுங் கொள்ளாதப்பா
குறித்துநின்ற வாமத்திற் கூட்டிநிற்பார்
தேறியதோர் வாசியிலே யேறிநிற்பார்
சிவலோகம் போய்வருவார் க்ஷணத்துக்குள்ளே
பாறியே கைலாசம் வைகுண்டந்தான்
பாங்கான பொருகடலுஞ் செல்லுவாரே. (15)

செல்வதற்கு மாணுக்கா சொல்லக்கேளு
சிவமான குருபதத்தை யடுத்துக்காரு
வல்வதற்குக் கடைக்காண்ட நூலைப்பாரு
வடவாக வாசிதனைத் தினமும்பாரு
பல்வகையாம் பதினெண்பேர் நூலைப்பாரு
பாங்கான குளிகையுடக் கருவுங்காணும்
மல்வளங்கள் பெருகியதோர் கொங்கணையா
வைத்தாரே கடைக்காண்டம் வகையாய்த்தானே. (16)

தானென்ற வாணுவத்தைத் தள்ளிப்போடு
தவறுமற் குருபதத்தைத் தரித்துக்காரு
ஊனென்ற வாதத்துக் காசைவைத்தால்
வூனுத்தனென்று தள்ளியுன்னை யிகழ்ந்துநிற்பார்
வானென்ற வகண்டவெளி காணுமட்டும்
வாதமென்ற பேச்சைநீ மறந்துபோடு
தேனென்ற சக்கரத்தி னெழுத்தைக்கண்டாற்
றெருவிலே கிடக்குமப்பா வாதம்பாரே. (17)

பாரிலே வாதமதை சொல்லுமென்பான்
பண்பான பூரகத்தைக் காட்டுமென்பான்
பேரிலே யெழுத்தையெண்ணிக் கொள்வானப்பாரு
பேரில்லா ரிஷியென்றால் வாய்பேசாதே
சீரிலே யிருந்தாக்காற் குளிகைசொல்லு
தெருவையிலே நின்றக்கால் ஞானியாகுந்
தூரிலே விட்டகுறை யானால்மைந்தா
சொற்பெரிய குளிகைமுதற் கவனமாமே. (18)

ஆமப்பா வுலகிற்சண் டாளருண்டு
ஆகடியும் பேசிவிவான் கோளுஞ்சொல்வான்
ஓமப்பா வுலவருடன் பேசவேண்டாம்
வுறவாடி வாதமது வுற்றுக்கேட்பான்
தாமப்பா வாதத்தைச் சொன்னையானாற்
றருதலன்பன் றவசெல்லாம் வீணாய்ப்போகும்
நாமப்பா வகண்டத்தை முழுதுங்காட்டி
நனிநமென்ற வாதத்தை நாட்டுவாயே. (19)

நாட்டுவது யாருக்கு மாணுக்காளே
நற்சீட ஞுக்கால் வாக்குச்சொல்லு
காட்டுகின்ற தசதீட்சை சொன்னபின்பு
கைமுறையாய் வாதத்தின் தீட்சைசொல்லு
போட்டிபண்ணிக் கிரிகிப்பான் பாவிபாவி
புலையனுக்குத் தீட்சைநீ யுரைத்திடாதே
வாட்டமில்லாக் குறியோர்க்கு வாதஞ்சொல்லு
வஞ்சகர்க்கு வாதமதை மறைத்திடாயே. (20)

மறையாதே போனுக்காற் ரோஷந்தோஷம்
மடையனுக்குச் சொல்லிவிட்டாற் பாழாய்ப்போகுங்
கறையான கண்டரிடம் வாதமப்பா
கண்டித்தே செய்யாதே கலங்கிப்போகும்
நிறையாக மனந்தேர்ந்து நிலையைக்கண்டு
நின்றுசித் தடைந்தவொரு முத்தருக்கும்
முறையோடே தசதீட்சை பெற்றபேர்க்கு
முகுத்தவொரு வாதத்தை மீட்டுவாயே. (21)

மீண்டதொரு சைவீரம் பலந்தானென்று
வீறுன வெள்ளையுமோ பலந்தானென்று
வாண்டதொரு வரிதாரம் பலந்தானென்று
வழுகான கெந்தியது பலந்தானென்று
வீண்டதொரு கொச்சிவெள்ளைப் பலந்தானென்று
விசைவான மனோசிலையும் பலந்தானென்று
பூண்டதொரு துருசதுவும் பலந்தானென்று
புகழான விணங்கனொரு பலந்தான்போடே. (22)

போட்டஞ்சு சுண்ணசெய நீராலாட்டி
புகழாக வில்லைதட்டி ரவியிற்போடு
காட்டெருவி லஞ்சுவைத்துப் புடமுந்திரு
கதிரவன்போற் செந்தூரங் கண்கொள்ளாது
தேட்டமுட னஞ்சுசுண்ணக் கவசத்தாலே
செம்மையுட னவச்சார நீராலப்பே
வாட்டமில்லா செந்தூரம் வெள்ளிதன்னில்
வகையாக நாறூற்றுக் கொன்றேசாத்து (23)

சாத்தப்பா வழலைசுட்டுக் கொண்டுநீரு
 தவறாமற் சிறுபெண்தான் மெத்தநன்று
போத்தியதோர் நாகமது நாலுக்கொன்று
 புகழாக முன்குருவிற் கலந்துதாக்கு
சூத்திரத்தைச் சொல்லிவிட்டேன் மாணுக்காகேள்
 சொற்பெரிய அட்சரத்தைக் கண்டுஆட்டு
வாய்த்ததொரு வாதமதிவ் வளவேசெய்யில்
 வகைகையிலே கஞ்சாவில் வைத்தலாமே. (24)

வைத்ததிலே வாதத்தி னெழுத்தையூனு
 வாகாக வாடிவிடு மண்டாண்டம்
கைத்தலத்தி லிந்தமுறை தெரிந்தமேலோர்
 காட்டார்கள் ராஜகுரு மறைப்பார்பாரு
மெய்த்தகுரு மொழிதவரிச் சொன்னுயானல்
 மேவிவந்த வித்தையெல்லாம் விழலாய்ப்போகுஞ்
சித்திரம்போல் மனதினிலே குருவைவைத்துத்
 திரமான வாதவித்தை யாடுவாறே. (25)

வாறான சமாதியிலே யிருக்கும்போது
 வகையான ரேசகத்தை நெஞ்சிற்றூக்குக்
கூறான கும்பகத்தை யுந்திக்குள்ளே
 குறிப்பாகப் புதைத்துவிடு வுயிர்போகாது
தேறான பூரகத்தைக் கழற்றிப்போடு
 செகமெல்லா மாண்டாலு மசைத்திடாது
தாறான தாரகத்தை நாட்டத்துள்ளே
 தறுகாமல் வைத்திருந்து சமாதிநீரே. (26)

திரடா வுந்தியிலே ஓங்காரந்தான்
 திரமான கண்டத்தில் வேகாக்காலைப்
பாரடா நாட்டத்திற் சாகாச்சென்னி
 பரமான வெளிவீட்டில் அகாரமாச்சு
சேரடா குண்டலிக்குள் உகாரந்தானுஞ்
 சிவசிவா யுகமட்டுஞ் சமாதிக்குள்ளே
ஆடலா மிவ்வளவுங் குகையைவிட்டு
 யாதியென்ற பொருளுலாப்பா ளறிந்துபாரே. (27)

பாரிலே திருடருண்டு கள்ளருண்டு
பாசாங்கு பண்ணியவர் வாதங்கண்டு
நேரிலே இதங்கேளிக்கைபார்த்து
நிலையான மேல்வீடு கட்டிவாழ்வார்
தாரிலே யவர்குறியைப் பார்த்துக்கொண்டு
காரணியில் விள்ளாதே தவறுண்டேபோஞ்
சார்பிலே வாதமென்ற பேச்சைக்கண்டாற்
றவறாம லவன்வாயில் மண்ணைப்போடே. (28)

போட்டவர்க்குத் தீட்சைமுன்பு சொல்லிப்பின்பு
புகட்டிவிடு மனமுறைந்த சீஷனானால்
தாட்டிகமா யறிவின்மதி கண்டபின்பு
தருகாமற் றூபரமு மிருப்புங்காட்டி
நாட்டிலே விளங்கியதோர் தலமுங்காட்டி
நலமான கயிலைமுத லண்டங்காட்டி
வாட்டமில்லா வுலகமெல்லாந் தன்னாற்காட்டி
வாகான வாசியுட வரிசைகாட்டே. (29)

காட்டிலே பொதிகைக்கு மேற்கேசேரு
கனமான கனகமலைச் சித்தர்வாழ்வு
நாட்டிலே தசதீட்சை செய்தபின்பு
நலமான பொதிகையிலே செல்லநன்று
தாட்டிகமாய்க் கனகமலைச் சித்தரப்பா
தயவான காயசித்தி கற்பமீய்வார்
மேட்டிமையாய்க் குளிகையது வேணதீய்வார்
வெகுசுழிவு தீட்சைகண்டு மலையிலேறு. (30)

ஏறுமுன்னே வாலைகற்ப மதனைக்கொள்ளு
வியல்பான மலைபதிலே செல்லாதப்பா
கூறுகின்ற குவலயத்தில் வாலைகற்பங்
கொண்டபின்பு மலையேறி வாழவேணுங்
தேறுகின்ற வுலகத்திற் பெரியோருண்டு
சிலைபோலே யவர்மனது வரமேவகாரு
மீறுகின்ற வாசியதுக் கந்தம்ரெண்டும்
விள்ளாதே யவர்மனத்தைச் சிமித்துக்காரே. (31)

காக்கையிலே நெற்றியில்முத் திரையைப்பாரு
   கனமான யிடக்கரத்திற் சங்குசக்ரம்
மூர்க்கமுட னிரண்டுந்தா னிருந்தாற்காரு
   முயற்சியுட னொன்றிருந்தால் முத்தியில்லை
தீர்க்கமுட னறிகையிலோ யொன்றாய்க்கண்டாற்
   சித்தியில்லை யென்றுசொல்லித் தெளிந்துகாணு
ஆர்க்கமுள்ள சித்தருக்கு யிரண்டுங்காணும்
   அம்புவியில் மானிடர்க்கு வொன்றுபாரே. (32)

பார்பெரிய உபயகுறி யிரண்டுங்கண்டு
   பதருமற் பனிரெண்டு வருஷங்காரு
சீர்பெரிய நெற்றியொன்று கண்டாயானாற்
   சித்தனல்ல வுலகமென்று தெளிந்துநோக்கு
நேர்பெரிய குறிகளிலே திரத்தைக்கண்டு
   நிலையான பிர்மமுனி யென்றேசொல்லிப்
பேர்பெரிய சித்தராப் பேருமிட்டுப்
   பிரமமுனி யென்றழைத்தார் பெரியோர்தாமே. (33)

தாமென்ற சித்தருடப் பேரைச்சொல்லிச்
   சாதகமாய்ப் பிழைத்திடுவா ருலகிற்கோடி
வேமென்ற வவர்மனத்திற் குறைவந்தாக்கால்
   வெந்துவிடு மண்டமெல்லா மறிந்துகொள்ளு
ஓமென்ற வுலகத்தை வாய்மூடற்றான்
   வுலைமுடி கிடையாது வுலகமாயை
ஆமென்ற மனதுரிமை கொண்டாயானால்
   அப்பனே நீயுமொரு சித்தனுச்சே. (34)

ஆச்சிந்த நூலுக்கு யிணையுமில்லை
   யப்பனே யிதைப்பழித்தாற் பாவியாவான்
ஓச்சிந்தச் சித்தருக்கு நூலென்றாலோ
   வொருகோடி யோசனையுந் தெண்டஞ்செய்வான்
பேச்சிந்தச் சித்தருடப் பேர்சொன்னாலும்
   பிறந்தாலு மவர்களுக்குப் பேருண்டாகும்
வச்சிந்த நூலதனை வாங்கிக்கொண்டா
   லியல்பான தவஞ்செய்தும் பலியாவாரே. (35)

வாறான விந்தநூல முப்பத்தாறும
        வகையோடே படித்தவர்கள் சித்தராவர்
நேரான தீட்சைவிதி குருவாற்கண்டு
        நேரறிந்தோ ருலகத்தில் ராசயோகி
கூரானப் பிராணயக் கருவினாலே
        குருடருக்கும் ஞானமது கூடும்பாரு
வாரானப் பதினெண்பேர் சித்தர்பாத
        மனுதினமும் போற்றியிந்த நூலுமுற்றே. (36)

பிரமமுனி ஞானம் ௫௱.

முற்றிற்று.





மதுரை பாத்திரக்கடை வியாபாரம் ந. ரா. ம. கணபதியாபிள்ளை பவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குமரன்றுணை.

எழுபத்தைந்தாவது:

பிரமமுனிவர் திருவாய் மலர்ந்தருளிய

# முப்பு தீட்சை ௪௫.



## வெண்பா.

ஆதியோ டந்தமில்லா வானந்த வெள்ளமெனும்
சோதியாம் பூரணத்தைச் சொல்லக்கேள்—ஆதித்தன்
மண்டலத்தில் வாசி வளரு மயேசனடி
குண்டலியின் றன்பரவுங் கொள். (1)

கோலமுடன் யோகக் குறிப்பறிய சந்திரனிற்
பாலைநிற மாகும் பருவங்கள்—சீலமுடன்
அன்னமரை தண்ணீர்கால் அப்பனை மண்டலநாள்
திண்ணையிடை யிற்பாயுஞ் சீர். (2)

சீரா யறுமாதம் சென்றன்னத் தானதுவும்
வாராமல் வாசி வணங்குமே—தாரான
வாய்வு வொடுங்க மனமொடுங்கப் போதமிகும்
வாதசவுக் காரத்தை வைப்பு. (3)

வைப்பான பங்குனி சித்திரை மாதத்தில்
உப்பாய் வளர்ந்த உவருப்பாம்—தப்பாமல்
பூவெடுப்பாய் நாலுபடி போடுசுத்த நீரெட்டில்
மாவெடுப்பாய் சுத்தியதா வாம். (4)

இதுபூவி னெண்படிக் கீய்வா யமுரி
யதிற்றெளிந்து மேகட்டு மப்பா—மதியான
சுண்ணமரைப்படியிற் சுத்தஜலம் நாலுபடி
திண்ணமுடன் நீத்தித் தெளி. (5)

தெளிவான ரெண்டுமே சேர்ந்துந் தொன்றாகில்
வழியான பாரையுப்பு மாறி—பழியா
திருந்த சலத்தி விடுதீ படியொன்றே
திருந்தவே காச்சிவத்தி தீ. (6)

தீயிற் குருக்குச் சிவந்து மெழுகுபத
மாயில்வீ ரம்வெள்ளை யாஞ்சூடன்—ஞய்வலகக்கு
ஓர்பா சிலடதா ஞுரைத்த வழலைக்குச்
சாருஞ் சரக்கெல்லாந் தான். (7)

தானான வில்லில்லை தாக்கு ரவிமுகத்தில்
மானே திசநாள் வலுவாகும்—ஏனமுள்ள
இந்தசவுக் கார மெவரு முரைபார்கள்
வந்த குருவின் வழி. (8)

வழியாம் வழலை மகத்தான காரம்
தெளிவாஞ் செலங்குத்திச் செல்ல—வெளியான
ஐங்குகையில் வைத்து அருளாற் புடமெரியத்
தங்கம் விளைந்தகுருத் தான். (9)

குருவாம் வழலையிலே கூரான வீரந்
திருவான கல்லுப்புத் திரும்—மருவ
ஒருமாதங் காய்ந்தபின்பு உத்தஞ்சு சுண்ணம்
தருசாரங் கூட்டியரைத் தப்பு. (10)

அப்பில் விளையுப்பு அப்பனே பொற்புடத்திற்
தப்பாமற் கூட்டாச்சு தானிதுவும்—செப்பக்கேள்
நாயுருவி சாம்பலிலே நன்றாகப் பின்பொருக்கால்
ஆவிபுட மொன்றிடுவை யால். (11)

ஒன்றிடவே உப்பதுதான் ஓகோகோ வென்சொல்வேன்
அன்றிக் குடகரியி லாடுமே—வென்றியுள
சித்த ரசமணியோ செம்பொன் வயிரமிதோ
முத்தமணி தானோ முதல். (12)

முத்தாரத்தி னுப்புமணி முன்வாதங் கைவைப்பு
மதத்தா மணிகாரம் வைத்தால்—மிதத்தசுண்ணம்

அஞ்சு மறைத்தழுத்தி யாறு புடம்போட
மஞ்சுலவு மல்லிகைப்பூ வாம். (13)

பூத்தவுப்பாற் கோடிவித்தை பூட்டலாஞ் சாரணையும்
சேர்த்துக் குளிகையிட்டுச் செல்லலாம்—ஏற்றமுள்ள
வாதமடங் காத்தொழிலு மாத்தா யிரத்தெட்டு
வேதையிட லாந்த யிலமே. (14)

தயிலத்திற் பட்ட சரக்கு மூபரசங்கள்
கயிலாசத் தாட்டுமெழு காகும்—ஓயிலாய்க்
களங்கு மொருகோடி கட்டுகளோ கோடி
வளங்கமொரு கோடிபற்ப மாம். (15)

தயிலவேதை.

பற்பங் குருக்கோடி பாஷாணங் தொட்டாட்ட
அற்பமல்ல ஆதிமுத லாம்வெள்ளி—சிற்பரையாள்
யீன்ற தயில மியம்பக்கேள் சொல்லுகிறேன்
யேன்ற கடுக்கா யெடு. (16)

எடுப்பாய்நற் செங்கடுக்காய் யீரைந்து தானே
அடுப்பா யிடித்துத்தூ ளாக்கி—வடுப்பாய்
அழூரியிட்டுச சாம மறைக்கால் வழலை
திமிரியிட்டு வில்லைதனைச் செய். (17)

செய்தபின்பு சொல்லக்கேள் செங்கடுக்காய் மூலமதைக்
கொய்தேநற் பட்டைத்தூள் கொட்டதிலே—வெய்த
தெசபலமாங் கெந்தகத்தூள் சேர்த்தே யிடிப்பாய்
அசையாங் கருநாவி யாம். (18)

நாவி யொருபலங்காண் நாட்டியரை முன்னீரால்
மேவியே காசதுபோல் வில்லைசெய்—யாவியே
பூதலத்தி லீத் தயிலம் பொற்பாக வேவாங்கி
மாதயில மென்றிதனை வை. (19)

வைத்ததயி லத்தாலே வாழ்ரசத்தைக் கட்டியே
மத்திித்துப் பூச வலுவீரம்—சத்திக்கும்

செம்பொன் மணியாகுஞ் செங்கடுக்காய் வேதையிது
அம்புவிக்கு ளோராட கம். (20)

ஆடக மாந்தயில மன்பாய்ச் சரக்குகட்டு
வாடத் துவைத்திடவே மாறுங்காண்—ஆட
மெழுகாகும் பட்டவிடம் வேதைதச மாத்தாம்
பழுதா மரிதாரம் பார். (21)

தாரம் மெழுகாகும் தனிச்செம்பு பொன்னாகும்
வீரம் மெழுகாகும் வெள்ளியிலே—சாரம்
தசமாற்றும் பாஷாணச் சார்விளக்கில் வாட்டில்
அசையாத செம்புவெள்ளி யாம். (22)

ஆமே தசமாத்தா யாடலாம் வெள்ளியப்பா
போமேபொன் மேருவதிற் பூட்டலாம்—தாமே
புதிதயில பாஷாணம் பூஷரவ லோகம்
மதியிற் பதினாறு மாத்து. (23)

வெண்குன்றித் தயிலவேதை.

மாத்தடா குன்றியுடன் மால்தேவி கெந்தகந்தான்
சாத்துவாய் வீறமுடன் பூரம்—சேர்த்தும்
பலம்பத்துத் தாரமொன்று யார்நாவி யொன்று
நிலவழலைச் சுண்ணமொன்று நேர். (24)

நேத்தியுள குன்றிதனை நேராக வேயுடைத்து
ஊத்து மமுரிதனி லூறவிட்டு—வாத்துரவே
சென்று விதுவெல்லாம் சேர்த்தாட்டி வில்லைசெய
வென்றார் முருங்கைப்பூ வே. (25)

பூச்சாற்றி னாலே புகழூந் தயிலமிதாம்
வாச்சதொரு வீரனைத்தான் மாட்டதிலே—காச்சவுற
வாட்டமுழுக் கட்டாகும் மாயும் வெடியுப்பிற்
கூட்டியுரை யுந்திசத்துக் கோர். (26)

திசத்துக்கோர் வீரனென்று சேர்ப்பாய் தயிலம்
தேசத்துக்கு ஒன்றிடுசெந் தூரம்—பசப்பான
வேகாத் தலைநீரும் விட்டரசந் தங்கமுதல்
சாருபற்பம் வேதைச் சரக்கு. (27)

வேதைச் சரக்கதனை விட்டால் மெழுகேது
பாதகசெந் தூரமது பற்றுமோ—தாதையிந்தப்
பற்பம்போ டாட்டாற் பலிக்குமோ வாதமப்பா
சிற்பரையைப் பூசைபண்ணித் தேர். (28)

தேர்ந்த தயிலமொன்று செப்பக்கேள் காட்டுள்ளி
யார்ந்தபலம் பத்துக்கு அப்பனே—சார்ந்தொரு
கெந்தி சரிகூட்டிக் கேசப் பொடிநாலு
வந்தமால் தேவியொன்று மாம். (29)

மாய வழலையொன்று மாட்டி யரையமுரி
பாயவிட்டு ஆட்டியே பார்வில்லை—நேயமுள்ள
கெந்தித் தயில மெழுகாம் மனோசிலைக்குத்
தந்தம்போற் கட்டுமே தாக்கு. (30)

தாக்கு மனோசிலையைத் தங்கபற்ப மேகூட்டிப்
பார்க்கப் படுசெம்பே பார்பரியாம்—ஏக்கம்
பிடிப்பானே னப்பாநீ பேசாக் கருவை
விடுபார்க ளோவெளியில் மேவு (31)

வெளியாந் தயிலமிது வேதை யொருகோடி
பழியாந் தயிலத்தைப் பாச்ச—வொளியான
மால்தேவி கட்டில் வனுவீரன் மாண்டிடுவான்
காலறுத்துப் போட்டேன் கரு. (32)

கருவழலை செய்தவனே சித்தனெனல்.

கருவழலை செய்து கரையேறும் வாதிமகன்
பெருவாழ்வு சித்தனெனப் பேசு—அரிதான
ஞானமெலாந் தங்கும் நமனேது நாட்டரசம்
தானறியுங் கருத்திதுவே தான். (33)

பாஷாண வேதை.

கரிசாலைச் சாற்றாற் கடுக வரையாய்
முருங்கவிரை மூவேழ் பலமுக்—திரும்ப
வழலையொன்று கூட்டி மகத்தாந் தயிலம்
அளவுக்குப் பாஷாண மாம். (34)

ஆமப்பா வெள்ளை யதையுங் கொடகரியிற்
சோமத் தயிலஞ் சுருக்கிடவே—நாமிந்தப்

பாசாண வேதை பதிமூன் நவலோகம்
விசாதே வெள்ளி யதுவே. (35)

முருங்கைத் தயிலத்தில் வீரம்.

வெள்ளி முருங்கை விதைத்தயிலந் தன்னாலே
வள்ளலெனும் வீரத்தை மாட்டியதை—கொள்ளியென்ற
பிள்ளைக்குஞ் சொல்லாதே பேராய் ரவித்தகட்டில்
மெள்ளவே பூசி விடு. (36)

வெள்ளிப் பற்பம்.

வெள்ளியுட பற்பம் விருப்பமுடன் சொல்லக்கேள்
கள்ளியுப்பு தாழையுப்பு கற்சுண்ணம்—வெள்ளையுப்பு
நீருஞ் சமனிடையாய் நேர்வகைக்குக் காற்கழஞ்சி
மீரு மரிதார மே. (37)

தார மொருகழஞ்சி தாக்குபடிச் சாற்றாலே
சேர வரைத்துத் திரட்டியே—பாரமுடன்
வங்கமென்ற வெள்ளியம் மாறுங் கவசமிட்டு
இங்கிதமாய்ப் போடுபுட மே. (38)

புடத்தினிலே வங்கம் புரண்டுபொடி யாகும்
தடித்துவெடி யுப்பிற் சரியாய்—நடத்தி
அரைப்பாய்ப் பழச்சாற்றா லப்பா இசைக்கொன்று
விரைப்பாய் வழலையதன் மேல். (39)

மேலான வில்லைசெய்து மீட்டிப் புடம்போட்டு
மாலான சுண்ணமாம் வங்கமே—சீலான
வீரம் இசைக்கொன்று விட்டாட்டுச் சாற்றாலே
காரவெள்ளி யாந்தகட்டிற் காண். (40)

காணக் கவசமிட்டுக் கட்டிப் புடம்போடு
வீணல்ல சுண்ணமாம் வெள்ளிதான்—தோணவே
வெள்ளித் தொழிலுக்கு வேதைக் குருவிதுவாம்
உள்ளபடி சொன்னே னுணர். (41)

வாதத்துக்கு முக்கிய கவனிப்பு.

உணருங் குருவிட்டால் ஓகோகோ வெள்ளை
பிணமாகும் வாதிமகன் பேச்சே—குணமான
வெள்ளிக் குருவோடு வேந்தனெனும் வீரமிடு
துள்ளிவிடும் வெள்ளித் தொழில். (42)

தொழிலான பொன்னுக்குச் சொர்ன குருவேணும்
கழியா வழலைக் கருவே—வெளியாகச்
சொன்னேன் முறைப்பாடு சொல்வதொன்று மில்லையே
கன்னக்கோ லாம்வழலை காண். (43)

காணப்பா வைந்நூற்றைக் கண்டு கருவழலை
பூணப்பா பொன்வெள்ளி பூட்டலாம்—வீணல்ல
சொன்னே னதிலெடுத்துத் தோணுமிந்த அஞ்சுபத்தும்
பொன்னேபொன் னீரே பொருள். (44)

பொருள்காண வேகந்தி பூட்டினார் வாதசித்தி
அருள்காண வாசிசித்தி யப்பா—மருவ
சிவக்யான தீட்சைவிதி செப்பினேன் நூறும்
பவக்குறைகள் நீக்கியே பார். (45)

பிரமமுனி முப்புதீட்சை ௪௫.

முற்றிற்று.





மதுரை வடக்குவாசல். யானைக்கல்தெருவிலிருக்கும் வித்வான், மு. குழந்தைவேலுப்பிள்ளை யவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதி யின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருவே துணை.

எழுபத்தாறுவது:

சங்கமுனிவர் திருவாய்மலர்ந்தருளிய

# விஷவைத்திய சூஸ்திரம்.

ஆதிபரா பரையினிரு பாதம்போற்றி
அன்பான பூரணத்தி னருளேபோற்றி
நீதியாய் நாதாக்கள் பாதம்போற்றி
நிரஞ்சனமாஞ் சுகாதீதப் பொருளேபோற்றி
சோதியாய் நின்றிலங்குஞ் சுடரேபோற்றி
சொற்பெரிய மூலகண பதியேபோற்றிப்
பாதியாய் மதியணிந்த குருவைப்போற்றிப்
பாடினேன் விசவைத்யம் பாடினேனே. (1)

பாடினேன் விசவைத்தியம் பெருநூலெல்லாம்
பண்பாகப் பார்த்ததனைச் சுருக்கியேதான்
நாடியே சூஸ்திரமாம் பதினாறுக்குள்
நாட்டினேன் சுலபமதா யொளித்தார்சித்தர்
தேடியே யவர்கள்பதம் பணிந்துவாங்கித்
தேசத்தில் நல்லோர்க்கு யீய்ந்தேனப்பா
சாடியே சங்கமுனி விசநூலென்றால்
தாண்டுமே கடல்கடக்கச் சற்பந்தானே. (2)

தானான வென்னூல்போல் வெளியாயாருஞ்
சாற்றவில்லை சாற்றவில்லை சார்ந்துபாரு
கோனான ரெகுராம தேவர்சொன்ன
குருநூலைப் பொருள்மறைத்துக் கூறிப்போட்டார்
தேனான கும்பமுனி ஐயர்நூலிற்
றெளிவுமுண்டு வெகுகடின மாகுந்தானே
வானான சித்தர்கள்தன் பாடலெல்லாம்
வகைதோணச் சொல்லவில்லை மறைத்தார்பாரே. (3)

பாரேநீ யின்னூலில் வெளியாய்ச்சொன்னேன்
படியாத மூடருக்கும் பண்பாய்த்தோணுந்
தேரேநீ குழந்தைகளுந் தெளிவாய்க்காண்பார்
சிறப்பாக யின்னூலைப் பதனமாக
பேரேநீ வைத்துக்கொள் தருவதானால்
பெரியோர்கள் கேட்டாக்கால் கொடுத்துவாங்கு
கூறேநீ யிந்தவித மொருவர்தானுங்
கூறாத வித்தையிது கூர்ந்துகாணே. (4)

காணவென்றாற் காணரிது சட்டைநாதர்
கருக்கிடை சூஸ்திரத்தில் மறைத்துச்சொன்னார்
நாணவே விசவகைக்குத் தேரையாரும்
நாட்டினா ரன்பதுக்குள் நயமாய்ப்பாரு
தோணவே சித்தர்சொன்ன நூலுக்கெல்லாஞ்
சோதியென்ற தீபமது கலபமெத்த
பூணவே நான்வெளியாய்ச் சொல்லிப்போட்டேன்
புத்தியுள்ள பிள்ளைகளே புகலக்கேளே. (5

புகலுகிறேன் விசமிரு பலந்தான்வாங்கிப்
புதுமையுடன் வாளோடுமேற் றேடுபோக்கி
இகலுகிறேன் பச்சைக் கிரட்டிகூட்டி
யிலுப்பையுட புண்ணாக்கைப் பொடியாய்ப்பண்ணி
வகலுவே யப்பொடியை மைந்தாநீகேள்
வடிகட்டி நாலுபலம் திருத்துக்கொண்டு
அகலுகிறேன் முன்மருந்தோ டொக்கச்சேர்த்து
அம்மியிலிட் டிப்பொடியை மையாய்த்தானே. (6)

மையாக அரைத்ததொரு பொடியையெல்லாம்
வாரியொரு சிரட்டைதனில் வைத்துக்கொண்டு
மெய்யாக யிரிரண்டு கள்ளிப்பாலை
விட்டுநீ கிண்டிடுவாய்க் குழம்புபோலே
ஐயாகேள் நாழிகையா றைந்துதானு
மப்பனே மூடியதை நிணலில்வைத்து
செய்யாலே தானெடுத்து மைந்தாநீயுந்
திறந்துபார் புட்டுப்போல் தோய்ந்துபோமே. (7)

தோய்ந்தபுட்டுப் போலிருந்த பருவங்கண்டு
சுகமான நிசமான யிலைச்சார்வாங்கி
ஆய்ந்தபெருஞ் சிரட்டைதனில் வைத்துக்கொண்டு
அப்பனே முன்மருந்தைத் தானுநன்றாய்
ஓய்ந்துமே போகாமல் நிதானமாக
வுருட்டியந்தச் சார்துவைத்துச் சுளுக்கிற்போடு
காய்ந்தகதிர் தன்னிலிதை வைத்தால்மோசங்
கனிவாக நிழலுலத்திப் பதனம்பண்ணே. (8)

பண்ணியதைப் பேய்ச்சுரையின் குடுக்கைதன்னில்
பக்குவமா யடைக்கநன்று அநுவில்லாட்டால்
புண்ணியனே பனையோலைக் கொட்டான்தன்னில்
புதுமையுட னடைத்தினிமேற் புகலக்கேளு
நண்ணியே காலிசெய்யான தேழும்நீக்கும்
நாட்டுகிற பெருவிசஞ்சில் விசங்கட்கெல்லாந்
தண்ணியென்ற இளவெண்ணீர் தன்னிலேதான்
சற்குழம்பைத் தான்கலாத் தீருவாயே. (9)

ஈருவாய் மருந்தையிள வெண்ணீரில்தா
னிப்படியே கலாத்துவுள்ளூக் கேத்திப்பாரு
காய்கவே மண்டைகொண்ட விசத்தையெல்லாங்
கடிவாயி லிரக்குமப்பா பேதிகாணும்
ஓய்கவே பேதியுமே அஞ்சுதரமானால்
உப்பகற்றிப் பச்சரிசிக் கஞ்சியுண்ணநிற்கும்
பாய்கவே குழம்புகொண்ட நாழிமுப்பான்
பச்சரிக் கஞ்சியுண்பா யறிந்துதானே. (10)

தானென்ற மறுநாளில் வயறனந்தல்கண்டாலத்
தன்மையுடன் பச்சரிசிச் சோற்வடித்து
மானென்ற சுடுசோத்தில் வெள்ளாட்டின்பால்
வரிசையுடன் விட்டருந்த வயறனத்தல்தீரும்
தேனென்ற இம்முறைதா னுநுஞ்சொல்லார்
தெளிவாகச் சொல்லிவிட்டேன் சூஸ்திரந்தன்னில்
கோனென்ற ராசர்மெச்சும் விசகுடோரிக்
குழம்புகண்டாற் சற்பமெல்லாங் குடிபோம் பாரே. (11)

பாரடா பெருச்சாளி யெலிவிசங்கள்
　　பறக்குமடா யிந்தவகை யறிந்துபாரு
சாரடா விஷங்களெல்லாஞ் சாந்தமாகத்
　　தன்மையுடன் மந்திரமொன்று சாற்றக்கேளு
சேரடா வயற்தோளுங் காலுமாகத்
　　தியானித்துப் பாத்திடவே தீருந்தீரும்
ஆரடா யென்னைப்போலே சொல்லப்போறார்
　　அப்பனே தெரியாட்டா லறியக்கேளே.

அறியுகிற வகையென்ன வென்றுயானால்
　　அப்பனே சொல்லுகிறேன் பெரியோர்தானும்
வெறியான கட்குடிக்கும் போதிலேதான்
　　விள்ளுவா ரவர்கள்பதம் விரும்பிநன்றாய்க்
குறியான ஆண்டுபனி ரெண்டுங்காத்தால்
　　குணமறிந்து மந்திரத்தை யுபதேசிப்பார்
தெரியாத புத்தியினால் வெளிசொல்லாதே
　　தெளிவாகக் கண்டறிவாய் திரஞ்சொன்னேன்னே

சொன்னதொரு மந்திரத்தைக் கடிவாய்தன்னிற்
　　சூட்டியே நயனந்தா லமுத்திப்பாரு
என்னசொல்வேன் விசங்களினாற் செத்தபேரு
　　மெழுந்திருப்பா ரிந்தவித்தை அதிதமப்பா
மின்னியே மற்றமற்ற வித்தையெல்லாம்
　　விசவித்தைக் கொவ்வாது மெய்யிதாகுந்
தன்னிமையாய்ப் பார்த்தவர்க்கு யெல்லாஞ்சித்தி
　　தனையறியாற் கொன்றுமில்லை யெல்லாம்வீணே.

வீணென்று நினையாதே மந்திரசூட்சம்
　　விள்ளாதே விசகுடோரிக் குழம்பைமைந்தா
காணென்ற ஆடுடனே மாட்டுக்கெல்லாங்
　　கரைத்தினவெண் ணிரிரண்டோன் றியத்தீரும்
பூனென்ற இம்முறைதா னுரிற்சொன்னேன்
　　புதுமையுட னெட்டிலுமோ புகழ்ந்துசொன்னேன்
பேணென்ற விசவைத்தியம் புண்ணியமாகும்
　　பெருமையுண்டு அருமையுண்டு பேணிப்பாரே.

பார்க்கவே பலநூறும் நன்றாய்ப்பாரு
பாடியதோர் கருமறைப்பும் வெளியாய்த்தோணும்
மார்க்கமுடன் மானிடர்கள் பிழைக்கவேண்டி
மாட்டினேன் வெளிதிறந்து மைந்தாமைந்தா
ஆர்க்குமிதைச் சொல்லாதே அறிவுகூர்ந்து
அப்பனே யுணர்வோடு வுற்றுப்பாரு
காக்கவே விசவைத்தியம் பதினாறுக்குள்
காட்டினேன் கருக்கிடைசூஸ் திரந்தான்முற்றே. (16)

சங்கமுனிவர் விஷவைத்தியம் ௧௬

முற்றிற்று.





மதுரை பாத்திரக்கடை வியாபாரம், ந. ரா. ம. கணபதியா பிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குமரன்றுணை.

எழுபத்தேழாவது:

சங்கமுனிவர் திருவாய்மலர்ந்தருளிய

# விஷநூல் சுருக்கம் அ.

அகண்டபரா பரையினிரு பாதம்போற்றி
அரைகிறேன் விசவைத்தியச் சுருக்கந்தன்னைப்
புகன்றிட்ட நூறினிலும் பதினாற்கனில்
பொருளெல்லாம் வெளிதோணப் புதைப்பில்லாமல்
உகந்திட்டச் சுருக்கமெட்டில் நன்றாய்ச்சொன்னேன்
ஓகோகோ யிதையறிந்து ஒளித்தார்சித்தர்
மகிழ்ந்தவரைப் பதம்பணிந்து நூலைவாங்கி
மானிலத்தில் நல்லோர்க்கு வளங்கினேனே. (1)

வளங்கினேன் மணிமந்திர ஔஷதங்கள்
வாகாக வெளிதோண மறைப்பில்லாமல்
களங்கமறச் சொல்லிவிட்டே னிந்தநூலைக்
காட்டினால் நல்லோர்க்குக் காட்டவேண்டும்
விளங்கவே யெனைப்போலே யாருஞ்சொல்லார்
மேதினியிற் சங்கமுனி விசநூலென்றால்
உளங்கலங்கி மதிமயங்கிச் சற்பமெல்லா
மோடியெழு கடற்கப்பா லொளிக்குந்தானே. (2)

தானென்ற பச்சையொரு பலந்தான்வாங்கித்
தன்மையுள்ள வாளமதுக் கிரட்டிகூட்டித்
தேனென்ற பிண்ணாக்கு அதற்குரெட்டி
சேர்த்துநீ கல்வத்திற் றிரமாயாட்டிப்
போனென்ற சிரட்டைதனில் வாரிவைத்துப்
புகள்முறுகிப் பால்நிறைய விட்டுமைந்தா
கானென்ற ஆவரையின் கப்புகொண்டு
கலக்கியே குளம்பாகக் கிண்டுவாயே. (3)

இண்டியே கடிகைமுப் பதாகமட்டுங்
கெணியாமல் நிழலில்வைத் தப்பாற்பாரு.
உண்டுமே பிட்டுப்போ னுரைந்திருக்கும்
உடனேநீ முறைமயக்கிச் சாறுவாங்கி
கண்டுசிறு சுண்டைக்காய்ப் பிரமாணம்நீ
கையாற வுருட்டியந்தச் சாத்திற்றேய்த்து
விண்டுபோ காதபடி நிழலிலிட்டு
விரையமுட னுலர்ந்தபின்பு பேசக்கேளே. (4)

பேச்சென்ன பேய்ச்சுரையின் குடுக்கை தன்னில்
பெருமையுட னடைத்துவிசந் தீண்டினோர்க்கு
ஆச்சென்று ஒருசிறங்கை யிளவெண்ணீரில்
அப்பனே ஒருவுருண்டைக் கரைத்துத்தாக்கு
வாச்சென்ற கடிவாயில் விசமிறங்கி
வயறிரச்ச லுண்டாகிப் பேதிகாணும்
பாச்சென்ற ஆகாரமதுக் குப்பில்லாமற்
பச்சரிசிக் கஞ்சியுண்ண நிற்குந்தானே. (5)

நிற்குமடா வயறனத்தல் மறுநாட்கண்டால்
நீகுடிப்பாய் வெள்ளாட்டின் பாலைமைந்தா
தக்கமிடுஞ் சகலவிட மிதிலடங்குந்
தாரணியில் மாடாடு தனக்குமாகுங்
கற்கவே மந்திரத்தைச் சொல்லக்கேளு
கனிக்குமுன்னே தண்ணீரு மணலுஞ்சேரு
சற்குருவா மண்ணொருப்பு பின்னேகூட்டு
தானுறுறாந் தெட்டோதத் தணியுங்கேளே. (6)

கேளடாச் சதாசிவனுற் பதியில்வாழுங்
கெடியான பூரணத்தைக் கடிவாய்தன்னில்
வேளடா தடவிடவே விசங்களெல்லாம்
வெகுசுருக்கா யிறங்குமடா விரும்பிப்பாரு
தேளடா விசவைத்திய மென்னைப்போலே
சித்தர்க்ள்தான் சொல்லார்கள் தெளிவிதாகும்
ஆளடா யின்னூலை வெளியிற்போட்டால்
ஆகாது மைந்தாபா ரிவைசொன்னேனே. (7)

சொன்னதொரு பதினாறும் நூறும்பாரு
சலபமாஞ் சுருக்கமிந்த வெட்டும்பாரு
பண்ணுமே பலநூலும் பரிந்துபாரு
பார்த்திட்டாற் கருக்களெல்லாம் வெளியாய்த்தோணும்
என்னூல்குத் தேரையர்நூ லன்பதுந்தா
னிணையல்லாற் பின்னொன்று மிதற்கொவ்வாது
மூன்னூறு மறிந்துசெய்தால் சித்திசங்க
முனியுரைத்த விசலைத்தியச் சுருக்கமுற்றே. (8)

சங்கமுனி வித்நூல் சுருக்கம் ௮.

முற்றிற்று.





மதுரை பாத்திரக்கடை, வியாபாரம் க. ரா. ம. கணபதியா பிள்ளை யவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருவேதுணை.

எழுபத்தெட்டாவது:

தன்வந்திரி திருவாய்மலர்ந்தருளிய

# ஞானம் ௰௨.

கலையடங்கி அறிவறிந்த பெரியோர்பாதங்
 கண்ணாடிக் குள்ளிருந்த அசைவின்பாதம்
மலமெடுத்து நிலையறிந்த ரிஷிகள்பாதம்
 மதிகடந்த அயன்பரத்தி னருளின்பாதம்
குலைசாய்ந்த வட்டத்தின் முனையின்பாதம்
 குணமூன்று மொத்துநின்ற குருவின்பாதம்
நிலையொடுங்கி அருளுயர்ந்த பிரமன்பாதம்
 நிறைந்தமலர் நிர்வாணி கணேசன்காப்பு. (1)

துருப்பான ரவிமதியின் சத்திவாங்கிச்
 சுத்தமுற்ற கல்வத்தி லாட்டுஆட்டு
மருப்பான மூன்றெழுத்தி லுருக்கிச்சாய்க்க
 மயங்காதே நெடுங்காயந் தங்கம்போலாம்
நெருப்பான அறைதிரந்து புடத்தைப்போடு
 நிலைச்சுதடா பளிங்குபோல் நிறமேயாகும்
குறிப்பாக அணுவளவு மேலேகொள்ளு
 கோளில்லை நமனில்லை அருளிற்சேர்வாம். (2)

அருளான வகையென்ன கருவைக்கேளு
 அயன்மாலு மறியாத அரசேவுள்ளே
பொருளாமோன் றிருக்கிறதுன் னறிவினாலே
 புரிந்தவகை தெரிந்துரைக்க நாவோயில்லை
இருளன்றி யிருந்தவரே ஞானியாவர்
 இந்தவகை யொருவருக்குஞ் சொல்வாரில்லை
மருளன்றி வாழ்ந்திடுவார் லோகப்பேர்கள்
 மயக்கமற்றோர் நிலையில்நின்றாற் சித்திதானே. (3)

சித்தித்தாற் சிவன்வேறே யிருக்கிறானோ
தேகத்தில் ஓடவிட்டாற் சிவன்வேறப்பா
முத்திபெற வேண்டிமுத லெழுத்தைமாட்டு
மோசமில்லை யொவ்வொன்றின் முனையிற்சேர்க்கும்
சத்தியமாய்ச் சொல்லுகிறே னிந்தநூலைத்
தன்மையுடன் கால்வழியே தேக்கிப்பாரு
வெத்திகொண்டு நிற்குமடா மணிபோலாடி
மேல்வாசல் சேர்க்குமது திங்கள்பத்தே. (4)

பத்தியே நீயறிந்து சாபமிட்டாற்
பாழாகும் அண்டரண்டந் தீயாய்வேகும்
முத்தியென்ற சம்பத்தி னடியிற்றூங்கும்
முனிவொளியப் பேச்சில்லை முழுதுமப்பா
நத்தியே நாசிக்குள் ளுறைந்தடங்கும்
நற்குகைக்குள் மணியாகு மெவர்தான்கண்டோர்
அத்தியே யிப்படித்தான் பார்த்திரானால்
அழைப்பாரே சித்தரெல்லாங் குகைக்குத்தானே. (5)

குகைதனிலே தவங்கள்செய் திருந்தாயானால்
கோடியுகம் பிர்மத்தோ டிருக்கலாகும்
தகைசபையில் நீயொடுங்கிச் சித்துமாடித்
தன்வந்திரி மகனென்று பேரும்வாங்கித்
துகைதனிலே உன்தேகம் வலுத்துப்போச்சு
தோற்றாத பிர்மத்தின் செயல்தன்னாலே
செகமதிலே சிவயோக மார்க்கப்போக்கைச்
செப்பினேன் இதுவழியே சேரலாமே. (6)

சேரலாம் மூலமென்ற நாடிதொட்டுச்
சித்தரியு முள்ளெழுத்தாற் றெளிந்துவோறு
ஏரலாம் ஊசிக்கண் துவாரமாக
யிறப்பேது பிறப்பேது அடங்கிப்போகும்
மாரலாங் கீழ்மேலும் நடனமாடி
மனக்கண்ணி லிருப்பிடந்தான் பொதிகையுச்சி
தேரலாங் குருவினுட உபதேசத்தாற்
சிதம்பரமாம் ரகசியத்தில் ஒடுக்கங்காணே. (7)

காணுவது குருவினுட கருவைக்கேளு
கடையெழுத்துந் தலையெழுத்தும் அறிவுமப்பா
ஊனுவது குருவுக்கு அங்கிபூட்டி
உடலில்நடு மையமடா வாசிவீடு
ஆணுமது பெண்ணுமது ரெண்டுமொன்றாய்
அடங்கிநின்ற இடமல்லோ தங்கமாகும்
வீணுமது சொல்லவில்லை யிந்தஞானம்
வேதாந்தக் கொம்புசுழி வெளிவிட்டேனே. (8)

வெளிவிட்டு மூப்பாழ்சென் றப்பாலேறி
விண்ணுன பயிர்செய்து விளையவைத்தால்
ஒளிவிட்ட ஓமென்ற எழுத்திஞலே
உற்றதுணை யொருவரில்லை உண்மையாகக்
கழிவிட்ட காலதனில் ஒடுங்குமாகிற்
கண்ணூடிப் பிர்மத்திற் கலந்துபோகும்
சுழிவிட்ட வெழுத்ததினுல் முத்தியேறும்
சொரூபநிலை யிலாதவிடங் குடியதாமே. (9)

குடியிருந்த அந்தரத்தில் ஊமையப்பா
குருவெங்கே பிர்மமெங்கே ஒன்றுமில்லை
தொடிவந்தாற் கொள்ளும்போ தருள்தானெங்கே
தோற்றாத விடந்தனிலே யாருமில்லை
அடியினிலே காத்திருந்தா லருள்வந்தெய்தும்
அப்பவல்லோ அகத்தீசர் மகனென்பார்கள்
முடிவறிந்து சித்தருடன் வாதுபேசி
மூவஞ்சு வரைகடந்து தெரிசித்தார்கள். (10)

தெரிசித்தா லிந்தநூற் பனிரண்டப்பா
தெளிவான ஆறுடனே அஃ,சிறகாணும்
வரிசித்து வந்தவுட னமுதஞ்சிந்தும்
வரையடங்கி நின்றவரே மவுனியாவர்
அரிசித்தர் ரிஷிமுதலாய்க் குளிகைபிட்டு
அடுக்காகச் சராசரங்கள் சுத்தியாடிப்
பரிசுத்த மானவிடந் தன்னைக்கண்டு
பாழ்மனையிற் குடியிருந்து பருவம்பாரே. (11)

பாரப்பா ரவிமதியின் சித்துச்சொன்னேன்
　　பரிவான மூன்றெழுத்தின் கருவுஞ்சொன்னேன்
சேரப்பா அட்சரங்கள் தனியாய்ச்சொன்னேன்
　　தெளிவான ஊமையுட னெடுக்கஞ்சொன்னேன்
காரப்பா ஞானத்தின் காலேச்சொன்னேன்
　　கைலாசப் பிரமரக சியமுஞ்சொன்னேன்
சாரப்பா கருவியெல்லாம் நீறய்ப்போகும்
　　சரமான ஞானம்பன் னிரண்டுமுற்றே. (12)

தன்வந்திரி ஞானம் ௰௨.

முற்றிற்று.





மதுரை பாத்திரக்கடை வியாபாரம், ந. ரா. ம. கணபதியா பிள்ளை யவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதிபின்படி இந்தசாஸ்திரம் அச்சிடலானது.



உ

குமரன்றுணை.

எழுபத்தொன்பதாவது:

தன்வந்திரி திருவாய்மலர்ந்தருளிய

# ஞானசைதன்யம் உக.

திருவாகி யுருவாகி யரூபமாகிச்
சித்தாகிச் சித்தறிந்த வஸ்துவாகி
அருளாகி யானந்த தீபமாகி
அண்டபிண்டத் தாதார பூதமாகிப்
பொருளாகி யிடைபிங் கலையுமாகிப்
பூரணமாய் நிறைந்தவெளி யிடமாகிக்
குருவாகி யகிலசரா சரமுமாகிக்
குலவுநின்ற பரம்பொருளின் பாதங்காப்பே. (1)

பாதமலர் போற்றிசெய்து ஒளியைக்காணப்
பதிகடந்து சென்றாலு மறுதியப்பா
காதவழி மேலேறிப் பார்த்தாலுந்தான்
கரையென்ற முடிவதற்குக் கிடையாதப்பா
பேதமில்லை சடலத்தா னுணிப்பார்க்கப்
பிசகாத சிற்றண்டம் வெளியாய்த்தோணும்
நீதமுட னிந்தவித மறிந்துகொண்டால்
நின்றநிற் சொரூபமதைத் தெரியலாமே. (2)

ஆமப்பா யிருவிழியின் மத்தியிற்றான்
அப்பனை மூக்குநுனி யடிவாரத்தில்
நேமப்பா யீசன்வீற் றிருக்கும்பீடம்
நிலையறிந்து கொண்டவர்க்கு நன்றாய்த்தோணும்
நாமப்பா கண்டல்லோ விபூதியோடு
நலமான சந்தனமும் பொட்டதாகத்
தாமப்பா குங்குமங்கஸ் தூரியிட்டுத்
தயவுபெறப் பூசிப்ப தறிந்துபாரே. (3)

பாரடா மானிடரின் சடலத்துள்ளே
பண்பான தலமதனைக் குறிப்பாய்க்கண்டு
நேரடாப் பொட்டிட்டுப் பார்க்கவேண்டும்
நிலையுணர்ந்த மேலவர்க்குத் தெரியுமப்பா
ஆரடா தெரிவார்கள் கற்றோர்தானும்
அத்தலத்தின் மகிமைதனை யறிந்துகொள்வார்
சீரடா பிர்மசொரூ பம்நிறைந்து
துலங்குமந்த நிலமதனி லென்றுசொல்லே. (4)

சொல்லவடி நடுவுமுடி வெங்குந்தானாய்
சுடரிரவி மதியென்ற விரண்டுமாகி
வல்லதொரு காந்தியதாய் நிற்குஞ்சோதி
மாநிலமே லானதுவும் வன்னியாகும்
நல்லருளாந் தலமப்பு வெளியாம்வாய்வு
நற்பெருமை தேவுமண்டம் இடமும்மண்ணு
ஓல்லென்ற அதிபதிதான் பஞ்சகர்த்தாள்
ஓங்காரச் சடாட்சரம்வாழ் மூலமாமே. (5)

மூலமென்ற ஓங்கார மொன்றேகோணம்
முழுதொடுங்குஞ் சுழியொன்று நடுவிகாரம்
ஞாலமென்ற இகாரவட்டந் தனிலேவாசி
நன்றாகத் தீர்ந்தபின்பு சுவாசமுண்டாய்ச்
சீலமென்ற இடகலைபிங் கலையுமாகிச்
சிறப்பாக வளையம்போற் சுழன்றுபொங்கிக்
கோலமென்ற சுழினையில்ரே சகபூரகமுங்
கும்பகத்தி லமர்ந்துநின்று சுவாசமாச்சே. (6)

வாசமது கும்பகத்தி லொன்றுக்கொன்று
வளமாக வுதவியதா யிருந்துகொண்டு
நேசமுடன் கோடியென்ற வுகாந்தகாலம்
நேர்மையுட னுறுதிபெறச் செய்வாயாகில்
தேசமதி லுன்றனைப்போற் சித்தனுண்டோ
தேசுடைய யோகநிஷ்டை செய்துபாரு
மாசற்ற முத்தர்களிம் முறைமையேசெய்து
மகத்தான யோகசித்தி பெற்றவாறே. (7)

யோகசித்தி யானபிரே சகமும்வன்னி
யுறுதியுள்ள பூரகமென் றதுவுமப்பு
தாகசித்தி ரேசகத்திற் கும்பித்தேதான்
சரியாகச் சுழன்றுமதி வகாரம்புக்கும்
மாகசித்தி யிவ்வகைதான் சூட்சமாகும்
வாசிநிலை சகலமுந்தா னடங்கிப்போச்சு
தேகசித்தி மாயைதனை யகற்றினோர்க்குச்
சித்திக்குந் தொழிலெல்லாம் வாய்க்குந்தானே. (8)

தானென்ற நவக்கிரகந் தன்னிலாச்சு
தன்மனத்தா லனுக்கிரகந் தன்னைக்காணு
மானென்ற வனுக்கிரக மல்லோவிந்து
வளமான நவக்கிரக மென்றநாதம்
தேனென்ற வனுக்கிரக முடிவதாச்சு
தெவிட்டாத நவக்கிரகம் கற்பமாச்சு
கோனென்ற அனுக்கிரக மிரவுமாச்சு
குணமான நவக்கிரகம் பகல்தானச்சே. (9)

பகலென்ற வுச்சத்தால் மோட்சமப்பா
பாலகனே யிதிலாச்சு சூட்சந்தானும்
இகலென்ற பரவெளியில் நின்றுகொண்டு
இருதயபத்தைச் சுயமாக்கி யிருளைப்போக்கிச்
சகமென்ற மாயைதனை யகற்றிநீயும்
சத்திமுன் றெழுத்ததனைத் தியானித்தேதான்
சுகமாகப் பூசைசெய்து வாலைதன்னைச்
சுந்தரம்போ லறிந்திடவே சித்தனாச்சே. (10)

சித்தனென்ற பெயர்படைத்தார் முத்தரெல்லாம்
சிறப்புடனே மலைகுகைகள் தனிலிருந்து
கத்தனைத்தான் வணங்கிமிகக் கருணைகூர்ந்து
காசினியி லொருவருக்கு முரைக்காவண்ணம்
புத்திமிகு மென்குருவாம் நந்திதானும்
புகன்றதொரு வல்லாதி லேகியத்தை
வெத்தியுடன் கற்றுணர்ந்தோர் தங்களுக்கு
விளம்புவா யென்றபடி சாற்றுவேனே. (11)

சாற்றுவேன் வெள்ளறுகு சிவனார்வேம்பு
　　சாருஞ்சங் கங்குப்பி நெத்துத்தூங்காய்
போற்றமுக்கி லாநெருடன் கிழங்குநாறும்
　　பொருந்திடவே குமிழம்வேர் விளாத்திசிந்தி
ஆற்றுதலில லாதவெட் பாலையோடு
　　அதிசுக மிளகரனை யானவேரும்
நாற்றிசையோர்க் கின்பமுறுஞ் செங்கத்தாரி
　　நல்லகுண்டு மணிவேர்பார் பலமாய்வாங்கே. (12)

வாங்குநீர் முள்ளிக்குஞ் சீரகந்தான்
　　மதிபிரப்புங் கிழங்குடனே சித்ரமூலம்
தாங்குநற் சீரகமுங் கரப்பான்பட்டை
　　நயவான பூதவிருட் சத்தின்பட்டை
தீங்கில்லாக் கொந்தகமுந் துருசுதுத்தம்
　　திரமாகச் சுத்திசெய்த சூதமோடு
நீங்காம லிவைகளெல்லாம் பலமதாக
　　நீருத்திடுவாய் பனைவெல்லம் வீசையொன்றே, (13)

ஒன்றதுதான் படியென்று மிதனிற்சேர்த்து
　　உற்றபரங் கிப்பட்டை பலந்தானைந்து
குன்றுமற் சேங்கொட்டை யைம்பதாரும்
　　குணமாக வொன்றாகக் கூட்டியேதான்
மன்றாடி மீசர்பதம் வணங்கிப்போற்றி
　　மதிமயக்க மில்லாம லுரலிற்போட்டு
நன்றாக இருப்புலக்கை யாலிடித்து
　　நலம்பெறவே மைபோலே ஆக்கிடாயே. (14)

ஆக்கியபின் லேகியத்தை வயணமாக
　　அன்பாகப் பாண்டத்தில் வைத்துமூடி
யோக்கியமாய்ப் பாக்களவு உண்டபோது
　　ஒடுங்காத சூலையதுங் கிரந்திப்புண்கள்
தாக்கியதோர் முடக்குமுதல் கப்புமூறல்
　　தனுர்வாதம் பிரமியநோய் சயகாசங்கள்
தேக்கியதோர் சொறிசிரங்கு புழுக்கள்வெட்டு
　　தெளிவில்லாக் குட்டநோய் தீருந்தானே. (15)

வேறு

நடுந டுக்கிடும் பித்தப்பி ணத்தனும்
விடுகினல்லு விரட்டிடும் வெறுப்பனை
கடுக டுத்திடும் கணைக்குற்ற நோவையும்
முடுமு டுக்கிடும் மூர்க்கம தாகவே. (16)

மூர்க்க மான கனவுநி னைவதும்
தீர்க்க முற்றுத் தெளிந்து யுகந்திடும்
ஆர்க்கு மிவ்வித லேகிய மாகுமாம்
ஏர்க்கு மேர்க்கு மிதுவுஞ் சுலபமே. (17)

சுலப மாகவே சொல்லிடும் பத்தியம்
வலு விராது வெகுவித மாகவே
தொலுமி றைப்படி நீரும்வி யாதிகள்
பலுக வேகக பாகம் தானதே. (18)

தானி தற்குமே பத்திய மோயிலை
மேனி மிக்கச் சிறப்பி லெக்குமாம்
ஏனி போகிலை மாமலை சுருக்கி
கோனி டாதிது மூலிக ளானதே. (19)

மூலி யானது சாந்தகு ணந்தரும்
மேலி னுக்கு விசைந்தகு ளிர்ச்சியாம்
பாலி னுக்குள்ள முக்குணம் போலவே
யோலி னுலல்லோ காண்பது நல்லதே. (20)

நல்ல லேகியந் சொல்லினேன் யானிதோ
மெல்ல மெல்ல விருந்துபோ னும்பிரால்
கல்ல கல்லக் கட்டூம் போலவாம்
தொல்லை யெல்லாந் தொலைந்து போகுமே. (21)

தன்வந்திரி ஞானசைதன்யம் உக.

முற்றிற்று.



சுந்தரபாண்டியம், சாலிமகாரிஷி கோத்திரம் அண்ணாமலைச் சாமிகள் யவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின் படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



குருவே துணை.

எண்பதாவது:

தன்வந்திரி திருவாய்மலர்ந்தருளிய

# கலைக்கியானம் ௩௨.



சுத்தநிராமய சோதிமெய்ஞ்ஞான
அத்தனுமன்னையு மாகியவஸ்தாய்
நித்தியானந்த நிராலம்பமாகி
முத்திக்குவித்தாய் மூளைத்ததென்றெண்ணே.

தென்றசொற்படி சூரணந்தன்னையே
நன்றதாகநவின் றிடக்கேள்மிக
ஒன்றதானதோர் வேம்பின்பட்டையும்
வென்றிடச்சத குப்பியுங்கூட்டிடே. (1)

கூட்டிடுந்திருத் தாளிசையோடுற
மாட்டிடும்மிது மூன்றையுமோரிடை
நாட்டிடும்உர லானதிலிட்டுமுன்
காட்டிடும்பல மாகயிடித்திடே. (2)

இடியதாக்கியே கேளிதிலோர்வகை
வடிவதாகவே வோர்படிநீரினில்
கொடியதாக யிடித்ததைப்போட்டிடு
படியதாகவே சுண்டவெரித்திடே. (3)

எரித்தநீரினி லேவதுசீரகம்
பிரித்துப்பத்துப் பலமதுநேர்மையாய்க்
குறித்துத்தோய்த்துக் குலா விக்குலாவியே
விரித்தசொற்படி யாகவுலர்த்திடே. (4)

வேறு.

உலர்த்தியபின் சம்பழச்சார் தனிலேயோர்நாள்
ஒப்புரவாய் முசுமுசுக்கை தனிலேயோர்நாள்
பெலத்திடப்பொன் னாங்காணிச் சாரிலோர்நாள்
பேசரிய கொடுப்பைச்சார் தன்னிலோர்நாள்
நிலைத்திடவே யிவ்விதமாய்ச் செய்தபின்பு
நிதானிக்கச் சூரண்ம தாக்கியேதான்
தலத்தினிலே வுள்ளபிணி யாளருக்குத்
தயவாகக் கொடுப்பதற்குத் திடஞ்சொல்வேனே. (5)

திடமான சூரணத்திற் பஞ்சதாரை
சிறக்கவே மூன்றுக்கு வொன்றுசேர்த்து
தடமான பித்தமுதல் வாய்வுக்கெல்லாம்
தயங்காமல் வெருகடியி னளவாய்க்கொள்ள
இடமான தலைசுழற்றல் கிறுகிறுப்பும்
இசையாத மயக்கமொடு வாந்திகாந்தல்
படபடத்த தியக்கமுதற் பித்தவாய்வும்
பகராமல் நீங்கிவிடும் பாருபாரே. (7)

பாரென்ற சொல்லதனை நம்பியேதான்
பண்புடனே செய்தவர்க்குப் பலிதமாகும்
சாரென்ற மூலிகையின் சமர்த்துமெத்த
சாற்றுதற்கு யிப்புவியிற் சலிகையாகும்
நாரென்ற நாரப்பா நடக்கைகண்டு
நாட்டினால் ரோகமெல்லாம் நடுக்கமாகும்
தேரென்ற வயித்தியத்திற் சொன்னேன் சொன்னேன்
தெவிட்டாத சூரணத்தைக் காணுகாணே. (8)

மணிபூரகம்.

காணுநீ தசையிரத்தங் கடுமூளை வுதிரம் விந்து
தோணுநீ அஞ்சு மல்லாற் றுலங்கிய பொருள்தா னப்பா
வேணுநீ யிதற்குட் டானும் விரைந்துநீ வாசி பூட்டில்
ஆணுநீ யறிவைக் கொண்டு அம்மம்மா வெளியாய்ப் போமே ()

போமிந்த யிடத்தின் பேரு பூரக வீடென் பார்கள்
ஆமிந்தத் தலமே லெட்டு அங்குலங் கடந்தா யானால்
சேமிந்தத் திரிகோ ணந்தான் சிறந்திதழ் பனிரெண் டப்பா
வாமிந்த வடலைத் தொட்டு வழங்கிய அளவு மட்டே. (10)

மட்டான நடுவே சேருது வழங்கிய சிகாரம் நிற்கும்
ஒட்டான நெற்றிதான் செம்பு வெளிகோடி பானு வாகும்
திட்டான ரூபங் காட்டுஞ் சிவனோடு சத்தி நிற்பாள்
அட்டான புளிப்புஞ் சோம்பல் அடவான பயமுந் தூங்கே. (11)

தூங்கவே யொடுப்பி மெள்ளச் சுகமாகப் பெண்ணைச் சேர்க்கும்
ஆங்கவே அந்தி யிரவ் அமர்ந்திய தொழிலைப் பாரு
வாங்கவே சிகார வீடு வாசனை கொண்டு ஓங்கும்
ஓங்கவே பனிரண் டோகா லுற்பனங் கேளுகேளே. (12)

விசுத்தி

கேளுநீ விசுத்தி யென்ற கெடியான தலத்தைப் பாரு
வாளுநீ கோணா மாறும் வகாரந்தான் நடுவேயுண்டு
வேளுநீ யிதழ்பதி னப்பா விளங்கிற்று ஈரெட் டாக
ஆளுநீ அகாரந் தொட்டு ஆகாகா வரைக்கும் வையே. (13)

வைத்திட்ட நிறந்தான் கேளு வயங்கிற்று கறுப்பே யாகக்
கைத்திட்ட மகேச னோடு கன்னியும் யேசி நிற்பாள்
ஒய்த்திட்ட பரிசஞ் சொல்வார் உத்தமத் தொழிலைக் கேளு
மைத்திட்ட குடத்தல் வோட்டல் மயங்கிய நடத்தல் சாணே. ()

காணத்து நிறுத்த லோடிக் சயங்காம விருத்த லஞ்சு
கோணது தொழில தாகச் சொல்லுமந் தாதையைக் கேளு
பூணது புசிக்க லாரம் பொங்கிய கோபஞ் சண்டை
ஆணது சமயந் தார்க ளாசாணுங் காரங் கேளே. (15)

கேளுநீ பொசிப்பைக் கண்டாற் கெடியாகத் திறக்கும் வாயை
வாழுநீ ருசிக ளாறும் வாசலுக் கப்பா வில்லை
தாளுநீ பரந்தா னென்ற தனித்ததோர் பீட மையா
வேளுநீ படிகா னென்று விளம்புவார் பெரியோர் பாரே. (16)

பெரியோர்கள் சொல்லக் கேட்டேன் பிரட்டின கிளையை வாங்கி
அரியோர்கள் காலிற் றள்ளி அழைக்கிறார் பாரு பாரு
தெரியோர்க ளாறு லங்கே சிக்கென அங்கென் றாறு
பரியோர்கள் காலுஞ் சேர்ந்து பளிச்செனத் தோனும் பாரே.

தோணிய தனத்தின் மேலே சூழ்விரல் பதினாறேற
ஆணியாம் அண்டம் போலே அகாரங்காண் நடுவே நிற்கும்
வேணியே வட்ட வீடு விளங்கிய யிதழ்தான் ரெண்டு
பேணிய அளவா வென்று பெலபொரு ளிருந்தவாறே. (18)

வாறதின் நிறத்தைக் கேளு மகத்தான படிக வர்னம்
கூறிநிற் சதாசி வன்றன் கொள்கிய மணித்தா யோடு
தேறிலாச் சத்தி யப்பா செய்கின்ற தொழிலைப்பாரு
வேறிது காமக் ரோதம் விளங்கிய லோப மாமே. (19)

ஆமினி மோகத் தோடு அடங்கிய மகத்தோ டஞ்சும்
ஓமினி யைந்துஞ் செய்வார் வுத்தமர் திக்கிற் கேளு
காமினி பிரமன் மாலுங் கடுஞ்சிவமயேச னாகும்
சாமினி காப்பா ராதி சதாசிவந் தளவா யாமே. (20)

தளவாயைக் கண்டா யானாற் சச்சிதா னந்தங் காண்பாய்
தளவாயைக் கண்டா யானாற் றாயொடு சேர்ப்பார் பாரு
தளவாயைக் கண்டா யானாற் சமுசயந் தீருந் தீரும்
தளவாயோ டேத்த கள்ளன் சாங்கமா யுறத்துப் பாரே. (21)

உறத்துநீ வாசி வைத்து வூகிட விந்தைப் பாரு
நிறைத்துநீ வருண மஞ்ச நிலையாகத் தோணுந் தோணும்
இறைத்துநீ போகா வாசி யிழுத்தங்கே நாலைக் கட்டு
மறைத்துநீ வைத்தா லுந்தான் மறையாது மணித்தாய் காணே.

தாய்காணு மட்டு மப்பா சமுசய மாயை யாகும்
ஓய்காணத் தொழில்க ளைந்தும் ஓமென்றால் க்ஷணத்தில் லாகும்
காய்காணும் பிஞ்சுங் காணுங் கவனமும் விண்ணைத் தாண்டும்
தோய்காணுந் தமரிற் புக்குஞ் சூட்சதனைத யுரைக்கக் கேளே. ()

கேளுநீ மணியைத் தூண்டிக் கெடிவீர மெட்டு மேலே
ஆளுநீ குருப தந்தான் அமமம்மா வெளியாய்த்தோணும்
வேளுநீ அதற்குள் நின்று வீசிடு வாசி கொண்டு
வாளுநீ கீழே நிறக வரிலசையுந் தோணும்பாரே. (24)

தோணிடு மேலே யப்பா சுகமாகப் பதினொன் றேதான்
ஆணிடு பாரு ஆயினி யனையோ டெட்டும .

வேணியே பரையதோன்று விளங்கிய பரமதொன்று
காணிடு வதனிற் சாரங் காரணங் கண்டி லேனே. (25)

கண்டிடா மார்க்க மெல்லாங் கண்டிட வாசி நேரே
ஒண்டிலா பிடரிக் குள்ளே வுற்றுப்பார் காணுங் காணும்
மண்டிலா வனுக தத்தில் வைத்துப்பார் தோணுந் தோணும்
தண்டிலா மூல மென்று தனிப்பது மொன்றுங் காணே. (29)

காணவே மதிக்கு மேலே கலந்துபார் திசைநா தத்தைப்
பூணவே நெஞ்சிற் பாரு புகழ்ரவி பனிரெண்டப்பா
தோணவே மூலம் பாரு சுடர்கோடி தீயுங் காற்றும்
ஆணவே மூணும் பார்த்து அநந்தந்த யிடத்தைக் கேளே. (27)

சேருநீ மூலங் கீழே கெடியான நிராதா ரந்தான்
வாருநீ மூல மப்பா வழங்கிய துரியா தீதம்
வேருநீ சுவாதிஷ் டானம் விளங்கிய புனித நாதம்
ஆருநீ பூர கத்தை அழுத்தியே வறிந்து கொள்ளே. (28)

அறிந்துகொள் ளனுக தத்தை அப்பப்பா களித்த வீடு
கரிந்துகொள் விசுத்தி வீடு கனவெல்லாங் காணுங்காணும்
தெரிந்துகொள் மணித்தாய் வீட்டிற் சாக்கிரம் மெத்த வாகும்
பிரிந்துகொள துரியா தீதம் பேர்குரு பதநதான் பாரே. (29)

பதத்தின்மேல் நிராதா ரந்தான் பார்க்கின்ற வல்லோர்க் கப்பா
இதத்தின்மேல் மூக்கு பின்பு இருதய முதலைப் பாரு
மதத்தினமேற் பார்த்தா யானால வழியெல்லாந் தெரிநதுபோகும்
குதத்தின்மேற் குய்யங் கண்டு குலையாத சுணங்கர் கேளே. (30)

சுணங்கரே வாசி போனாற் கூட்டிய வாசி பொய்பொய்
சுணங்கரே பூசை போனாற் கூட்டின துரைதான் பொய்பொய்
சுணங்கரே ஞானம் போனாற் றாக்காது குளிகை பொய்
சுணங்கரே மையல் நீக்கிச் சூட்சமாய் மூலம் பாரே. (31)

மூலத்தைத் தொட்டுச் சொன்னேன் மூடியொக்கும் வேத மப்பா
கோலத்தை விட்டுப் போட்டுக் குறிகாண வெல்லாஞ்சித்தி
ஜாலத்தை விட்டுப் போட்டுச் சச்சிதா னநதங் கண்டு
சிலத்தை யுறவ தாக்கிச் செழித்திடப் பொறிசெல் வீரே. ()

தன்வந்திரிகலைக்கியானம் ருஉ

முற்றிற்று.





உ

குருவேதுணை.

எண்பத்தேதாராவது:

தன்வந்திரி திருவாய்மலர்ந்தருளிய

# ஞானட்கா,



## வெண்பா.

ஓரெழுத்தைக் கொண்டே உகார மகாரமதாய்ப்
பேரெழுத்தைக் கொண்டே பிறைசூடிச்—சீரெழுத்தி
லுந்திக் கமலத் தூதிக்கு மயன்மாலுஞ்
சிந்தித்தால் வேறார் சிவம். (1)

மாய்கிறீர் வீணே மனத்தி லிருக்கின்ற
தேய்வை யறிந்துடனே சேராமல்—வாயுவைத்தான்
கும்பித் திருந்தாற் குடலு முயிருமுடல்
வெம்பி யுடைந்தே விடும். (2)

பூசை யிதுவாய் புலம்பித் திரியாதே
பூசை கடந்த பொருளறியீர்—பூசைதா
னாதியோ அந்தமோ அஞ்செழுத் தென்பதுவோ
தீதில்லாச் சற்குருவாஞ் செப்பு. (3)

கவ்வினிடம் வாய்வுமுதற் காலாக் கினியெழுப்பி
அவ்வுதனை யுவ்வாக்க மாட்டாமல்—தெய்வ
மொருவனே யென்பர்மற் றொன்றுநா ருசித்
திரிவரோ வீணே தினம். (4)

புற்றின்று பார்சூடித்துப் போற்றிச் சருகுதின்று
சற்குகையி லேயிருந்து கண்டீரோ—சற்குருவைப்
போற்றியிரு மாண்டவிடம் போதிப்பா னின்பிறவி
மாற்றுவா னின்பமுடன் வந்து. (5)

பாலைக் குடித்தாலென் பழக்கனிகள் தின்றாலென்
சீலைச் சுழி முனையைச் சேர்ந்தாலென்—மூலமதில்
ஒப்பனையாய் நின்றபொருள் உண்மையறி யாமூடர்
எப்படித்தா னீடேறு வீர். (6)

தன்வந்திரி ஞானம் ௬.

முற்றிற்று





மதுரை பாத்திரக்கடை வியாபாரம் ந. ரா. ம. கணபதியாபிள்ளை யவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குமரன்றுணை.

எண்பத்திரண்டாவது.

தன்வந்திரி திருவாய்மலர்ந்தருளிய

# முப்பு சூஸ்திரம் சஅ.

சீரான தேவியுமை வாலைபாதம்
சிறப்பாக யென்சிரசில் வைத்துச்சொல்வேன்
ஆரான உமைதேவி பாதங்காப்பு
அன்பான கரிமுகவன் பாதங்காப்பு
வாரான சண்முகவர் பாதங்காப்பு
வாழ்ந்ததொரு மூவருட மூலங்காப்பு
காரான யென்குருவின் பாதங்காப்பு
கணக்கான அண்டபிண்டத் தாதிகாப்பே. (1)

காப்பான அண்டமதில் நாதவிந்து
கருணைதர அகாரமுடன் உகாரந்தாண்ட
வாப்பான ஓங்காரம் அண்டமப்பா
வளர்ந்துதடா கொடுமுடியு மிதுக்குள்ளாச்சு
ஆப்பான அண்டபிண்ட மாதியந்தம்
அன்பான கோசமுடன் பீசமாச்சு
மாப்பான நாதவிந்தா லாண்பெண்ரெண்டும்
மகத்தான சீவாத்மா உதித்தவாரே. (2)

வாறான முப்பூநாற் பத்துயெட்டும்
மகத்தான யிந்நூல்தான் திறவுகோலாம்
ஆறான யென்றுவாக் கியநூற் கெல்லாம்
அரன்வாக்கு அமுதமதை யிதிலேசொல்வேன்
காறான கப்பியுப்பு ஆனவாறும்
கனமான சிவஉப்பு ஆனவாறும்
மூறான மூலமுக லாருதாரம்
முக்கியமுள்ள பூருவந்தான் பிறந்ததாச்சே. (3)

ஆச்சென்ற சிவத்தின்முப்பு சத்தியுப்பு
அழகாம்பூ ருவத்தாற்சென் மித்ததாச்சு
வாச்சென்ற யிவ்விதங்க ளானமூலம்
வகைவகையாய் முப்பூவைப் பிரித்துச்சொல்வேன்
காச்சென்ற பூருவந்தான் கயிலைதன்னிற்
கனமெட்டு முதலொன்பா னதிலே பூக்கும்
நாச்சென்ற ரெண்டுபத்து நாளைக்குள்ளே
நலமாகப் பூத்ததுவும் பூர்வமாச்சே. (4)

ஆமென்ற பிண்டத்தின் மேலேபூத்து
அழகான கொடிமாவும் பூநீராச்சு
காமென்ற காயின்மேல் நீருமாச்சு
கண்மணியே நீரின்மேல் நெருப்புமாச்சு
வாமென்ற உழல்மண்ணு உவர்மண்ணாச்சு
வகையான ஆதிமுப்பு அமுதமுப்பூ
நாமென்ற அரன்செயலாற் பூத்தபூவு
நலமான மகாநந்தி முப்பைக்காணே. (5)

வேறு.

நந்தி யானவர் நல்லுப்புச் செயல்தன்மூற்
கந்த னானவர் கைலைச் சபைதன்னில்
முந்தி யானது முக்கிய கமலமாம்
ஐந்து லாவிய ஆதிமுப் பாகுமே. (6)

ஆதி யானது அமர்ந்த கமலத்திற்
சாதி யானவர் கடவு ளருளதால்
சோதி யானது செற்பா சூட்சமாம்
வீதி யானது விளங்குமெய்ஞ் ஞானமே. (7)

ஞான மாவது நால்வருங் கண்டது
வீன மாக விளக்கும் புரியட்டம்
ஆன மாவது அகந்தனிற் பூத்தவர்
வான மானது வகாரமுப் பாகுமே. (8)

வேறு.

ஆகும்பல பேர்களுட அவுஷதமுமுத்தி
ஆகும்பல நூல்சாஸ்திரம் ஆண்மைதனைவிட்டால்

ஆகும்பல மூவரிப்ஆத்திதனிற் பூக்க
ஆகும்பல பூர்வமதி லமர்ந்ததிவ ராமே. (9)

வாறுனது சீர்கண்டவர் வாழ்க்கைபல மூழ்க்கை
காறுனது கீழ்கண்டவர் காட்சிதனில் வாழ்வார்
நீறுனது சிவங்கண்டவர் நிர்க்களம தாகில்
ஆறுனது செலமாகிய அத்தியுனக் கீடோ. (10)

அத்திமுக னுதித்ததருள் அப்பாலுனக் கிப்பால்
அத்திமுகன் சத்தியருள் அண்டப்புய லாகும்
அத்தியதில் முத்தியதில் அண்டமதில் நீளும்
அத்திமுகன் நிரையனு தினமும்நீ கொள்ளே. (11)

வேறு.

கொள்ளும்வகை கண்டு கொள்ளும்வகை யாக
கொள்ளுமண் டலந்தான் கொண்டுவிட் டாக்கால்
கொள்ளுமது தேகம் கொடிதான தங்கம்
கொள்ளுமது ஆக்கை கொடிதான ரவியே. (12)

வேறு சிவ முப்பு,

ரவியான சிவமுப்பு சொல்லக்கேளு
ரவியென்ற நாதாக்கள் மறைத்ததெல்லாம்
அவியான மிந்நூலிற் றிறந்துசொல்வேன்
ஆச்சரிய மிந்நூல்தா னார்க்குக்கிட்டும்
கவியான கவியதுதான் நாற்பத்தெட்டிற்
கைமுறையுஞ் செய்முறையுங் கண்டுசொல்வேன்
மவியான பிண்டமதி லண்டவிந்தை
மைந்தனே முதற்பிறந்த விந்தைவாங்கே. (13)

வாங்கப்பா அண்டமுடி தன்னைவாங்கி
வளமான கோரையுடன் சவ்வைப்போக்கி
ஆங்கப்பா அண்டமதை யுரலிற்போட்டு
அறுசாமம் விடாதேநீ சாடுசாடு
நாங்கப்பா சமூலமது மெழுகாய்ப்போகும்
நலமான மலப்புளியென் றிதற்குப்பேரு
மாங்கப்பா யிப்புளியை பாண்டத்திட்டு
மைந்தனே பனிக்குட தநின் செலமும்வாரே. (14)

வாரப்பா சேரதுதான் ரெட்டியாகும்
வளமாக அடுப்பேத்தித் தீயைமூட்டி
சாரப்பா சாமமது ரெண்டுமாகும்
கண்மணியே பூநீறைப் பிறகுபோடு
ஆரப்பா படியொன்று போட்டுக்கொண்டு
அப்பனே ஒருநாழி யெரித்தாயானால்
நாரப்பா நல்லெண்ணெய் கக்கிப்போகும்
நலமான சுத்தசவுக் காரமாமே. (15)

ஆமப்பா வழலைசவுக் காரமென்றும்
ஆனதொரு உளமண்சப் பென்றும்பேரு
வாமப்பா பிச்சப்பை யெடுத்துக்கொண்டு
வளமான வெள்ளைப்பீங் கானிற்போடு
காமப்பா சிகப்புமண் பூமிதன்னிற்
கண்மணியே யொருவைசதுர் மேடைபோட்டு
நாமப்பா பூச்செடிகள் வனம்போல்வைத்து
நலமாய்த்தும் பைச்செடியைச் சுத்திவையே. (16)

வையப்பா பீங்கானை மேடைமீதில்
வளமாகச் சோடசமாய் வைத்துக்கொண்டு
கையப்பா மான்தோல்மேல் முகமாய்க்குந்தி
கணபதியைத் தியானித்துப் பூசைபண்ணி
ஐயப்பா பூசைநெய் வேத்யம்பண்ணி
அப்பனே மண்டலந்தான் ஒருநிலையாய் நின்று
பையப்பா அட்டகா சத்தைச்செய்தால
மகத்தான வெண்சாரை யிறைச்சலாமே. (17)

ஆமென்ற வெண்சாரை யோங்கிமைந்தா
அபகரா கதிர்போலே பூக்கும்பாரு
நாமென்ற வெண்சாரை ஆர்தான்காண்பார்
நலமான அறிவுள்ளோ னசத்திற்காண்பான்
காமென்ற சாலாலயப்போ லோங்கிநிற்கும்
கண்மணியே சிவமுப்பூக் கருத்திலெண்ணு
வாமென்ற முப்பெடுத்துக் குப்பிதனனில்
வைத்துமே விக்கிலட்ச முருகவைமாட்டே. (18)

பாட்டுகிற விசமறிந்து பூசைபண்ணு
மடையார்கன்னி விந்நூலைக் காட்டவேண்டாம்
ஆட்டுகிற சிவமதுதான் நன்றாய்ச்சொன்னேன்
ஆனதொரு சத்தியைத்தா னறைகிறேன்பார்
வாட்டுகிற சிவசத்தி முப்பூமைந்தா
வகையாகச் சொல்லுகிறேன் வண்மையாக
நாட்டுகிற பொருளெல்லா மிதிலேதோன்றும்
நலமான முப்பூவை நவிலுவோமே. (19)

ஓமப்பா முதற்பிறந்த பத்தினியாம்பெண்ணை
ஓகோகோ பெண்பிண்டங் கொண்டுவந்து
ஆமப்பா சட்டையுடன் கோசைசவ்வும்
அப்பனே யிதுமூன்றும் வாங்கிப்போட்டு
வாமப்பா கல்லுரலிற் போட்டுக்கொண்டு
வகையாக யிடிக்கும்பா விருசாமந்தான்
தாமப்பா சாடியதைப் பாண்டத்திட்டுத்
தகயபணி ரீரிரண்டு படியும்வாரே. (20)

வார்க்கையிலே பூர்வமது படியொன்றிட்டு
வகைவிபர மாகவும்நீ கிளறிக்கொண்டு
ஆர்க்கையிலே அடுப்பேத்தி தீயைமூட்டி
அப்பனே யிருசாம மெரித்திடாய்நீ
ஏர்க்கையிலே யெரித்துவிட எண்ணெய்கக்கும்
இனமாகக் குறிகியது வெள்ளைச்சப்பாம்
மார்க்கையிலே சப்புநிறங் கண்டுகொண்டு
மகத்தான பாண்டமதை யிரக்கிவையே. (21)

வையடா சிவபிண்டம் பிறந்தநாள்தான்
வளமாக ஒன்பதிலே யிறந்தால்நன்று
கையடா சத்திபிண்டம் பிறந்தநாளிற்
கண்மணியே திங்களெட்டி லிறந்தால்நன்று
ஐயடா முன்மேடை யேறிக்கொண்டு
அப்பனே பீங்கானிற் சப்பைப்போட்டு
நையடா மேற்குமுகம் புலித்தோற்குந்தி
நலமான வாலையைத்தான் கருத்திலெண்ணே. (22)

யென்னவே ஒன்றைவிட்டு ஒருநாள்தன்னில்
யென்மகனே ஊசிநீர் தெளித்துவாநீ
கண்ணவே தும்பைமலர் தன்னால்மைந்தா
கண்மணியே அர்ச்சனைதான் செய்துவாநீ
வண்ணவே பூசைசெய் வேத்யம்பண்ணி
வளமாக ரேசகபூ ரகமாய்நின்று
மண்ணவே அறுபதுநாட் சென்றுதானால்
மகத்தான சத்திமுப்பாங் கண்டுகொள்ளே. (23)

கொள்ளவே முப்பூவை யென்னசொல்வேன்
கொடிதான மதிபோலே காந்திவீசும்
விள்ளவே யான்திறந்து விண்டுவிட்டேன்
வேதாந்த முப்பூவா மிந்நூல்மைந்தா
உள்ளவே முப்புவைக்கும் நாள்தான்சொல்வேன்
உத்தமனே பங்குனிசித் திரையுமாகும்
மெள்ளவே வைகாசி ஆனியுந்தான்
மென்மேலும் வெகுநன்று மேவிப்பாரே. (24)

பாரென்ற பூர்வமுப்பூச் சுண்ணங்கேளு
பண்பான பூர்வமடா பிண்டமாவு
ஆரென்ற எண்ணெய்தனைக் கழற்றிப்போட்டு
அப்பனே பூர்வமுப்புக் கல்வத்திட்டு
வாரென்ற விந்தாலே சாமமாட்டு
வளமான பனிநீரால் சாமமாட்டு
காரென்ற யிருசாம மாட்டிக்கொண்டு
கண்மணியே வில்லைசெய்து ரவியிற்போடே. (25)

போடவே சீலைசெய்து யெடுத்துக்கொண்டு
போரான பத்தெருவிற் புடத்தைப்போடு
ஆடவே தணலெல்லாம் போனபின்பு
அரகரா வில்லைதனை யெடுத்துப்பாரு
காடவே சுண்ணமதை யென்னசொல்வேன்
சாவிலாச கனகசபை யொப்பாம்பாரு
வாடவே வேண்டாந்நான் சுண்ணம்போதும்
வகையான பூர்வமுப்பூச் சுண்ணமாமே. (29)

ஆமப்பா ஆணண்டம் விந்துவாகும்
அப்பனே பெண்ணண்டம் நாதமாச்சு
காமப்பா அண்டவிந்தை யெடுத்துக்கொண்டு
கண்மணியே தெளியவைத்தால் நாதவிந்து
வாமப்பா நாதவிந்தா லெல்லாமாச்சு
வளர்ந்ததடா பூர்வமுப்பு அறுதிமுப்பு
காமப்பா ஆதியென்ற பூருவத்தில்
கலமான பிண்டமில் லறமுமாச்சே. (27)

ஆச்சென்ற யில்லறத்தி லுப்புப்பூத்து
அழகான நாடதிலே வசியமாச்சு
வாச்சென்ற ருசியாச்சு சயிலமாச்சு
வளங்குகிற அப்பாச்சு உப்புமாச்சு
காச்சென்ற நவரசத்தால் உவர்மண்ணாச்சு
கயிலாச வர்க்கமதாற் பூர்வமாச்சு
நாச்சென்ற பராபரமுப் பூவுமாச்சு
கலமான நந்தியொளி பார்லவயாமே. (28)

1697/2

ஆமேதா னிந்நூலைக் கொடுத்தபேரை
அரனெனவே பூசித்துப் பணிந்துபோற்று
வாமெனவே நூலதனை யீந்தபேரை
வளமாக மோசமது செய்யவேண்டாம்
காமேதா னப்பாவந் தீராதப்பா
கலமான பாவமது கசியாதய்யா
காமேதா னவர்மனது பூசிக்கச்செய்
கண்மணியே நூல்கொடுத்தான் கனிவாய்வாங்கே. (29)

வேறு.

வாங்குமன முங்களுட வாழ்க்கைபதி னாலே
வாங்குவித மறிந்துவழி யாகவும்நீ வாங்கு
வாங்குமிந் நூலின்வழி யாய்த்துறை கண்டு
வாங்கியிந் நூலைவழி யாகவுநீ போற்றே. (30)

போற்றுவழி நூலைப் புகழுஞ்சு பூதம்
ஆத்துவது ஆததுமந்து தத்துவமு முப்பான்
வாத்துவது முப்பதிலே வளங்கும்பல கலைகள்
மாத்துவது தொண்ணூற்றோ டாறாடங் கும்மே. (31)

மடங்கும் பலகலை மாதாந்தந் தன்னிலே
மடங்குஞ் சிவசத்தி ஐம்பூதந் தன்னிலே
மடங்கும் பிறவி மதியாதி யந்தத்தில்
மடங்கும் புரியட்ட மாநந்தி வீட்டிலே. (32)

வீடான வீட்டிலே விளங்குமெய்ஞ் ஞானமாம்
வீடான வீடதில் வேதாந்த நந்தியாம்
வீடான வீதியில் விளங்குஞ் சுழிமுனை
வீடான வீட்டில் விளங்கும்பரப் பிரமம் (33)

பிரமமென்ற சுழியதிலே மும்மூலந்தான்
பிரமான மூலமதிற் பிரமாவிஷ்ணு
பிரமமென்ற கமலமது கபாலமாச்சு
பேரான சிவசத்தி பிரமமாச்சு
பிரமமென்ற நடுவில்ருத் திரருமாச்சு
பேரதிகம் ருத்ரகளே கோடாகோடி
பிரமமென்ற கபாலமது உலகந்தன்னிற்
பெலமாக ரெம்பவுண்டு யெடுத்துக்கொள்ளே. (34)

கொள்ளவே கபாலமதை யெடுத்துக்கொண்டு
கொடிதான கல்லுரலிற் போட்டுக்கொண்டு
விள்ளவே யெருக்கம்பால் சாடுசாடு
வெள்ளையது வெகுகோடி வெண்மையாகும்
மெள்ளவே மாப்போலே தூளாம்பாரு
மகத்தான மாவெடுத்துப் பாண்டத்திட்டு
அள்ளவே சுத்தசலம் படிரெண்டிட்டு
அழகான தீமூட்டி அடுப்பிலேத்தே. (35)

யேத்தவே யிரண்டுசா மந்தானப்பா
யென்மகனே யெரித்திடவே எண்ணெய்கக்கும்
வாத்தவே வையகத்தி லண்டந்தானும்
வளமாக யெண்ணெய்யது கழன்றுபோகும்
ஆத்தவே யெண்ணெய்யது ஜலத்தின்மேலே
அழகான தாமரைபோற் படர்ந்துநிற்கும்
மாத்தவே மேலாக யிருந்துப்போடு
மகத்தான அண்டமது சுத்தியாச்சே. (36)

காணப்பா அண்டபிண்ட மிதுரெண்டுக்கும்
கைமுறைய தானதொரு சுத்திசொல்வேன்
வாணப்பா சுத்தநீர்பூ நீரிரண்டும்
வகையான அமுரியும் மூர்த்திமூன்று
ஆணப்பா யிதுமூன்றிற் சுத்தியாச்சு
அழகான யிதுமூன்றி லெல்லாஞ்சுத்தி
மாணப்பா சுத்தியிவ் விதமாய்ச்செய்தால்
மகத்தான சரக்கெல்லாம் மாண்டுபோமே. (41)

போமென்ற பொருளெல்லாஞ் சுத்தியாலே
புகழான கற்பமெல்லாஞ் சுத்தியாலே
ஆமென்ற சிவகளை சுத்திசெய்தால்
அழகான கற்பமென்று பேருமாச்சு
வாமென்ற வாதமதுக் காதிசுத்தி
வழங்குகிற வயித்தியமுஞ் சுத்தியாலே
காமென்ற கரேமுள்ள சரக்குக்கெல்லாம்
கைமுறைதான் சுத்தியிது கண்டுசெய்யே. (42)

செய்யுகிற பூட்டெல்லா மிதிலேசொன்னேன்
செயம்பெற்ற முப்புகாற் பத்தெட்டென்றேன்
அய்யுகிற சித்தர்சொன்ன முப்பூவெல்லாம்
ஆதியென்ற முப்பூவை மறைத்தாரையா
கய்யுகிற கைபாகஞ் செய்பாகங்கள்
கருத்தாக மறைத்துவைத்தார் சித்தரெல்லாம்
மய்யுகிற விந்நூல்போல் கொலலவில்லை
மாட்டிவிட்டே னிந்நூலில் மகத்வமாமே. (43)

ஆமப்பா முன்னோர்கள் சொன்னநூலில்
அதிசயமாய் மறைத்துவைத்த பொருள்களெல்லாம்
வாமப்பா மாட்டிவிட்டேன் நாற்பத்தெட்டில்
வகைவிபரந் தோணுதற்கு வகைசொன்னேன்பார்
காமப்பா சொன்னமொழி முன்னோர்வாக்யம்
நலமான வாக்கியமென்று பூஜைபண்ணு
காமப்பா கனகசபை கண்ணிற்காண்பாய்
கருத்தான மோட்சமது மெய்துவாரே. (44)

வேறு.

யெய்துமன முந்தனை யேகஉப நிடமாய்
யெய்துமன முங்கனிட யேகமதைப் பூட்டி
யெய்துநல் லோரிடம் யேவல்பர மதினால்
செய்ததனைப் பொருளாகும் யிடமதனைச் சொல்வாம். (45)

வேறு

வாமென்ற நல்லோர்க ளிடத்திற்சேரு
வளமான அறிவுபுத்தி விவேகனாவாய்
காமென்ற உலுத்தரிடஞ் சேரவேண்டாம்
கண்மணியே நல்லோர்க ளிடத்திற்சேரு
நாமென்ற ஆணுவத்தை நீக்கிப்போடு
நலமான ரேசகத்தை மனதிற்பூணு
ஆமென்ற சூதுடனே பொய்யுங்கள்ளு
அரகரா பூரகத்தைத் தினமும்பூசே. (46)

பூசவே மாயையது கொள்ளவேண்டாம்
பேரான மனமடங்கி யறிவில்நில்லு
ஆசவே அறிவுகுரு ஆசானைத்தான்
அனுதினமும் மனதில்ரே சகத்தாற்கட்டு
மாசவே நல்லோர்க்கு வாய்க்குமிந்நூல்
மகத்தான நூலிதுதான் மருவிப்பாரு
நாசவே நன்மைதனை யறிவிற்பூணு
நலமான யோகவா னறிவில்நில்லே. (47)

நில்லாட்டால் நிலைகெட்டு அழிந்துபோவாய்
நினைவதுதான் தவறிநன்றாய் நிஷ்களமாய்
அல்லாட்டால் சொல்லுகிறே யிந்நூலைத்தான்
அசடர்கண்ணிற் காட்டாதே அழிந்துபோவாய்
வல்லாட்டால் குருவிதுதா னிந்நூல்மைந்தா
வகையாகத் தோணுதற்கு வகையிதாகும்
மல்லாட்டா லிந்நூலைப் பூசைபண்ணு
மகாகோடி வேதையிதி லாகுமுற்றே. (48)

தன்வந்திரி முப்பு சூஸ்திரம் ௬அ.

முற்றிற்று.



உ

குருவே துணை

எம்பதிதிருமூலர் [illegible] துணை:

தன்வந்திரி திருவாய்மலர்ந்தருளிய

# தண்டக[illegible] ரசயம்.

அண்டமெனும் பரப்பிர்ம வருளேபோற்றி
அன்பான மனோன்மணித்தாய் பாதம்போற்றி
குண்டமெனுங் குண்டலியின் பாதம்போற்றிக்
குருவான பர[illegible]ன் பாதம்போற்றி
வண்டமெனும் வழலையுட அதிதம்போற்றி
வளமான அறுமுகவர் பாதம்போற்றி
மண்டமெனுஞ் சக்திசிவன் பாதம்போற்றி
மதியான ரவிமதியி னருளேபோற்றி. (1)

போற்றினேன் சிவகாமி பாதங்காப்பு
புகழான முன்னோர்கள் பாதங்காப்பு
சாற்றினேன் வாசியுட மூலங்காப்பு
தாமான வென்குருவின் பாதங்காப்பு
ஆற்றினேன் ஆதிசிவ சாமிகாப்பு
அய்யநதி மூலரிஷி மூலங்காப்பு
மாற்றினேன் சித்திலெம் பூதங்காப்பு
மகத்தாங்கிதான் ஊற்றூறு கருவிகாப்பே. (2)

காப்பான மேல்மூலம் அடிமூலந்தான்
கருத்தகத்து தருவிச்சகஸ் திரமேகாப்பு
வாப்பான [illegible] பாதங்காப்பு
வளர்[illegible] பிந்[illegible]ங்காப்பு
ஆப்பான [illegible]மேகாப்பு
அன்பான சதாசிவத்தி னருளேகாப்பு
மாப்பான ஆயிரத்தெட் டண்டங்காப்பு
மருவிவரு மாயிரத்தெட் டிதழுங்காப்பே. (3)

காப்பாகும் சகலகலை சேதியெல்லாம்
கருத்தான தண்டகத்தின் கருவைச்சொல்வேன்
வாப்பாகும் மகனே அசு வனிமையேகேளு
வளமான கலைக்ஞான மைஞ்ஞூறுக்கும்
ஆப்பாகுந் தாப்பிதுசெப் பேடுசிட்டு
அரகரா யிந்நூல்யார் கொடுக்கப்போறார்
மாப்பாகுந் திறவுகோ லாகுமைந்தா
மாட்டுகிறே னிந்நூலை மருவிப்பாரே. (4)

குண்டலிதீட்சை.

பாரெனவே குண்டலியின் தீட்சைகேளு
பண்பான ஓங்கிளியும் ஸ்ரீங்றீங்அங்அங்
ஆரெனவே சிவாயகெச முகாயாவென்று
அப்பனே லட்சத்தெண் ணாயிரந்தான்
வாரெனவே டாலும்ப சாரஞ்செய்தால்
வளமாக மண்டலத்திற் பிரகாசிக்கும்
காரெனவே அஷ்டசௌ பாக்கியமெய்தும்
கடாட்சிப்பார் குண்டலிதான் கண்டுகொள்ளே. (5)

கொள்ளவே சுப்ரமண்யர் தீட்சைகேளு
கொடிதான கங்கிலியும் வங்அங்கென்று
மள்ளவே புஷ்பபரி மளநெய்வேத்யம்
மண்டலம்லட் சத்தெண்ணா யிரத்தையோது
வள்ளவே வாலசுப்ர மண்யர்தானும்
வருஷிப்பா ரஷ்டசௌ பாக்யமீவார்
கள்ளவே கனகசபை நடனங்காண்பாய்
கருத்தரிய மணவெகுளி அடக்கமாமே. (6)

வயிரவர்தீட்சை.

ஆமென்ற வயிரவன்றன் தீட்சைகேளு
அப்பனே சிம்வம்யவ சிமநவென்று
நாமென்ற மண்டலத்தில் லட்சமோது
நலமாகப் பூசைநெய் வேத்யம்செய்தால்
காமென்ற வயிவர்தான் பிரகாசிப்பார்
கயிலையொடு சௌபாக்ய மீவாரப்பா
வாமென்ற வடுகனவர் சித்தியானால்
வகாரசிவ பூபதியுஞ் சித்தியாச்சே. (7)

சிவதீட்சை

ஆச்சென்ற சிவத்தினுட தீட்சைகேளு
அப்பனே அட்நம்மந் சிம்வம்மென்று
காச்சென்ற லட்சத்தெண் ணாயிரந்தான்
கண்டோது சித்திப்பார் சதாசிவந்தான்
மாச்சென்ற சித்தனடா வுனக்கீடில்லை
மகத்தான போதமெல்லா மாட்டிவிப்பார்
நாச்சென்ற ஆயிரத்தெட் டண்டந்தோன்றும்
நலமான சிதம்பரமுந் தோன்றும்பாரே. (8)

சத்திதீட்சை

பாரென்ற சத்தியுட தீட்சைகேளு
பண்பான ஆம்ஊம்ரம் எங்ஙிங்கென்று
ஆரென்ற லட்சமுருச் செய்துகொண்டு
அப்பனே மண்டலந்தான் பூசைசெய்தால்
காரென்ற சத்தியவள் பிரகாசிப்பாள்
கண்மணியே சகலகலை யீவாள்பாரு
நாரென்று யிந்நூலிற் றீட்சையெல்லாம்
நலமாகத் திறந்துவிட்டோம் நாமேயாமே. (9)

அஷ்டகர்மப்பலகை.

ஆமேதான் அட்டகர்மஞ் செய்வோர்க்கெல்லாம்
அப்பனே பலகையதை அறைகிறேன்பார்
வாமேதான் வசியமது வில்வமாகும்
வளமான பசுவின்நெய் வசியமாகும்
காமேதான் மோகனமாம் பலகையாகும்
கனமான மோகனமெள் ளெண்ணெய்யாகும்
நாமேதான் எட்டியுச்சா டனமேயாகும்
நலமுச்சா டனமும்புங் கெண்ணெய்யாச்சே. (10)

ஆச்சென்ற இல்லைமரம் பேதனந்தான்
அதற்கிலுப் பெண்ணெய்பே தனத்துக்காகும்
நாச்சென்ற பலாப்பலகை தம்பனந்தான்
நலமான தம்பனத்துக் கேரண்டெண்ணெய்
வாச்சென்ற வேசனம்வெண் நாவலாகும்
வராகத்தின் நெய்வேச னத்துக்காகும்
பாச்சென்ற அழைப்பதுதான் வெப்பாலாகும்
மகத்தான வாய்த்தயிலம் அழைப்புமாமே. (11)

மாடுகிற அத்திமா ரணமேயாகும்
    மகத்தாம்வெப் பெண்ணெய்மா ரணத்துக்காகும்
ஆடுகிற அட்டகர்மம் விதமாயாகும்
    அப்பனே என்னூலி லிதுதான் சூட்சம்
நாடுகிற நவரசமா யின்னூல் சொன்னேன்
    நலமான இந்நூற்கு யெதிர்நூலில்லை
வாடுகிற வகையெல்லா மிதிலேசொல்வோம்
    வகையான சூட்சதெண் டகமிந்நூலே. (12)

நூலான நூலப்பா யிதுக்கீடுண்டோ
    நுணுக்கமுள்ள சூத்திரந்தான் நுழைந்துபாரு
வாலான வகாரமுள்ள பதியைக்காணு
    வளமான தீட்சையெல்லாம் முடித்துக்கொள்ளு
காலான காலறிந்து கலைத்தூண்டி
    கலங்காமல் வாசியுட மூலந்தேரு
ஆலான ஆலயங்க ளெல்லாஞ்சுத்து
    அத்தியென்ற முத்தியதை அறிவாய்காணே. (13)

காணுகிற வகையறிந்து கண்ணாற் கண்டால்
    காட்சியெல்லாம் அரைநொடியிற் கண்ணிற்காணும்
வாணுகிற வகைவிபர மாகமைந்தா
    வழிகண்டால் துறைகாணும் வண்மையாக
தோணுகிற தொழிலெல்லாந் தோன்றும்பாரு
    தொகுப்பான தண்டகசூத் திரந்தானப்பா
மாணுகிற மாநந்தி யருளினாலே
    மகத்தான தன்வந்திரி யானென்பாரே. (14)

ஈரெனவே சடாமுடியிற் கெங்கைகண்டேன்
    பாலகனே கொடிமுடியி லமர்ந்துகொண்டேன்
நாரெனவே நந்தியொளி கண்ணிற்கண்டேன்
    நாரணனும் ஆலிலையிற் றுயிலக்கண்டேன்
ஆரெனவே சதாசிவத்தின் பீடமேகி
    அப்பாழி லமுதமதை அறிந்துகொண்டேன்
வாரெனவே வகாரசிவ வமுதந்தன்னை
    வாழ்க்கையுடன் அறிவதனால் வளர்த்திட்டேனே. (15)

இட்டவுட னென்னையழைத் தயிசன்றானும்
ஏகவுப நிடதமென வரங்களீய்ந்தார்
அட்டவுட னச்சனத்திற் சித்தனானேன்
ஆரறிந்து அறுமுகத்தை அளித்துப்பூண்டோன்
பட்டவுட னென்னையழைத்துப் பார்வதித்தாய்
பாலகனே வாவென்று அமுதமீய்ந்தாள்
கட்டவுடன் நான்முனையைத் தெரிசித்தேதான்
நாயகியா ளைம்புலனை யறுத்திட்டாளே. (16)

முப்பூ.

ஆமென்ற தண்டசத்தின் முப்புசொல்வேன்
அழகான முதற்பிண்டத் தனுமேல்மைந்தா
மாமென்ற மகாரமுப்பூப் படிமாவாரு
மகத்தான மாவதனைச் சுரண்டிக்கொண்டு
காமென்ற சிலைதனிற் கிளியாய்க்கட்டி
கண்மணியே பனிக்குடத்தின் செலத்தைவாங்கி
நாமென்ற பாண்டமதில் வார்த்துக்கொண்டு
நல்லகிளி போட்டுமேற் சட்டிமூடே. (17)

மூடவே மண்சீலை யேழுஞ்செய்து
முக்கியமா யடுப்பேற்றித் தீயைமூட்டி
வாடவே சாமம்ரெண்டு யெரித்திட்டாக்கால்
வளமான என்னெய்யது கக்கிப்போகும்
நாடவே பாண்டமதை யிரக்கிக்கொண்டு
நலமான சீலையெல்லா மவிழ்த்துப்போட்டு
ஆடவே சட்டிதனைத் திறந்துகொண்டு
அப்பனே கிளியதனை யெடுத்துப்பாரே. (18)

பாரெனவே சந்திரன்போற் காந்திவீசும்
பண்பான குப்பிதனி லிதனைவைத்து
ஆரெனவே தேவிக்குப் பூசைபண்ணு
அழகான சோடசநெய் வேத்யஞ்செய்து
வாரெனவே முப்புதனைப் பதனம்பண்ணு
வளமாக யிதிலாடுந் தொழிலைச்சொல்வேன்
காரெனவே வாதமொடு வயித்தியப்போச்சு
கண்மணியே அதற்கணமும் ஞானமாமே. (19)

வல்லாரைக்கற்பம்.

ஆமென்ற வல்லாரைக் கற்பங்கேளு
ஆதியென்ற வல்லாரை மூலமேவாங்கி
வாமென்ற ரவிதனிலே நவநாளபோடு
வளமாக உளர்ந்தபின்பு மெடுத்துக்கொண்டு
நாமென்ற கல்லுரலிற் போட்டுக்கொண்டு
நலமான யெருக்கம்பாற் சாடு சாடு
காளென்ற மாப்போலே தூளாம்பாரு
கண்மணியே மாவதனை யெடுத்துக்கொள்ளே. (20)

கொள்ளவே சுத்தசெலம் பனிநீர்கொண்டு
குணமாகப் பாண்டத்தில் ரெண்டுபடிவார்த்து
அள்ளவே சூரணத்தை யெடுத்துக்கொண்டு
அப்பனே பாண்டத்திற் போட்டுக்கிண்டு
தள்ளவே நாற்பதுநாள் ரவியில்வைக்க
நலமான அப்புநீ ரதுபோல்நிற்கும்
வள்ளவே செயநீரை யிறுத்துக்கொண்டு
வளமான சீஷாவிற் பதனம்பண்ணே. (21)

பண்ணவே அடியில்நிற்கும் வல்லாரைதான்
பண்பாயிரு போதுமண் டலந்தான்கொள்ளு
அண்ணவே காந்தகிண்ண மதிலேகொள்ளு
அரகரா ஆக்கையது கழிவோயில்லை
மண்ணவே மதனகற்ப மிதுதானப்பா
மகத்தான கற்பமாம் மருவிப்பாரு
கண்ணவே கடுக்காயின் கற்பங்கேளு
கண்மணியே அண்டமுடி கடுக்காய்வாங்கே. (22)

கடுக்காய் கற்பம்.

வாங்கியே கோரையுடன் சவ்வைப்போக்கி
வளமான கல்லுரலிற் போட்டுக்கொண்டு
தாங்கியே யெருக்கம்பா லிடித்தாயானல்
தளராதே மூச்சாபம் விடாதேசாடு
ஆங்கியே யிடித்தாக்காற் புளியுமாகும்
அப்புளியைப் பாண்டத்திற் போட்டுக்கொண்டு
நீங்கியே சுத்தசெலம் படிரெண்டிட்டு
நினைவாக அரைப்படியூ நீருபோடே. (23)

போட்டுமே கலக்கியொன்றாய் அடுப்பிலேற்றிப்
புகழான தீமூட்டி யெரித்திட்டாக்கால்
ஆட்டவே நீர்சுண்டிக் கடுக்காயாகும்
அதையெடுத்துக் கடுக்காய்போ லுண்டைசெய்து
நீட்டவே நிழலதனி லுலர்த்திக்கொண்டு
நினைவாக யிருபோதிரு கடுக்காயுண்ணு
வாட்டவே சட்டையது யெழுந்தள்ளும்
வளமாகத் தேகம்வச் சிரம்போலாமே. (24)

ஆமெனவே கற்பமது அழியாகற்பம்
அப்பனே யிக்கற்பங் கொள்ளுகொள்ளு
நாமெனவே அழியாது தேகந்தானும்
நலமான தேகமது வச்சிரதேகம்
காமெனவே கருவுருவாங் கற்பமுண்டாற்
கயிலாச முத்தியுனக் கெய்தும்பாரு
வாமெனவே வகாரத்தில் வாசிகாணும்
வளமான சிவபதந்தா னெய்தும்பாரே. (25)

பாரெனவே வெண்சாரைக் கற்பங்கேளு
பண்பான வெண்சாரை ஆர்தான்காண்பார்
ஆரெனவே யான்றிறந்து சொல்வேன்மைந்தா
ஆச்சரிய மாரறிவார் சதாசிவத்தைக்
காரெனவே மயேந்திரகிரி முடிதானப்பா
கண்மணியே பொதிகையது அகந்தானப்பா
மாரெனவே ருத்திரர்தா னெழுந்தாராகில்
மகத்தான வெண்சாரை பொதிகையேகும். (26)

ஏகியது வருகையிலே மைந்தாநீயும்
யெழுப்பியே வாசியோட்டிப் பிடித்துக்கொள்ளு
வாகியது முன்னேறும்பின் கூடிப்போகும்
வளமாக ஒருபடிநீ யிறுத்தியுண்ணு
நாகியது உன்தேகம் வெளுத்துப்போகும்
நலமான தேகமது அழிவதில்லை
ஆகியது ஐம்புலனு மத்துப்போச்சு
அரகரா ஆக்கையது தங்கமாமே. (27)

ஆமப்பா அங்கென்று கும்பித்தாக்கால்
அரைநொடியிற் சித்திக்கும் அறிந்துபாரு
நாமப்பா பூரணத்தின் முப்பூதானும்
நலமாகக் கடுகளவு போட்டாற்சித்தி
வாமப்பா வெண்சாரை பூட்டுமைந்தா
வளமாக யிதுரெண்டால் இறக்கலாகும்
காமப்பா கைமுறையாய்ச் சொல்லிவிட்டேன்
கண்மணியே அறிவுள்ளோ ரறிந்துகொள்ளே. (28)

கருநெல்லிக்கற்பம்

கொள்ளவே கருநெல்லிக் கற்பங்கேளு
கொடிதான கற்பமிது அருமைசாணூர்
விள்ளவே யான்விண்டேன் கற்பந்தன்னை
வெகுளியன்றி மௌனமடங்கிப் பார்த்தோர்க்கெய்தும்
அள்ளவே மயேந்திரகிரி கிழக்கிலேயா
ஆனதொரு பொதிகைகிரி அதுதானுண்டு
மெள்ளவே முப்பான்ரெண் டங்குலத்துள்
மகத்தான கருநெல்லி அய்யாறுமே. (29)

ஆமெனவே இந்திடத்திற் பிரமதேவர்
அழகாகத் தவசிருப்பார் பொதிகைதன்னில்
வாமெனவே நன்மங்கின் வங்கென்றேசொல்
ளமாக மனத்தெதனியைக் திடத்திற்கும்பி
நாமெனவே பிரமதேவர் மனங்களிந்து
நலமான கருநெல்லிக் கற்பமீய்வார்
காமெனவே அறிவாலே பொசித்துப்போடு
காயமது வெகுப்போலே யிருக்கப்போமே. (30)

போகுமே நாதவிந்து தேகந்தன்னைப்
போக்கடிக்க மாட்டாது ஒருநாளுந்தான்
நாகுமே பசியுடன்றீ வனத்தைத்தானும்
நலமாக அடக்கிவைக்கும் நாதவிந்து
பாகுமே பராபரமா மேகசூட்சம்
பண்பான சூட்சமடா யிதனைக்கொண்டு
ஆகுமே வாசிபதி நூலேஅய்யா
ஆச்சுதடா மனக்கண்ணு தெளிவுமாச்சே. (31)

கண்ணான கண்ணாதற்குக் கால்தான்ரெண்டு
காலான சத்தமது பனிரெண்டாகும்
விண்ணான வாசியுட பூட்டைத்தானும்
விளங்கியதோர் சத்தமதால் திறக்கலாகும்
அண்ணான சத்தமது யேதென்றாக்கால்
அப்பனே பனிரெண்டு கலையதாகும்
வண்ணான கலையொடுங்கும் வகையைச்சொல்வேன்
வளமான யிடகலையிங் கலையிற்றானே. (32)

தானான சூரியனி லாரொடுங்கும்
தனதான சந்திரனி லாரொடுங்கும்
வானான ரவிமதியா லெல்லாமாச்சு
வளங்குகிற தொழிலெல்லா மிதனாலாச்சு
கானான கருவாச்சு உருவுமாச்சு
கண்டவரியே சோசியமு மிதனாலாச்சு
மானான ரவிமதிபோ லொளியுமாச்சு
மகத்தான சிதம்பரத்தி னாட்டமாச்சே. (33)

ஆச்செனவே இங்கோலத் தயிலங்கேளு
ஆடுகிற தொழிலெல்லா மிதிலேயாடும்
ஆச்செனவே தலைப்பிண்டம் பிறந்தநாள்தொட்
டஞ்சாமா தத்தினுக்குள் ளிறந்ததானால்
ஆச்செனவே ஆனதனை யெடுத்துவந்து
அப்பனே சருவாங்கங் கோரைபோக்கு
ஆச்செனவே முப்புநாற் பதிலேசுத்தி
அரகரா யிச்சுத்தி யெடுத்துச்செய்யே. (34)

செய்துகொண்டு நிழலுலர்த்தி யுரவிவிட்டு
ஜெயம்பெறவே சாடிவரத் தூளாம்பாரு
அய்துகொண்டு தூளதனைப் பாண்டத்திட்டு
அரகரா குளியில்வைத்துத் தயிலம்வாங்கி
மய்துகொண்டு சீஷாவிற் றயிலமூத்தி
மகத்தான தேவிமுன்னே வைத்துப்போற்றி
வய்துகொண்டு தயிலமதைப் பதனம்பண்ணு
வளமான தயிலத்தைச் சொல்லொண்ணாதே. (35)

ஒன்றான தயிலமது யார்க்குக்கிட்டும்
　　உலகிலுள்ள சாமுகர்க்கு மெய்தாதப்பா
வன்றான வெயோகிக் கெய்துப்பாரு
　　வளமான அறிவுள்ளோ ரிதனைக்காண்பார்
கன்றான அஷ்டகர்ம மிதனாலாகும்
　　கண்மணியே அறுபத்து நாலுமாகும்
மன்றான வாதவாதித் திடங்களாகும்
　　மகத்தான புரிபட்ட மாமெய்ப்பாயிர. (36)

அண்டமுப்பு.

பாரென்ற அண்டமுப்புச் சொல்லக்கேளு
　　பண்பான அண்டமதைக் கொண்டுவந்து
ஆரென்ற கொரையுடன் சவ்வுபோக்கி
　　அண்டமதைக் கல்லுரலி லிட்டிடிக்க
வாரென்ற வெருக்கம்பால் வஞ்சாமத்தான்
　　வளமாக ரைத்து மெழுகுப்பாலம்
காரென்ற மெழுகெடுத்துப் பாண்டத்திட்டு
　　கண்மணியே சுத்தஜலம் படிரெண்டாமே. (37)

ஆமெனவே பூநீறு பலந்தானாலு
　　அப்பனே அதிற்போட்டுக் கலக்கிக்கொண்டு
நாமெனவே அடுப்பேத்தித் தீயைமூட்டி
　　நலமாக முச்சாம மெரித்திட்டாக்கால்
காமெனவே யெண்ணெய்கக்கிக் கசடெல்லாம்போம்
　　கண்மணியே சுத்தசவுக் காரமாகும்
வாமெனவே யிரக்கியதைச் சொல்லக்கேளு
　　வளமான பிங்கான்தா னகலமாமே. (38)

ஆமப்பா சவுக்கார மதனிற்போட்டு
　　அப்பனே யில்லமதிற் சமாதிசெய்து
காமப்பா வைத்துமேற் பிங்கான்மூடி
　　கண்மணியே மண்டலஞ்சென் றெடுத்துப்பாரு
நாமப்பா ஆனைக்கல் முப்பூவாகும்
　　நலமான முப்பிதுதான் நவின்றுபாரு
வாமப்பா கல்லுப்பு யிதுதான்மைந்தா
　　வளமான முப்பிதுதான் நவின்றுபாரே. (39)

பாரப்பா முப்பூவை யெடுத்துக்கொண்டு
பாலகனே சிமிழ்தனிலே பதனம்பண்ணு
ஆரப்பா அறிவார்முப் பூவின்போக்கு
ஆனதொரு சிவயோகி யறிந்துகொள்வான்
நாரப்பா நல்லோர்க்கு மெய்துமுப்பூ
நலமான முப்பூவைக் கண்டுசெய்நீ
வாரப்பா முப்பூவை நன்றாய்ச்சொன்னேன்
வளமான கல்லுப்பாங் கண்டுகொள்ளே. (40)

கொள்ளவே கல்லுப்பை யறிந்துகொள்ளு
கொடிதான உப்பதனை யார்தான்காண்பார்
விள்ளவே யான்விண்டேன் வெளியாய்மைந்தா
வேதாந்த உப்புவழி விளங்குஞ்ஞானம்
கள்ளமே யில்லையடா யிந்நூலிற்றான்
கலைஞான தண்டக்க மாகுமிந்நூல்
மள்ளவே சகலகலை சேதியெல்லாம்
மாட்டுகிறே னிந்நூலின் மகிமையாரே. (41)

பாரென்ற வசியமதின் மெழுகுசொல்வேன்
பண்பான விரலைதான் கலவைத்திட்டு
ஆரென்ற முப்புயிரு காஞ்சிபோட்டு
அரகரா யிருசாமம் விடாதேயாட்டு
வாரென்ற மெழுகாகு மென்னசொல்வேன்
வளமான மெழுகதனை வைத்துக்கொண்டு
காரென்ற பரிச்சிமிழில் வைத்துநீயும்
கண்மணியே தேவிமுன்பு வைத்துப்போற்றே. (42)

போற்றவே வசியமெல்லா மிதனாலாகும்
புகழான தயிலமடா யிதனைப்பாரு
ஆற்றவே அஷ்டமா வசியமாகும்
அப்பனே மெழுகிதுதான் சூக்ஷம்சூக்ஷம்
தேற்றவே மெழுகதுதா னில்லாவிட்டாற்
றிரமான வசியமெல்லாம் பிரட்டாய்ப்போகும்
மாற்றவே கருக்குருவாம் மெழுகின்போக்கு
மைந்தனே மெழுகதனைச் செய்துவையே. (43)

மையடா மோகனத்தின் மெழுகுசொல்வேன்
வளமான மலப்புரியைக் கல்வத்திட்டு
ஐயடா காகம்விட்டு முச்சாமந்தான்
அப்பனே ஆட்டியபின் பார்த்தாயானால்
கையடா கனகசபை யதுபோற்காணும்
கண்மணியே மெழுகதனை வழித்துக்கொண்டு
மையடா தங்கமதின் சிமிழில்வைத்து
மகத்தான வாலைமுன்னே வைத்துப்பூசே. (44)

பூசவே மோகனங்க ளெல்லாமாம்
புரியஷ்ட மிதாயிருந்தால் மோகமாகும்
நாசமே மோகமதுக் கிதுமுன்னேடா
நலமான மோகவித்தை அதிகமபாரு
காசமே மெழுகிருந்தால் மோகஞ்சித்தி
காருக்குந்தான் மெழுகப்பா யிதனைப்பாரு
தோசமே பூமலரின் வாசம்போலத்
தோணுகிற தொழிலெல்லா மிதனாலாமே. (45)

ஆமென்ற வுச்சாடனத் துமூலம்
அப்பனே மெழுகொன்று சொல்லக்கேளு
காமென்ற ஐங்காயங் கல்வத்திட்டு
கண்மணியே ஐங்கோலத் தயிலத்தாட்டு
வாமென்ற சாமமஞ்சு விடாதேசாடு
வளமான மெழுகாகு மென்னசொல்வேன்
நாமென்ற மெழுகதனை வழித்துக்கொண்டு
நலமான தாம்பரத்தின் சிமிழிலவையே. (46)

வைககவே தேவிமுன்னே வைத்துப்போற்று
வளமான தேவிக்குப் பூசைபண்ணு
ஐக்கவே யிதிலாடுந் தொழிலைச்சொல்வேன்
அப்பனே பேதனவுச் சாடனந்தான்
கைக்கவே வேசனமு மாகும்பாரு
நலமான மெழுகில்முத் தொழிலுமாடும்
தைக்கவே மெழுகுவகை நன்மையாகும்
தன்மையுள்ள மெழுகிதுதான் பூசைபண்ணே. (47)

பண்ணவே மாரணத்தின் மெழுகுசேரு
　　பண்பாமைங் காயமலப் புளியுஞ்சேரு
அண்ணவே பூர்வமுடன் சத்திமுப்பூ
　　அப்பனே யிதுவலைக்குப் பலந்தாறென்று
கண்ணவே கல்வமதிற் போட்டுக்கொண்டு
　　கண்மணியே காய்த்தயிலந் தன்றூற்சாமம்
வண்ணவே ஐங்கோலந் தன்றூற்சாமம்
　　வளமாக அரைத்தபின்பு சொல்லக்கேளே. (48)

கேளென்ற மெழுகதனை வழித்தெடுத்துக்
　　கெணிதமுடன் வங்கமதின் சிமிழில்வைத்து
ஆளென்ற ரேவிமுன்னே வைத்துப்போற்று
　　அப்பனே யிம்மெழுகில் வெகுசித்தாடும்
நாளென்ற பூமியில்மா ரணமுமாடும்
　　நலமான தம்பனமுச்சா டனமுமாடும்
வாளென்ற மெழுகிலெல்லாஞ் செய்துகொண்டு
　　வளமான அட்டமா சித்துமாடே. (49)

ஆடென்ற மெழுகுமகுத் துவமோகோடி
　　அப்பனே மெழுகிலெல்லாஞ் செய்துகொள்ளு
வாடென்ற மெழுகதிலே வேதையாடும்
　　வளமான தங்கமது கோடாகோடி
நாடென்ற நாடெல்லாந் திரிந்தாலென்ன
　　நலமான பூரணத்தை யறியவேணும்
பாடென்ற பாடுபட வேண்டாமையா
　　பத்மினியாம் பூர்வத்தைச் செய்திடீரே. (50)

செய்யதொரு ஐங்கோலச் செயநீர்சேரு
　　செயமான ஐங்கோலப் பிண்டம்வாங்கி
வையதொரு அண்டமதை வாங்கிக்கொண்டு
　　வளமான கோரையைத்தான் போக்கிப்போடு
ஐயதொரு கபாலத்திற் றமருபோட்டு
　　அப்பனே விஷச்சுண்ணம் பூர்வசுண்ணம்
கையதொரு யிதுரண்டு மதனிற்போட்டுக்
　　கண்மணியே ரவிதனிலே போடுபோடே. (51)

போடவே திரிகாலசென் றெடுத்துப்பாரு
பொருமியது தன்னாரினாற் கோலமாகும்
ஆடவே அச்செலந்தா னென்னசொல்வேன்
ஆதிசவுச் சாரமாங் கோலமாகும்
வாடவே வேண்டாஞ்சீ ஷூவிலாற்றி
வளமாகத் தேவிமுன்னே வைத்துப்பூசி
நாடவே இக்கோலச் செயநீராகும்
நலமான செயநீரா வின்றுபாரே. (52)

பாரென்று வாதசெய நீரைச்சொல்வேன்
பண்பான புண்ணியர்கள் மறைத்ததெல்லாம்
ஆரென்ற தண்டகத்தில் வெளியாய்ச்சொல்வேன்
அப்பனே முண்டமுடி விந்துவாங்கி
வாரென்ற காவிநீறுந் போட்டுக்கொண்டு
வளமான சீநமுங் காரமும் பலந்தான்போட்டு
சாரென்ற மலைமுடிச் சீலைசெய்து
தனைபணிந்து தகிசனில் வைத்தாக்கேளே. (53)

கேளெனவே கதிர்வாயிற் சீஷாவைநீ
கெடியான திராவகம்போற் செயநீர்வீழும்
ஆளெனவே செயநீரை யென்னசொல்வேன்
அப்பனே செயநீரை ஆர்தான்காண்பார்
வாளெனவே செயநீரை வாங்கிக்கொண்டு
வளமான தேவிமுன்னே வைத்துப்போற்று
நாளெனவே நாதியொளி கண்ணிற்கண்டு
நாயகியைப் பூசித்தால் நன்மையாமே (54)

ஆமடா தேவிசக்க ரந்தான்சொல்வேன்
ஆச்சரியம் நவகோணங் கீறிக்கொண்டு
வாமடா அதன்மேலிரு வட்டம்போட்டு
வளமாக அதின்மேலறு கோணம்போட்டு
நாமடா விருத்தமுடன் நவகோணந்தான்
நலமான அறுகோணம் நடுவில்வைநீ
காமடா அறுகோணத் திருவட்டம்மேற்
கண்மணியே யீட்டுசால் வாசற்போடே. (55)

போடவே வாசல்முனை சூலம்போடு
புகழும்நவ கோணத்தட் சரத்தைக்கேளு
ஆடவே யங்சங்கங் கென்றுபோடு
அப்பனே கோணத்தி லடவாய்ப்போடு
காடவே நடுவீட்டில் இம்மைமாட்டு
கண்மணியே வட்டத்தில் ருருவென்று
மாடவே அறுகோண மட்சரந்தான்சொல்வேன்
வழுத்தச்சங் சரவணமங் றீங்கென்றானே. (56)

ஊணவே கோணமெல்லாம் எழுத்தைமாட்டு
உத்தமனே மேல்வட்ட மட்சரந்தான்
காணவே லங்கிறீங் கென்றுபோடு
கண்மணியே முப்பதுமாங் திரந்தான்சுத்து
வாணவே வாசலிற்றே வதைதான்கேளு
வளமான குண்டலியைக் கிழக்கில்வைநீ
பூணவே வடக்கினிலே வல்லபைதான்
பொன்னுனை வீரபத்திரன் மேற்கிலாமே. (57)

ஆமேதான் தெற்கினிலே அனுமான்தானும்
அப்பனேநால் வாசல்தே வதையைநாட்டு
வாமேதான் சக்கரத்தில் தேவிதானும்
வளமாக அமர்ந்திருப்பாள் வாலையம்மாள்
காமேதான் வாலையுட மூலஞ்சொல்வேன்
கண்மணியே யுங்கிரியும் இரியுமென்று
நாமேதான் கங்யங்யங் கென்றேசொல்லில்
நலமாக மண்டலத்திற் சித்தியாச்சே. (58)

ஆச்சென்ற உருவதுதான் லெட்சமோது
அப்பனே புனுகுசவ் வாதுநாவி
வாச்சென்ற புஷ்பமொடு தூபதீபம்
வடைதோசை யப்பம்பா யாசஞ்சுண்டல்
நாச்சென்ற வஸ்துவொடு பாலின்பொங்கல்
நலமான தட்சணைதாம் பூலம்வைத்து
காச்சென்ற தேவிதனைத் தோத்தரித்தால்
கண்மணியே சகலமுந்தா னீவாள்பாரே. (59)

பாரென்ற தேவிஅஷ்ட பாக்யமீவாள்
பண்பான தேவியடா வாலைதேவி
ஆரென்ற நீமகனே தேர்வதற்கு
அப்பனே வாலையவள் சித்திவேணும்
காசிரென்ற கயிலாச முத்தியெய்தும்
கண்மணியே யென்மகனே கருதிப்பாரு
வாரென்ற வழியுடனே துறையுந்தோன்றும்
வளமான பூட்டெல்லாந் திறக்கும்பாரே. (60)

பாரான வழலைசெந் தூரங்கேளு
பண்பான வழலையைத்தான் கல்வத்திட்டு
காரான விந்தாலே சாமமாட்டு
கண்மணியே நாதம்நா ழிகைதானாட்டு
வாரான மலப்புளிதான் களஞ்சிபோடு
வளமாக வொருநாழி விடாமலாட்டு
நாராக வளித்தெடுத்து வில்லைசெய்து
நலமான ரவிதனிலே காயப்போடே. (61)

போடவே யெடுத்ததனைச் சீலைசெய்து
புகழாகப் பத்தெருவிற் புடத்தைப்போடு
ஆடவே ஆறினபின் னெடுத்துப்பாரு
அப்பனே சீலைதள்ளி வாங்கிப்பாரு
காடவே ரவியதுதா னிதுக்கீடில்லை
கனகசபை ரத்தினம்போற் காந்திவீசும்
வாடவே வேண்டாம்பார் ஒருநாளுந்தான்
வகையான செந்தூரம் பதனம்பண்ணே. (62)

பண்ணவே செந்தூரந் திலதம்போட்டால்
பண்பான யோகமதுக் காதிபீடம்
அண்ணவே அஷ்டவசி யங்களாடும்
அப்பனே செந்தூர மகிமைபாரு
கண்ணவே களஞ்சிநிறை யொருபோதுண்ணு
கசடகன்று தேகமெல்லாங் காந்திவீசும்
வண்ணமே மண்டலந்தான் கொண்டுவிட்டால்
வளமான தேகமழி வில்லைபாரே. (63)

இல்லையென்ற தாம்பிராச் செந்தூரங்கேள்
இயல்பான தாம்பிரத்தை யெடுத்துக்கொண்டு
வல்லையென்ற மைப்புளிறைப் பூவுஞ்சேர்த்து
வளமான ஐங்கோலத் தயிலத்தாட்டு
மில்லையென்ற தாம்பிரத்தின் மேலேபூசி
மகத்தான வித்தாலே சீலைசெய்து
கல்லையென்ற மண்சீலை யேழுஞ்செய்து
கண்மணியே கெசபுடத்திற் போடுபோடே. (64)

போடவே ஆறினபின் னெடுத்துப்பாரு
புகழான செந்தூரம் அருணன்போலாம்
ஆடவே சிமிழதனிற் பதனம்பண்ணு
அரகரா தேவிக்குப் பூசைபண்ணு
காடவே மண்டலஞ்செந் தூரங்கொண்டால்
கனசாதனந் தேகமதுக் கழிவோயில்லை
வாடவே வேண்டாங்காண் மிதனைக்கொண்டால்
வளமான தேகம்வச்ர காயமாமே. (65)

ஆமப்பா தாம்பிரத்தை யுருக்கிக்கொண்டு
அதிலேயிடு களஞ்செந் தூரம்போடு
நாடப்பா சொன்னேரும்பத் தரைதாருகும்
நலமான தம்பாட பரியின்தங்கம்
வாமப்பா வெவ்வதுமிது வனாத்தங்கொடு
வளமான எட்டுக்குங் காதிமதம்
காமப்பா சருக்குருவாக் கண்டகத்தான்
கண்மணியே யிந்நூலைக் கருதிக்கேளே. (66)

கேளென்ற வங்கசெந் தூரங்கேளு
கெடிவிதத்துச் சுண்ணமுமங் காயங்கூட்டி
ஆளென்ற அண்டமுப்பு கலந்துபோட்டு
அமுதுடனும் வாய்நீராற் றன்குழைத்து
நாவென்ற வங்கமதின் மேலேபூசி
நலமான வித்தாலே சீலைசெய்து
காரென்ற மண்சீலை யேழுஞ்செய்து
கதிர்படவே புலர்த்திக்கெச புடத்திற்போடே. (67)

போடவே ஆறினபின் னெடுத்துக்கொண்டு
புகழான சீலைதன்னை யவிழ்த்துப்பாரு
ஆடவே அரனுநித்தாப் போலேகாணும்
அதிலேகடு களவுசெந் தூரங்கொண்டால்
வாடவே வேண்டாம்பார் தேகந்தங்கம்
வளமான ஆயிசுதான் வளர்ந்துபோகும்
மாடவே ரவிமதியு முனக்கீடல்ல
மகத்தான தேகமடா வலுத்துப்போச்சே. (68)

போச்சடா அயமதனை யுருக்கிக்கொண்டு
புகழ்கடு க்களவுசெந் தூரம்போடு
ஆச்சடா அயத்தங்கம் என்னசொல்வேன்
அரகரா தங்கமிதுக் கீடோமைந்தா
வாச்சடா செந்தூர மொன்றிருந்தால்
வளமான அஷ்டபாக் கியமுமெய்தும்
மாச்சடா யிதினாலே வாசிசிக்கும்
மகத்தான காயமது வலுத்துப்போமே. (69)

போமடா குகசெந் தூரங்கேளு
புகழான வாலைரசங் கல்வததிட்டு
ஆமடா உவர்ப்பூவின் சுண்ணம்போடு
அப்பனே ஐங்கோல நீராலாட்டு
வாமடா ஆட்டியபின் விந்தாலாட்டு
வளமாக ஆட்டிவர மெழுகுபோலாம்
காமடா வளித்தெடுத்து வில்லைசெய்து
கண்மணியே ரவிதனிலே உலரப்போடே. (70)

போடவே வில்லைதனை யெடுத்துக்கொண்டு
புகழான நாதமதாற் சீலைசெய்து
ஆடவே மண்சீலை யேழுசெய்து
அப்பனே மூன்றுபத்து யெருவிற்போடு
காடவே ஆறினபின் னெடுத்துப்பாரு
கண்மணியே செந்தூர மென்னசொல்வேன்
மாடவே ஆனையென்ற செந்தூரந்தான்
மகத்தான செந்தூரம் மருவிப்பாரே. (71)

பாராய்நீ களஞ்சிநிறை யுள்ளேகொள்ளு
பாலகனே சூலைபதி னெட்டும்போகும்
ஆராத மேகரணம் மாறிப்போகும்
அப்பனே மூலமொன் பதும்போகும்
வாரான கிராணியுடன் பவுந்திரங்கள்
வளமான புண்புரைகள் கண்டமாலை
காரான கிரந்திபொடி பட்டுப்போகும்
கண்மணியே தவலைபுத்துக் கன்னப்புத்தே. (72)

புத்தான வகையெல்லா மோடிப்போகும்
புதுமையடா செந்தூரம் புகழோமெத்த
அத்தான குஷ்டமுடன் குஷ்டநோயெல்லாம்
அகன்றுவிடும் செந்தூர மகத்துவந்தான்
வத்தான பத்தனுக்கு யெய்துமிந்நூல்
வகையான இந்நூலைப் பூசைபண்ணு
கத்தான திறவுகோ லிந்நூல்போக்குக்
கயிலாச மூர்த்தியுட கருணையாமே. (73)

ஆமென்ற கெந்திசெந் தூரங்கேளு
அப்பனே கெந்தியதைக் கல்வத்திட்டு
நாமென்ற வழலைசுண்ணங் களஞ்சிபோடு
நலமான இங்கோல நீராலாட்டு
காமென்ற தொருசாம மாட்டிலுக்காற்
கண்மணியே மெழுகதுபோ லாகும்பாரு
வாமென்று வழித்தெடுத்து வில்லைசெய்து
வளமாக ரவிதனிலே உலரப்போடே. (74)

போடவே வித்தர்லே சீலைசெய்து
புகழாக மண்சீலை யேழுசெய்து
ஆடவே கெசபுடத்திற் போடுபோடு
அப்பனே ஆறினபின் னெடுத்துப்பாரு
வாடவே அருணன்போற் காந்திவீசும்
வளமான செந்தூர மென்னசொல்வேன்
காடவே கனகசபை யிதுக்கீடில்லை
கனகசபை யென்றசெந் தூரமாச்சே. (75)

ஆச்சப்பா கடுகளவு கொண்டாயானால்
அஞ்ஞூறு வருஷமுனைக் கழிவோயில்லை
வாச்சப்பா அகத்திலுள்ள நோயெல்லாந்தான்
வளமாகக் கேடுகெட்டு ஓடிப்போகும்
காச்சப்பா கனகசபை கண்ணிற்காண்பாய்
காச்சியுனக் கெய்துமடா கருத்திலெண்ணு
மாச்சப்பா மதிரவியா லெல்லாமாச்சு
மதிரவியு முனைவணங்கும் மகத்வங்காணே. (76)

காணப்பா முன்சொன்ன அண்டமுப்பை
கண்மணியே சுண்ணமது செப்பக்கேளு
ஆணப்பா அண்டமுப்புக் கல்வத்திட்டு
அப்பனே வழலைசுண்ணங் களஞ்சிபோடு
வாணப்பா விந்தாலே சாமமாட்டு
வன்மையா யாட்டியபின் புளிநீராலாட்டு
மாணப்பா ஆட்டியதை வழித்துக்கொண்டு
மைந்தனே வில்லையது செய்துகொள்ளே.. (77)

கொள்ளவே ரவியில்நன்றாய்ப் போட்டுலர்த்திக்
கொடிதான விந்ததனாற் சீலைசெய்து
அள்ளவே ரெண்டுபத்து யெருவிற்போடு
அரகரா சுண்ணாம்பாய் நீறிப்போகும்
கள்ளமே யில்லாத கொடியசுண்ணம்
கடுங்காரச் சுண்ணமடா கருதிப்பாரு
வள்ளலே வாதமிதிற் கோடாகோடி
வளமான சித்தெல்லா மிதனாலாமே. (78)

ஆமப்பா வென்னைப்போ லார்தான்சொல்வார்
அன்பாக மனங்கனிந்துங் களுக்குச்சொன்னேன்
வாமப்பா அண்டசுண்ணம் சொல்லக்கேளு
வளமான அண்டமதைக் கொண்டுவந்து
நாமப்பா கல்லுரலிற் போட்டுக்கொண்டு
நலமான யெருக்கம்பாற் குத்துக்குத்து
காமப்பா குத்திடவே அளாய்ப்போகும்
கண்மணியே அதையெடுத்துப் பாண்டத்திட்டே. (79)

இட்டுமே சுத்தஜலம் படிதான்வாறு
இயல்பான உவர்ப்பூறும் பலந்தான்போடு
வட்டுமே கலக்கியதை அடுப்பிலேத்தி
வளமான தீமூட்டி யெரித்திடாய்நீ
கட்டுமே சாமமொன்று யெரித்திட்டாக்கால்
கண்மணியே யெண்ணெய்கச டெல்லாங்கக்கும்
மட்டுமே யிரக்கிப்பார் சவுக்காரந்தான்
மகத்தான ரவிதனிலே உலரப்போடே. (80)

போடவே உலர்ந்தபின்பு யெடுத்துநீயும்
புகழான கல்வமதிற் போட்டுக்கொண்டு
ஆடவே அண்டவிந்தாற் சாமமாட்டு
அப்பனே ஐங்கோல நீராலாட்டு
பாடவே மெழுகுபோ லாகும்பாரு
பண்பாக வழித்தெடுத்து வில்லைசெய்து
நாடவே ரவிதனிலே உலரப்போடு
நலமான விந்தாலே சீலைசெய்யே. (81)

செய்யவே மண்சீலை செய்துகொண்டு
செயலான கானலிலே உலர்த்திக்கொண்டு
உய்யவே முப்பதிரண் டெருவில்போடு
வளமாக ஆறினபின் னெடுத்துப்பாரு
பய்யவே சீலைதனை அவிழ்த்துப்பாரு
பாலகனே பார்த்திடுவாய் கண்ணேகூசும்
மையவே வெண்மையது கொடியவெண்மை
மகத்தான காரமது கொடியகாரம். (82)

காரமென்ற தாம்புரத்தை யுருக்கிக்கொண்டு
கண்மணியே கடுகளவு சுண்ணம்போடு
வாரமென்ற வயதுதான் பதினாறாகும்
வளமான கண்கூசம் வேதைபாரும்
ஆரமென்ற அரனுமையைத் தொழுதுபோற்று
அப்பனே அனுதினமு மறிவாற்பூசி
மாரமென்ற மகத்துவங்கள் கோடியாகும்
மகத்தான புரியட்ட மருளுவாளே. (83)

வாளான வாழ்விதுதான் யோகவாழ்வு
மகத்தான வாழ்வப்பா ஞானவாழ்வு
நாளான சத்தியுமை வாலைதேவி
நலமான அஷ்டசவு பாக்யமீவாள்
காளான கனகசபை நடனங்காணும்
கயிலாச முத்தியெய்துங் கண்டுகொள்ளு
ஆளான பத்துவய தானதாயார்
அப்பனே சகலமுந்தா னீவாள்பாரே. (84)

பாரென்ற காந்தத்தின் கிண்ணஞ்சொல்வேன்
பண்பான காந்தமது பலமோயெட்டு
ஆரென்ற காந்தமதைச் சுத்திசெய்து
அப்பனே அயச்சட்டிக் குள்ளேபோட்டு
வாரென்ற இங்கோலத் தயிலமப்பா
வளமான விஷச்சுண்ணம் வழலைச்சுண்ணம்
காரென்ற அண்டசுண்ணம் உவர்ப்பூச்சுண்ணம்
கண்மணியே யிதுகளெல்லா மொன்றாய்ப்போடே. (85)

போடவே வகைக்கியொரு பலமும்போடு
புநழுக அதிற்போட்டுக் கலக்கிக்கொண்டு
ஆடவே கொல்லன்குகை யதனில்வைத்து
அப்பனே நாற்சாமம் விடாமலூது
வாடவே காந்தமது உருகிப்போகும்
வளமான காந்தமதை யெடுத்துக்கொண்டு
நாடவே மண்மெழுகாற் கிண்ணிகட்டி
நலமாக வார்த்திடவே கிண்ணியாமே. (86)

ஆமப்பா காந்தகிண்ணி யெடுத்துப்பாரு
அப்பனே கிண்ணமதை யென்னசொல்வேன்
வாமப்பா தேவிமுன்னே வைத்துப்போற்று
வளமான கிண்ணிதனிற் கற்பங்கொள்ளு
நாமப்பா தேகமதுக் கழிவோயில்லை
நலமான தேகமது வச்சிரகாயம்
காமப்பா கயிலாச முத்தியெய்தும்
கனகசபை உன்கண்ணிற் காணும்பாரே. (87)

பாரென்ற கெந்தகத்தின் கிண்ணிசொல்வேன்
பண்பான கெந்தியது பலமோபத்து
ஆரென்ற தாம்பூரச் சட்டிதன்னில்
அப்பனே காய்த்ததைலந் தன்னைவிட்டு
வாரென்ற வழலையுப்பு பலந்தான்போட்டு
வளமாக அடுப்பேற்றி யெரித்திட்டாக்கால்
காரென்ற நீரைப்போ லுருகிநிற்கும்
கனமான கிண்ணிபோல்மண் மெழுகுகட்டே. (88)

கட்டவே மெழுகுதனி லூத்திவிட்டால்
கண்மணியே கிண்ணியதை யென்னசொல்வேன்
மட்டவே மால்தேவி கெந்திகிண்ணி
மகத்தான கிண்ணியடா மருவிப்பாரு
வட்டவே கிண்ணிதனிற் கற்பங்கொண்டால்
வளமான யுகாந்திரமும் நால்யுகந்தான்
அட்டவே அஷ்டசித்துங் கண்ணிற்காண்பாய்
அரகரா யிக்கிண்ணி யறிந்துபாரே. (89)

பாரென்ற யென்மகனே யோகவானே
பண்பான அசுவனியே யுனக்காய்ச்சொன்னேன்
ஆரென்ற அறிவுள்ளா ரிதனைக்காணு
அப்பனே யிக்கிண்ணி ஆர்தானகாண்பார்
வாரென்ற சிவயோகத் தாதியான
வளமான கிண்ணிதனை வைத்துப்பூசி
நாரென்ற நந்தியையத்தான் கண்ணிற்காணு
நலமாக வாசியுட யோகமாச்சே. (90)

நவலோகக்கிண்ணம்

ஆச்சப்பா நவலோகக் கிண்ணஞ்சேரு
அப்பனே செப்புடனே வெள்ளிலோகம்
காச்சப்பா பித்தளைவெங் கலமோடேந்தும்
கண்மணியே வங்கமுடன் தங்கஞ்சேரு
வாச்சப்பா திராவுடனே நாகஞ்சேரு
வளமாக யிதுவெல்லா முருக்கிக்கொண்டு
மாச்சப்பா வழலையது களஞ்சிபோடு
மைந்தனே கீறிட்டுப் பழுத்துப்போமே. (91)

போமப்பா மாக்குந்தான் ஐநூறாகும்
புகழான ஐங் காயம்பூ நீருஞ்சேர்த்து
வாமப்பா அண்டமெழு கதனைப்போட்டு
வளமாக யிழைத்து நன்றா யதன்மேற்பூசி
நாமப்பா விந்தாலே சீலைசெய்து
நலமாகக் கெசபுடத்திற் போடுபோடு
ஆமப்பா ஆறினபின் னெடுத்துப்பாரு
அழகான சுண்ணமதாய் நீறிப்போமே (92)

போமென்ற சுண்ணமது கொடியகாரம்
புகழான சுண்ணமடா யிதனைப்பூசி
ஆமென்ற சுண்ணமதில் வேதைகோடி
ஆகரா பிஷில்வித்தை கோடாகோடி
நாமென்ற சுண்ணமிதைச் செய்துகொண்டு
நலமான தொழிலெல்லா மாடுமைந்தா
காமென்ற கருக்குருவாஞ் சுண்ணப்போக்கு
கயிலாச முத்தியெய்துங் கண்டுபாரே. (93)

பாரப்பா அயத்தின்செந் தூரங்கேளு
பண்புமலப் புளிமுப்பூச் சுண்ணஞ்சேர்த்து
நாரப்பா யிழைத்துநன்றாய் அயத்திற்பூசி
நலமான நாதமதாற் சீலைசெய்து
காரப்பா மண்சீலை யேழுஞ்செய்து
கண்மணியே கெசபுடத்திற் போடுபோடு
வாரப்பா நீறிச்செந் தூரமாகும்
வளமாய்ச்செந் தூரமகத் துவமுமாமே. (94)

ஆமப்பா செந்தூர மிருபோதுண்ணு
ஆக்கைதனில் நோயெல்லா மகன்றுபோகும்
காமப்பா கற்பமிது அயகற்பந்தான்
கண்மணியே பணவிடைதான் கொள்ளுகொள்ளு
வாமப்பா வயதுதான் பதினாறாகும்
வளமான நரைதிரையும் மறைந்துபோகும்
நாமப்பா நல்லகுண முள்ளோருக்கு
நலமாக வெய்துமடா நவின்றேனே. (95)

கேளப்பா வாடையொன்று சொல்லக்கேளு
    கெடியான வாடையது உலகத்தோர்க்கு
ஆளப்பா யிந்திரகோபங் குளியானையின்னி
    அப்பனே சுழல்வண்டு உளமைகாடை
வாளப்பா வெள்ளைத்தா மரைக்கிழங்கு
    வளமான வெற்றிவேர் விலாமிச்சோடு
நாளப்பா நத்தைசூரி தொட்டால்வாடி
    நலமான சிவமூலி யிதுகளாமே. (96)

ஆமப்பா யிதுகளெல்லாம் நிழலுலர்த்தி
    அப்பனே சூரணித்து வடிகொண்டேதான்
வாமப்பா திகைப்பூட்டைக் கூடச்சேர்த்து
    வளமான புதுக்கலசந் தன்னிற்கொட்டு
காமப்பா புனுகுசவ் வாதுநாவி
    கருணைகோ ரோசனையின் வாசங்கட்டி
நாமப்பா மஞ்சளுட சீலைதன்னால்
    நலமான வாய்கட்டிச் சமாதிவையே. (97)

வையப்பா மோகினியை லட்சமோது
    வளமான பூசைநெய் வேத்யஞ்செய்து
கையப்பா நவநாள்சென் றெடுத்துப்பாரு
    கண்மணியே வாடைதனைச் சிமிழில்வைத்து
மையப்பா மகாமூள்ள பதியைநோக்கு
    மகத்தான வுமைதனைத் தியானித்தேதான்
கையப்பா நந்தியவர் வரங்களீவார்
    நலமான சகலபாக் கியங்களாமே. (98)

ஆமப்பா உனக்கேற்ற ஸ்திரீயைப்பார்த்து
    அன்பாக வம்மென்று வாடைவீசு
காமப்பா தூவிவிட்டு நடந்துபோநீ
    கண்மணியே குலமுடனே முறையுங்கெட்டு
நாமப்பா புத்தியுடன் மதியுங்கெட்டு
    நலமான மோகவெறி கொண்டுபின்னே
வாமப்பா உன்பின்னே வருவாள்பாரு
    வளமான ஸ்ரீகளுக்கு வயிரிநீதான். (99)

தானான மாந்தமென்ற மையைக்கேளு
தனதான தலைப்பிள்ளைப் பித்துவாங்கி
வேனான உடம்பினுட பித்துவாங்கி
விளம்பியதோ ரோட்டிலங் கோலம்வார்த்து
கானான நீரூட்டிக் கருக்கிக்கொண்டு
கண்மணியே திரைப்பூடு கழுஞ்சிபோடு
மானான காய்ந்தைலந் தன்னால்மத்தி
மைந்தனே மத்தித்துச் சிமிழில்வையே. (100)

வைத்துமே தேவிக்குப் பூசைபண்ணி
வளமான மையெடுத்துத் திலதம்போட்டு
அத்துமே உலகதனிற் போனாயானால்
ஆருமுன்னைக் காணார்கள் அறிந்துபாரு
மைத்துமே நூறுக்குள் வழிகளெல்லாம்
மாட்டிவிட்டே னிதுக்குள்ளே மைந்தாபாரு
நைத்துமே யிதுக்குமேல் நாற்பான்சொச்சம்
நலமான தண்டகத்தின் கவர்தான்முற்றே. (101)

சொச்சம் ௪0

முத்துமே கருவெல்... மினிமேற்சொல்வேன்
முடிந்ததொரு தண்டக... வரலாறெல்லாம்
அத்துமே நூறுக்குள் வாதஞானம்
அப்பனே யினிமேலே அதர்வனங்கேள்
கொத்துமே அஞ்சனமை விந்தைதன்னைக்
குருவான பிண்டமெய் யகலில்வார்த்து
மத்துமே கன்னி... திட்டுச்சிலை
மைந்தனே திரிதிரித்து அகலிற்போடே. (102)

போட்டுமே தலைப்பிண்டங் கபாலமூடி
புகழான தீபத்தை யெரித்துக்கொள்ளு
ஆட்டுமே முச்சாமம் மெரித்திட்டாக்கால்
அப்பனே நெற்கனம்போ லடையாய்ப்பத்தும்
நாட்டுமே மையதனைச் சுரண்டிக்கொண்டு
நலமான ஐங்கோலத் தயிலம்விட்டு
வாட்டுமே மத்திச்சுச் சிமிழில்வைத்து
வளமான அஞ்சனு தேவிபாமே. (103)

ஆமென்ற தேவிக்குப் பூசைபண்ணு
அப்பனே அறீங்-கிறீங் மறீங்-கென்றேதான்
வாமென்ற லட்சமுரு செபித்துக்கொண்டு
வளமான தேவியைத்தா னுச்சரித்து
காமென்ற பிடதுகையிற் றடவிக்கொண்டு
கண்மணியே கண்ணுட்டிப் பாருபாரு
நாமென்ற திரிலோக மூந்தான்தோற்றும்
நன்மையுள்ள பொருளெல்லாம் மெடுத்துக்கொள்ளே.(104)

கொள்ளவே பொருளெல்லா மெடுத்துக்கொண்டு
குணமான பென்மகனே உனக்கிடிலலே
அள்ளவே குபேரனுந்தா னுனக்கீடில்லே
ஆச்சரியம் லெட்சுமிதன் கடாக்ஷமெய்தும்
வள்ளவே சகலமுமுன் னறிவிலெய்தும்
வளமான அஷ்டபாக் கியங்களெய்தும்
நள்ளவே நான்முகனுர் கடாட்சஞ்செய்வார்
நலமான காட்சியெய்தும் நன்மைகாணே. (105)

காணவே வசியமென்ற மையைக்கேளு
கண்மணியே கன்னிமுதற் றாசைவாங்கி
ஆணவே திகைப்பூடை நடுவேவைத்து
அப்பனே திரியாகத் திரித்துக்கொண்டு
மாணவே அகலதனில் திரியைப்போட்டு
மைந்தனே ஐங்கோலத் தைலம்வார்த்து
வாணவே தலேயோடு மேலேமூடி
வளமான தீபத்தைக் கொளுத்திப்போடே. (106)

போட்டுமே சாமமது மெரித்திட்டாக்கால்
புகழான ஆடையது மேலேபத்தும்
ஆட்டுமே அம்மையைச் சுரண்டிக்கொண்டு
அப்பனே புனுகுசவ் வாதுசேர்த்து
நாட்டுமே மத்தித்துச் சிமிழில்வைத்து
நலமான தேவிமுன்பு வைத்துப்போற்று
வாட்டுமே பணவிடைதான் திலதம்போடு
வளமாக ஸ்ரீகளுன்னைப் பணிவார்பாரே. (107)

பாரென்று மின்னமொரு மையைக்கேளு
பண்பான நெருஞ்சியுடன் பூனைக்காலி
ஆறென்ற மருதாருடன் நாவிசூதம்
அன்பான செந்தியது சமனாய்ச்சேர்த்து
வாரென்ற அகிலதனி விட்டுரீயும்
வளமாகப் புடம்போட்டு எடுத்துப்பாரு
காரென்ற சுண்ணமதை என்னசொல்வேன்
கண்மணியே கல்வத்தி விட்டுமைந்தா. (108)

மைந்தாநீ பிண்டமதின் நெய்யைவார்த்து
மனதொன்று யாட்டயிலே மெழுகாய்ப்போகும்
சந்தான கஸ்தூரி வாசங்கூட்டித்
தநயனே கரிக்கொம்புச் சிமிழில்வைத்து
வந்தான தேவிக்குப் பூசைபண்ணி
வளமான மையெடுத்துத் திலதம்போட்டுக்
கந்தான அரசரிடம் செல்லுசெல்லு
கண்மணியே உனையழைத்துப் போற்றுவாரே. (109)

வாரான ராஜரவர் சரணஞ்செய்வார்
வாருமையா வென்றுனையே வணங்குவார்கள்
காரான வசியமடா கனகங்கோடி
காட்சியெய்தும் மோட்சமெய்தும் கருத்திலெண்ணு
மாரான வசியத்தா லெல்லாமாச்சு
மயக்கமதி லுண்டாச்சு மாயையாச்சு
நாரான ராஜருக்குக் குருவுமாவாய்
நன்மையுள்ள காரியத்தின் குருவாவாயே. (110)

வரமான யெந்நூலிற் றேறினோர்க்கு
வளமான முத்தியுடன் மோட்சமெய்தும்
கரமான ஐங்கரமாம் எந்நூல்மார்க்கம்
காட்சியிலே மோட்சமடா கருவாமிந்நூல்
விரமான வித்தில்லாப் பயிருமில்லை
விளங்கியதோர் மண்ணிலாத் தண்ணீரில்லை
அரமான சடமில்லாச் சீவனில்லை
அரகரா அன்னமில்லா ஆத்மாவில்லை. (111)

இல்லான சகலவுயி ரெடுத்ததகூறு
இயல்பாக இவ்விதமாய் நின்றதப்பா
கல்லான ஆண்பெண்ணு மில்லாவிட்டாற்
கனமான உலகமில்லை யாருமில்லை
வில்லான வானமில்லை பூமியில்லை
விளங்கியதோர் விந்துவுட னில்லாவிட்டால்
மல்லான பாழ்நரக மதுபோலாகும்
பகந்தான தீவிளையோ டொக்கிச்சேரே. (112)

சேரான நிலமிருந்தும் விரையில்லாட்டால்
செயமில்லை பயமில்லை யொன்றுமில்லை
வரான தொன்றிருக்க லாகாதப்பா
வளமாயா னிருந்தாற்பெண் ணிருக்கவேணும்
காரான சிவபயந்தான் சத்திகூறு
கண்மணியே சத்திமயம் சிவத்தின்கூறு
வேரான விலையிலாமா ணிக்கமில்லை
விளங்குமயம் விலைமதிக்கா விலையுமில்லை (113)

மயமான சொரூபமடா யென்சொரூபம்
மாயையது கோடான கோடியுண்டு
வயமான மாயையதி னாலேமைந்தா
உளமான பொய்குது களவுண்டாச்சு
கயமான தேகமதுக் கழிவுண்டாச்சு
கசமான கரணங்கள் நாலும்போச்சு
நயமான பாவபுண்ய ரெண்டுண்டாச்சு
நலமான பிறப்பதுவு மிதனாலாச்சே. (114)

ஆச்சென்ற மூடரவர் செய்யுமார்க்கம்
அசடான குழிக்குளிலே வீழ்ந்தலைந்து
காச்சென்ற காட்சியிது மோட்சமென்பார்
கசடர்செய்கை உலகமதிற் கணக்கோயில்லை
வாச்சென்ற ஞானத்தோர் காமம்போக்கும்
வளமாங்கா மத்தால்லை யகந்தாணுச்சு
மாச்சென்ற மானிடர்கள் மயக்கத்தாலே
மண்புரவர் புத்திகெட்டு மயங்குவாரே. (115)

வேறு.

வார்பெருகும் சின்மயமாம் வாழ்க்கை நிறைவிலே
சார்பெருகும் வையகங்கள் சனத்தகா டகிலே
கார்பெருகும் நந்தியவர் மாரையுங் கண்டோர்
மார்பெருகு மாண்பருகு மகிழ்ந்துலாக்க நாலே. ()

நூலான வாலடையொன்று சொல்லக்கேளு
நுணுக்கமடா ஆரறிவார் நுண்மைதன்னை
வாலான வால்மீண்டான் பித்துவாங்கி
வளமான யிந்த்ரகோபட சிபின்பித்தும்
சாலான வெட்டுண்ட குமாரன்பித்தும்
சமத்தான கன்னியுட நாகங்கூட்டு
காலான யிதுவைந்தும் நிழலுணர்த்தி
கண்மணியே விராகனிடை சமனாய்ச்சேரே. (117)

சேருகின்ற வெட்டிவேர் விலாமிச்சோடு
செயலான கஸ்தூரி புனுகுசட்டம்
ஆருகின்ற தேவதாரம் சவாதுகூட்டு
ஆச்சரியந் தனைவணங்கி பித்துங்கூட்டி
நேருகின்ற கண்டைசெவ் வகத்திவேரும்
நேர்சிறியா நங்கையொடு பெரியாநங்கை
மாருகின்ற மதியமங்கிப் பூநீஞ்சேரு
மகத்தான திதுவெல்லாம் ரவிபுலர்த்தே. (118)

உலர்த்தியே யிதுவெல்லாஞ் சமனாய்ச்சேர்த்து
உத்தமனே யிடித்துவடி கட்டிக்கொண்டு
கலரவே புதுக்கவசந் தன்னிற்போட்டு
களங்கமற மறுபடியும் வாசங்கட்டி
வலத்தவே தேவிமுன்னே வைத்துக்கொண்டு
வாழ்விகா ரூநியென்று தேவிதன்னை
மலத்தவே மனதில்லெண்ணிப் பூசைபண்ணி
மகத்தான தேவியுட மகிமைகாணே. (119)

காணவே வாலைதனைச் சிமிழில்வைத்துக்
கண்மணியே தேவிதனைத் தோத்திரம்பண்ணி
வாணவே கன்னியர்கள் மேலேவீசு
வளமாக மதியங்கி மோசங்கொண்டு
மாணவே உன்முன்னே வருவார்கோடி
மைந்தனே வாலையது மகிமைமெத்த
ஆணவே ஆச்சரியம் வாலைச்சித்து
அாகார யிச்சித்து அறிந்துகொள்ளே. (120)

கொள்ளென்ற யீடுதனைச் சொல்லக்கேளு
குருவான யிடுதனை யார்தான்காண்பார்
வள்ளென்ற கன்னியுட நாதம்வாங்கி
வளமான ஐங்கோலத் தயிலஞ்சேர்த்து
மள்ளென்ற ஐங்காயங் கூடக்கூட்டி
மத்தித்துப் பாக்கதிலே ஊறப்போட்டு
அள்ளென்ற ஸ்திரீகளுக்கு ஒருபாக்கிய
அனர்த்தமது வந்தாப்போல் மயங்குவாரே. (121)

வாரான அவரவர்தன் கருச்சேர்த்தீய
வளமாக மயங்கிடுவா ருலகமெல்லாம்
காரான வசியமடா கனகமீய்வார்
கைகண்ட யீடுசித்து கண்டுகொள்ளு
ஆரான யினமறிந்து மாட்டுமாட்டு
ஆச்சரிய மாரறிவா ரகத்தைமைந்தா
மாரான மாயையிது வசியமெல்லாம்
மாண்பருக்குத் திரைச்சாட்டு மகிழ்ந்துபாரே. (122)

சன்னிமாத்திரை,

பாரென்ற சன்னிமாத் திரைதான்கேளு
பண்பான யிரதமுடன் கெந்திலிங்கம்
நாரென்ற நாபியுடன் தாரஞ்சிங்கி
நலமான வெப்பாலி னரிசிசேரு
மாரென்ற சரக்கெல்லாஞ் சுத்திசெய்து
வகைதனக்கோர் விராகனிடை கொண்டுவந்து
வாரென்ற கல்வமதிற் போட்டுநீயும்
வளமான பழச்சாற்றால் சர்மமாட்டே. (123)

ஆமென்ற முலைப்பாலாற் சாமம்ரெண்டு
ஆச்சரியங் கையான்சார் சாமமூன்று
வாமென்ற மெழுகுபதந் தன்னைப்பார்த்து
வளமாக வழித்தெடுத்துப் பயறுபோல
நாமென்ற வுருண்டையதாய்ச் செய்துகொண்டு
நலமான ரவிதனிலே உலர்த்திக்கொண்டு
காமென்ற செப்புதனிற் பதனம்பண்ணி
கண்மணியே தேவிமுன்பு வைத்துப்போற்றே. (124)

போத்தென்ற மாத்திரையைத் தேனிற்கொள்ள
போகாத சன்னிபதி னெட்டும்போகும்
ஆத்தென்ற முலைப்பாலிற் கொடுத்துவிட்டால்
அசடான சுரங்களறு பத்துநாலும்
வாத்தென்ற வழிகாணு தோடிப்போகும்
வளமான நோயெல்லாம் வழிகெட்டோடும்
மாத்தென்ற மாத்திரைக ளிதுபோலில்லை
மகத்தான மாத்திரையை மருவிச்செய்யே. (125)

கிரந்தி யாத்திரை.

செய்யான சூலைரணங் கிரந்திபோக
செயலான மாத்திரைதா னென்றுசொல்வேன்
ஐயான காந்தமுடன் ரசசெந்தூரம்
அப்பனே பூரமுடன் லிங்கங்கெந்தி
வையான திதுவெல்லாஞ் சுத்திசெய்து
வளமாக வகைக்குவொரு விராகன்கொண்டு
கையான கல்வத்திற் போட்டுக்கொண்டு
கண்மணியே சுத்தசெலந் தன்னாலாட்டே. (126)

ஆட்டவே சரியுப்பு பரங்கிச்சக்கை
அன்புகருஞ் சீரகந்தா ளிசமுங்கூட்டி
நாட்டவே கல்வத்திற் போட்டுக்கொண்டு
நலமான புங்கம்பால் தன்னாலாட்டு
மாட்டவே கையான்சார் தன்னாலாட்டு
மகத்தான குமரிப்பால் தன்னாலாட்டு
காட்டவே மெழுகுபதந் தன்னைப்பார்த்துக்
கண்மணியே குன்றிப்போ லுண்டைசெய்யே. (127)

செய்யவே நிழல்தனிலே உலர்த்திக்கொண்டு
    செயலான பரணிதனி லடைத்துக்கொள்ளு
ஐயவே யிருமுருண்டை யிருபோதுண்டால்
    ஆக்கைதனிற் குலைபதி னெட்டும்போகும்
வையவே கிரந்தியேழ் கெதிகெட்டோடும்
    வளமான புண்புரைகள் சிலைகளெல்லாம்
மையவே மடிந்துவிடும் வியாதியெல்லாம்
    மகத்தான நோயெல்லாம் மடிந்துபோமே. (128)

போமப்பா கடும்பத்தியம் ரணத்துக்கெல்லாம்
    பொல்லாத வாதத்துக் கிச்சாபத்யம்
ஆமப்பா சயமொடுமேக் தாரகாசம்
    அப்பனே குஷ்டமுடன் பெருவியாதி
நாமப்பா காமாலையொடு வாதமெல்லாம்
    நலமான மேகமொடு வழிகாணாமல்
வாமப்பா மாத்திரையைப் பதனம்பண்ணு
    வளமான மருந்திதுதான் வண்மைகாணே. (129)

காணப்பா வயித்தியற்கு யிரக்கம்வேணும்
    கசடான பொய்யுடனே சூதாகாது
வாணப்பா மோசமது அதர்மமாகா
    வளமான கன்னமுடன் திருட்டுமாகா
மாணப்பா பெண்மாயை பொருளிச்சை
    மயக்கமொரு யிதுவெல்லா மாகாதப்பா
ஆணப்பா ஒருவர்மேலி லபாண்டமாகா
    அன்பாக யிதுவெல்லா மாகாதென்னே. (130)

ஆகாது வயித்தியர்க்கு யிதுவெல்லாந்தான்
    ஆசையற்ற வயித்தியர்க்கு மணமோடாது
ஆகாது யிவ்விதமா யிருந்தோருக்கு
    அழிம்பில்லை யொருநாளுந் தாழ்வுமில்லை
நாகாது சிதம்பரத்தின் காட்சியெய்தும்
    நலமான சிவயோக வாழ்க்கையெய்தும்
நீங்காது நிலைவிட்டு நிலைபோகாது
    நிலையாத புரியட்டம் நிலைத்துப்போமே. (131)

போமப்பா யிந்நூலைத் தேடிவாங்கு
பூதலத்திற் கிட்டாது புகழோகோடி
நாமப்பா யிந்நூலார் கொடுக்கப்போரார்
நலமான யிந்நூலால் நன்மையெய்தும்
காமப்பா கசடருக்கு யிந்நூல்கிட்டா
கண்மணியே சிவயோகிக் கெய்தும்பாரு
ஆமப்பா யிந்நூல் கொடுக்கமாட்டார்
ஆச்சரியங் கிடைத்தவர்க்கு மோக்ஷமாமே. (132)

சிவசுண்ணம்.

ஆமேதான் யேகசிவ சுண்ணஞ்சொல்வேன்
ஆச்சரியம் ஆரறிவார் சுண்ணமார்க்கம்
காமேதான் கம்பியுப்பு கந்தனுப்பு
கண்மணியே கல்லுப்பு பிண்டமுப்பு
நாமேதான் சொல்லுகிறோம் சிவவாக்யத்தால்
நலமான வாக்யமடா சிவத்தின்கூறு
வாமேதான் வகைதனக்கோர் பலமும்வாங்கி
வளமான கல்வத்திற் போட்டுக்கேளே. (133)

கேளேதான் சொல்லுகிறேன் மைந்தாமைந்தா
கெடியான பனிநீரை விட்டுஆட்டு
வாளேதான் விந்தாலே சாமமாட்டு
வளமான அண்டநீர் தன்னாலாட்டு
மாளேதான் நாட்டியிதை வழித்துக்கொண்டு
மைந்தனே வில்லையதாய்ச் செய்துநீயும்
நாளேதான் ரவியுலத்தி யெடுத்துமைந்தா
நலமான விந்தாலே சீலைசெய்யே. (134)

செய்யவே மண்ணாலே சீலைசெய்து
செயம்பெறவே கெசபுடத்திற் போடுபோடு
ஐயவே புடம்போட்டு யெடுத்துக்கொண்டு
அப்பனே சீலையைத்தான் தட்டிப்பாரு
தையவே காந்தியது யென்னசொல்வேன்
நலமான கடுங்காரச் சுண்ணமாச்சு
மையவே சுண்ணமிது மகத்தாஞ்சுண்ணம்
மடையரவர் காணுத மட்டிபாரே. (135)

மட்டியென்ற சுண்ணமதிற் கோடாகோடி
மகத்துவங்கள் காணுமடா மருவிப்பாரு
அட்டியென்ற ஞானமுடன் யோகமார்க்கம்
அப்பனே கிரிகையுடன் வாதமாகும்
நட்டியென்ற நால்துறையு மாடுஞ்சுண்ணம்
நலமான வழிக்கெல்லா மிச்சுண்ணந்தான்
கட்டியென்ற கனகசபை யிதிலேதோற்றும்
கயிலாச முத்தியெய்துங் கண்டுகொள்ளே. (136)

கொள்ளவே யிந்நூலைக் காட்டவேண்டாம்
குகையில்வைத்துப் பூசைசெய்து குருவாயெண்ணு
அள்ளவே யிந்நூலார் கொடுக்கபோறுர்
அசடருக்குக் கிட்டாது யிந்நூலப்பா
மள்ளவே மடையருக்குக் கிட்டாதிந்நூல்
மகத்தான புத்தியுள்ள யோகிக்கெய்தும்
வள்ளவே நந்தியவர் யெனக்குச்சொன்ஞர்
வளமாகக் கேட்டுத்தண் டகஞ்சொன்னேனே. (137)

சொன்னனடா நூற்றுநாற் பதுக்குள்மைந்தா
சொற்பெரிய சூக்ஷமெல்லாஞ் சூட்டினேன்பார்
வன்னனடா வகையாக யிந்நூல்சொன்னேன்
வளமான சூக்ஷதெண் டகமாமிந்நூல்
கன்னனடா நான்சொன்ன நூலுக்கெல்லாம்
கருக்கடையாங் கலைக்யான தண்டக்கந்தான்
மன்னனடா யிந்நூலிற் பூட்டைச்சொன்னேன்
மைந்தனே திறக்குகிற விதஞ்சொன்னேனே. (138)

சொன்னேமே யிந்நூல்போ லாருஞ்சொல்லார்
சொற்பெரிய கடல்நூலென் பதையும்பாரு
வன்னேமே வழிகளது நன்றாய்த்தோற்றும்
வகையான நூலதுதான் வண்மைபாரு
மன்னேமே யிந்நூலைப் பார்த்தோருக்கு
மகத்தான குருடருக்கு வெளிச்சம்போலாம்
அன்னேமே தண்டகத்தை அரையில்வைத்து
அனுதினமு மடிபணிந்தே னன்பாய்முத்தே. (139)

தன்வந்திரி தண்டகம் ௱சம்.

முற்றிற்று.



உ

குருவேதுணை.

எண்பத்திநான்காவது:

கோரக்கர் திருவாய்மலர்ந்தருளிய

# பிர்மஞான தெரிசனம் ௰எ.



ஐம்பொன்மலர் மிசைநடனக் காட்சியாகி
அண்டபுவ னுதார ஜீவனுகி
செம்மணிபோற் றிரண்டிலகுந தீபமாகிச்
சித்தரியும் பேரறியு மிரண்டுமாகி
கம்பவொளி வாகிநின்ற மோனமாகிக்
கண்வாக்கு மனதினிற்கு மெட்டாதாகி
உம்பர்பணிந் தேற்றுகின்ற சொரூபமாகி
யுலவுகின்ற பரம்பொருளின் பாதங்காப்பே. (1)

பேராம்பிர் மானந்த மடைந்தோன்சித்தன்
பிர்மவுப்பைக் கண்டவனே தவசிரேஷ்டன்
கூரான வாசிமறித் தவனேசித்தன்
குறிகண்டு மாயைவென் றவனேமுத்தன்
பூராயந் தெரிந்தவனே கிரியைபெற்றோன்
பூவுலகில் வசித்தவனே சரியைமார்க்கன்
நேரான தீட்சைபெற்றோன் சிவமுத்தன்
நிறைசிவயோ கம்புரிந்தோன் ஞானியாமே. (2)

யோகமிரு திவிநாலு ரெண்டுமாகும்
ஒடுங்கிநின்ற யிடமிரண்டும் பூமியாகும்
ஏகமல்லோ வாதிசத்தி சிவமுமாகும்
இயல்பான பூமியதும் வாயுவாகும்
தாகமென்ற வாயுவல்லோ விருகாலண்டஞ்
சதிராக வதன்மீது பிரமனண்டம்
தேகமதற் குள்பிரமா சனத்திலப்பாத்
திரமாகப் பிரமனும்வீற் றிருப்பான்பாரே. (3)

பாரேநீ சதிர்முகவன் சிருஷ்டிதானும்
 பரிவான வாசல்மேற் சுழியின்கீழ
நேரேதா னவ்வண்ட வரையுமாகும்
 நெடியதொரு முயலவென்ற பிரமன்றானும்
கூரேதான் வெள்ளியது குயத்தியாகும்
 குறிப்பான சிருஷ்டிப்பால் வாணியாகும்
சீரேசின் னவிருவர் சேர்ந்துகொண்டு
 சிறப்பாக வுலகத்தை சிருஷ்டித்தாரே. (4)

சிருஷ்டித்த பிரமனுக்கு அன்னந்தன்னை
 சிவதலங்க டோறும்வா கனமாய்ச்செய்தார்
கருதுகின்ற பிரமனுக்குப் பீஜந்தானுங்
 கருவாமுக் கோணநாற் கோணமாகும்
திருவென்ற சிகாரமொடு சகாரம்போட்டுச்
 சிறப்பாக மம்மென்று சுத்திநல்ல
குருவான சக்திதனைத் தெரிசித்தேதான்
 குணமாகச் சிவாயவென்று மகாரம்போடே. (5)

போடப்பா உகாரமிட்டு வூதும்போது
 புகழ்பெரிய பிரமனண்டங் கண்ணிற்றோன்றும்
நாடப்பா அன்னமது பிரமன்றன்னை
 நன்றாகச் சுமந்ததென்ன அகாரத்தாலே
கூடப்பா சலங்கலந்த பாலையன்னங்
 குறிப்பாக வெவ்வேறாய்ப் பிரித்துவைக்கும்
தேடப்பா பிர்மாவின் லோகந்தன்னிற்
 திடமான தேவதைகள் முப்பதாமே. (6)

மூப்பதுவா மதன்மேநா லங்குலந்தான்
 முன்னதனுள் ளேயிருந்து சுத்தியாகும்
செப்பமுள்ள பிர்மாஸ்தா பிதமேயாகும்
 திரமாக வெட்டிருயோ சனைவிஸ்தாரம்
தப்பாமற் சதிருதிக்கு மிடமேயாகும்
 தயவாகப் பண்பொன்றிப் பாரின்மீது
அப்பனே நீகேளா இத்தனென்றும்
 அடைவான பரப்பின்கீ ழிருகால்பாரே. (7)

பார்க்கவைங் கோணமைந் திதழுமாகும்
பரிவாக வதனடுவே முக்கோணந்தான்
நேர்மையுடன் வம்மென்ற வெழுத்துமாகும்
நிர்ணயமா யைந்துமுன் றெட்டுமாகும்
சேர்க்கவே யெட்டிதழு மட்டசத்தி
திரமான பிருதிவியு மப்புரெண்டுங்
கோர்வையா மிந்நெடுகந் தன்னிலேதான்
குறிப்புடனே கம்பமிரண் டொன்றுய்த்தாளே. (8)

தானென்ற வுருவமாங் கம்பந்தானுந்
தலமதிலே யஞ்சுருவ தானவாணி
தேனென்ற வானுருவி பாய்ந்துநிற்குஞ்
செம்மையுடன் காணுத சாகாக்காலும்
வானென்ற சத்திசிவம் நின்றகால்தான்
வளம்பொருந்துஞ் சத்திகால் கீழேகாட்டி
கோனென்ற சிவத்தின்கால் மேலேகாட்டிக்
குணமாகக் கண்டதொரு மார்க்கங்கேளே. (9)

மார்க்கமப்பா மாபலிக்குக் காட்டியேதான்
மைந்தனே மகாரத்தால் வழிதெரிந்தேன்
ஏர்க்கையுள்ள குண்டலிதா னிருக்குந்தானம்
இயலான பிர்மாவும் விட்டுனுந்தான்
பார்க்கருத் திரன்மகேஸ் வரனைத்தானும்
பரிவாக நாற்காலாய் நிறுத்திக்கொண்டு
சேர்க்கையாய்க் கீழ்மேலுஞ் சதாசிவத்தைச்
சிறப்பான பலகையாய் நாட்டிக்கொண்டே. (10)

நாட்டியே யீஸ்பரியுந் தனித்திருந்து
நன்மைபெற சிருஷ்டிப்பா ளண்டந்தன்னை
ஆட்டியே யுகமதுதான் முடிந்தகாலம்
அப்பனே பரமசத்தி யழியாள்பாரு
தாட்டிகமாய்ச் சத்திக்கு ளொடுங்கும்
தன்மையுள்ள வல்லசத்தி தரிக்கும்வீடு
மூட்டியதோர் குண்டலித்தாய் வாசஞ்செய்யும்
மூலமதை யறிந்துநீ குருவைக்காணே. (11)

குருகண்டு கால்பிடித் தேறும்போது
 குபீரென்று தள்ளுமடா வேகத்தாலே
திருகண்டு வாயுவுக்கு மேலதாகத்
 திகழொளியு மெத்தவடா சப்தமேகம்
இருட்கொண்டு மறைபொழியு மிருட்டுங்கம்மும்
 இயற்கைதனை யறியாமல் மாண்டார்கோடி
அருட்கொண்டு மறைக்கடந் தப்பாற்சென்றால்
 அப்பனே வொளிவீசுங் கண்கொள்ளாதே. (12)

கொள்ளாத சோதிதனைக் கண்டுகொண்டால்
 குவலயத்தி லுனக்கீடு வுண்டோவப்பா
தள்ளாரே சித்தரெல்லா மகிழ்ந்துவுன்னைத்
 தானெடுத்து முத்தமது கொடுப்பாரப்பா
விள்ளாதே யொருவருக்கும் வெளிவிடாதே
 விந்தையுள்ள யெனது நூல் நூற்றியைந்தில்
கள்ளமன துள்ளவரைச் சங்கரிக்கக்
 கருச்சொல்லி யிருக்கிறேன் கருத்தாய்ப்பாரே. (13)

பாரேநீ யென்னூல்தா னை நூற்றன்னைப்
 பரிவான கலைக்கியான மென்றார்சித்தர்
நேரேதா னதைத்திரட்டி யிந்தநூலை
 நீயறியச் சொல்லிவைத்தேன் மைந்தாவின்னம்
கூரேதா னில்லாத நூல்கடன்னைக்
 குறிப்பாகப் பாராய மிந்நூல்பாரு
வேறேநா னொருவருக்கு முரைத்திடாமல்
 வேண்டுமுன் றனக்காகச் சொல்லினேனே. (14)

சொல்லுகிறேன் சதுரகிரி தன்னிலப்பாச்
 சுகமான வாற்றோர மென்குகைக்குள்
வல்லசித்த ரனந்தம்பே ராகக்கூடி
 வாழ்ந்திருப்ப ரதனருகே குண்டாதன்னில்
நல்லதொரு கஞ்சாவை நான்கசக்கி
 நயம்பெறவே யவர்களுக்குக் கொடுத்ததாலே
எல்லவரும் பயன்பெற்றார் குகையிற்றங்கி
 இயற்றினேன் தயிலங்க ளனேகந்தானே. (15

தானென்ற தயிலவர்க்க மனந்தமாகச்
சமைத்ததொரு கல்லைங்க ளனந்தங்கோடி
நானென்ற வாதமுறை யநேகஞ்செய்து
நலமாக ஒவ்வொருவர் தனக்குமீய்ந்தேன்
வேனென்ற சுண்ணத்தைக் குகைக்குள்வைத்தேன்
வித்தைமிகுங் குருவறிந்தோர் தனக்கேகிட்டும்
வானென்ற மடையருக்குத் தோணுதப்பா
மறைப்பான மைதன்னால் மறைத்திட்டேனே. (16)

மறைத்திட்டே னென்குகையி லநேகசித்தை
மைந்தனே வுன்றனக்காய்ச் சொல்லிவைத்தேன்
துறையதனைக் கண்டுநீ யெடுத்துக்கொள்ளு
சொல்லாதே யொருவருக்குந் தோசந்தோசம்
முறையாக விதையறிந்து நடந்தாயானால்
முனிவர்களுஞ் சித்தர்களும் புகழுவார்கள்
நிறையாகத் தெரிந்துகொள் மைந்தாநீயும்
நீடூழி காலம்வரை வாழ்குவாயே. (17)

கோரக்கர், பிர்ம ஞானதெரிசனம் ௱௭.

முற்றிற்று.







ஸ்ரீவில்லிபுத்தூரைச்சேர்ந்த மகம்மது சாயபுபுரம் திருவேங்கடத்தேவர் அவர்கள் குமாரர் போத்துலிங்கத்தேவர் அவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருவேதுணை.

எண்பத்தைந்தாவது:

கோரக்கர் திருவாய்மலர்ந்தருளிய

# கற்பசூஸ்திரம் ௩௧.



கோரக்கர் மூலி குருவி னுபதேசம்
கேரொக்கக் கொண்டு நிலையறி வாரில்லை
கேரொக்கக் கொண்டு நிலையறி வாளர்க்குச்
சிரொத்துப் பாயும் சிவபதந்தானே. (1)

சீர்பெருங் கோரக்கர் சிறந்தநல் மூலிகை
ஏர்பெருந் தம்பனம் யெழில்சேர் வசீகரம்
சார்பெரு ஞானம் சகல கலைதரும்
நேர்பயிங் கற்ப நிலமை யியம்புவாம். (2)

நிலமை யியம்ப நெறியவேர்க் கொம்பு
நலமுறு திப்பிலி நல்ல மிளகுடன்
குலஞ்சேர் கிராம்பு கூட்டுசா திக்காய்
தலம்புகழ் பத்திரி சடாமாஞ்சி நெல்லியே. (3)

நெல்லி மதுரம் நிசமுள்ள யேலமும்
மல்லிநற் சீரகம் வங்க மதுநிறை
நல்ல அபின்சிறு நாகங் கசகசா
மெல்லிய தாளிசை மிக்கான மூலியே. (4)

மிக்கான ஓமம் மேவுவா லுழுவைத்
தக்க மிளகறு சார்ந்த அரத்தையும்
அக்கிராக் காரமும் ஆனநற் கோஷ்டமும்
ஒக்க வகைக்கெலா மோர்நிறை சேருமே. (5)

சேரும் வகையதிற் சிறந்த அபின்நிறை
சாரும் மருந்தெலாந் தனித்தனிப் பாகமாய்

வீறுங் கெடாமல் வெதுப்பிப் பொடிசெய்து
பார்புகழ் நீறுபோற் பதமாய் வடிகொளே. (6)

வடிகொண்ட சூரணம் வகையாய்ச் சமைந்தபின்
படிகொண்ட கோரக்கர் பகருநல் மூலிகை
நெடியவன் மேனிபோல் நீளவாய் நவபுடம்
கடிய பதமெனக் கருதிநீ செய்திடே. (7)

செய்துமுன் சூரணஞ் சேர்ந்த பிடைநிறை
உய்தமாய் ரெண்டும் உகந்துடன் சார்ந்து
துய்யநல் வாசியைத் துவக்கியுண் ணக்கிடில்
ஐயன் குருபரன் அருளினுற் கொண்டிடே. (8)

கொண்டிடு சூரணங் கூறும் பணவிடை
உண்டிடு மந்தி யுதயாதி தன்னிலும்
மண்டிய வாதமும் வளர்ந்திடும் பித்தமும்
கண்டித்த ஐயமுங் கடவாது நிற்குமே. (9)

நிற்குமே விந்துவும் நிகரில்மன் மதன்போல்
பொற்கொடி மாரெலாம் புகழ்ந்து விரும்புவார்
தக்க வசீகரம் சகல அறிவுடன்
மிக்க தவம்சிவம் மேவும் இளமையே. (10)

இளமைய தாகும் இயல்சடம் பித்தமாம்
வளமையாஞ் சினிவாதம் பனிவெல்லம்
உளமகிழ் தேனி லூற்றசி லேற்பனம்
தளமது செய்திடிற் சார்ந்திடுங் கற்பமே. (11)

சார்ந்திடுங் கற்பந் தனித்து அருந்திடிற்
போந்திடும் வல்பிணி பெண்கள்நல் லாருடன்
சேர்ந்திடி லாவின் செய்பால் பனிவெலம்
நேர்ந்து கொதித்தபின் நிசமாக ஆற்றிடே. (12)

ஆறிய பருவத் தளவாய்ப் பணவிடை
கூறிய கற்பங் கூட்டி யிருநிறை
மீறிய வண்ணம் விரும்பி யருந்திடிற்
சீறிய லேகியம் செலுத்து மனந்தமே. (18)

அனந்த விதந்தரும் ஆனந்த கற்பம்
மனந்தனி லன்பாய் வளர்க்கு மதின்முறை
தினந்தொறும் பூசை செபிக்குச் செய்திடில்
தனந்தரு செல்வமுஞ் சகலமுஞ் சித்தியே. (14)

சகலமுஞ் சித்தியாந் தரணியி லொருமுறை
புகலும் வகைகேள் பூரண லேகியம்
பகரும் மருந்தெலாம் பதிவகைக் கஞ்சு
நிகருங் கழஞ்சதாய் நிறுத்துநீ கூட்டிடே. (15)

கூட்டு மருந்தெ லாங் குணமாய்ப் பொடிசெய்
தீட்டுங் கற்பஞ் சிறந்த நிறையிடை
காட்டுறை தூதளை கருநிலா மிச்சுவேர்
நாட்டுறை கூவிளம் நவிலிரு மூலியே. (16)

நவிலு மமுக்கிரா நறுமணஞ் சந்தனம்
புவியி னறுகுவேர் புகழ்பெரு சீந்தியும்
தவந்தரு மூலிகை தனித்தோர் பலமதாய்ச்
சிவந்தநற் பானையிற் சேர வரிந்திடே. (17)

சேர வரிந்துமே செலம்படி ஒன்பதில்
வாரமாய் விட்டு மகிழ்ந்திரு நாள்வரை
காரங் கெடாமற் காய்ந்து குறுகியே
சாருந் திரிபடி தண்ணியாக் கொள்ளுமே. (18)

கொள்ளுங் கசாயங் குறித்திடா வின்பால்
தெள்ளியே வடித்துச் சேர்படி யொன்று
விள்ளருஞ் சர்க்கரை மேற்பலம் பத்து
உள்ளிய பாகுபோ லுடன்கிண்டிக் காச்சுமே. (19)

காச்சிக் குழம்புபோற் கலந்தெழு நேரம்
தாச்சியில் லாமற் சமைந்த பொடியதைப்
பாச்சியுட் கிண்டிப் பதங்கண் டிரக்கிட
வாச்ச கரிமுகன் மலரடி போற்றுமே. (20)

போற்றுங் குருபரன் பொன்னிரு பதத்தைப்
போற்றுந் தவநிலை புகழ்பெருஞ் சேவடி

போற்றுஞ் சிவசித்தர் பொற்பத மன்பதாய்ப்
போற்றும் பராபரை பூரணி கன்னியே. (21)

பூரணி பாதத்தைப் போற்றி விதியுடன்
காரண வாசியைக் கடவாதுள் ளிட்டுத்
தாரணி யன்பர்கள் தரிக்கு முறையதாய்ச்
சீரணி லேகியந் தினந்தோறுஞ் சாதியே. (22)

சாதித் தனுதினந் தவ்ப்பெருங் காலம்
நீதிச் சதாசிவம் நிலைதனை நோக்கிடும்
ஆதித்தன் மாமதி அக்கியின் மண்டலம்
நாதிப் பெரும்வழி நடனமுந் தோன்றுமே. (23)

தோற்றும் புலன்பொறி துடராது நீங்கிடும்
மாற்றும் நரைதிரை வசப்படும் வாசியும்
சீற்ற மவிந்திடுஞ் சேர்ந்தறி வுண்டாம்
போற்றும் வசீகரம் பொன்னிறத் தேகமே. (24)

பொன்னிற மேனி பொருந்திடு லேபனம்
மின்னனை யாருடன் விரும்பிவை யன்றி
மன்னுநீ ரழிவு வளம்பெரு பாண்டுடன்
உன்னிய காசமோ டிரும்பிணி தீருமே. (25)

தீரும் பயித்தியஞ் சேர்ந்தெரி குன்மம்
தீரும் சயமுதற் சேர்பிர மேகம்
தீருங் கிராணி சேர்தலை வாயுவும்
தீருஞ் சடத்துள தீவினை போகுமே. (26)

தீவினை நீங்கிடுஞ் சித்திக்கு மன்னெறி
தாவிய நெல்லியுஞ் சார்ந்த மிளகது
மேவிய மஞ்சளும் வேப்பம் பருப்புடன்
பூவிற் கடுக்காய் பொருந்து வகை யஞ்சே. (27)

வகையஞ்சு மாக்கி மகிழ்வா யரைத்திடு
பகையன்றி யாவின் பாலிற் கொதித்தபின்
சுகமுறத் தேய்த்துச் சுடு செலம் வார்த்திடு
மிகவில்லை காயம் விளங்கிடு முண்மையே. (28)

விளங்குநல் வெண்ணெய் விளங்கிடும் புளிமுதல்
வழங்கும் வகையெலாம் மாற்றி யறிவுடன்
களங்கமில் கோரக்கர் கருதிடுங் கற்பத்தை
உளங்களி கூர்ந்து யுகந்திடுஞ் சித்தியே. (29)

சித்தான மூலியே சிந்தையுள் நேசமாய்
நித்தமுஞ் சாதித்தே யெல்லா மிகந்தரும்
பத்திசெய் யாமற் பழுத்தே யிழுத்தவர்
எத்தனை நாளும் இடராகு முற்றே. (30)

உன்னி யுணர்விக்கும் ஓங்காரத் துட்பொருளாம்
கன்னியரைக் கூடிக் கலவிக்கும்—பின்னுமது
தாரத்தை வென்றதது தான்சிவமாய் நிற்குமது
கோரக்கர் செய்யுங் குணம். (31)

கோரக்கர் கற்பசூஸ்திரம் ௩௧.

முற்றிற்று.

ஸ்ரீவில்லிபுத்தூர் வித்துவான் பொன்னங் கூடஞ் செட்டியார் அவர்கள் குமாரர் சுப்பிரமணியஞ் செட்டியார் அவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருவேதுணை.

என்பத்தாறுவது:

கோரக்கர் திருவாய்மலர்ந்தருளிய

# குருஜெயநீர்ம.



போக்கெனச் சொல்வேன் கேளு புளிரண்டு சார மொன்று
தாக்கென இந்துப் பொன்று தருவெடி யுப்பு ரெண்டு
வாக்கெனச் சூட மொன்று வளர்கின்ற கல்லுப் பொன்று
பாக்கெனப் பூநீர் நாலு பண்புட னரைத்துக் கூட்டே. (1)

கூட்டியே வில்லை யாக்கிக் குக்குடப் புடமிட் டாலே
நீட்டிய சுண்ண மாகும் பீங்கானில் வைக்கச் சேநீர்
ஆட்டமில் லாது மிந்த அறுவகைச் செயநீ ரென்பார்
மூட்டிய போக்குக் கெல்லாம் முழுக்கட்டிச் சேநீர் தானே. (2)

தானென்ற சேநீர் தன்னைச் சகலனன் முறைக்குங் கூட்டு
ஊனென்ற சேநீ ரொன்று உரைக்கிறேன் சுண்ணம் புக்கு
வானென்ற கடல்நு ரையை மயமுடன் சுட்டு நீற்றிச்
சீனனைக் கூட்டி யாட்டிச் சிறுபுடம் போடச் சுண்ணம். (3)

சுண்ணந்தா னெட்டுச் சத்தி சூடம்பூ வெட்டு உப்பு
அண்ணலே கல்லுப் பொன்று அரைத்துநற் புடமே போடச்
சுண்ணமா மிதுதன் னோடே சூடிவெடி யுப்பு நாலு
கண்ணிய னுடன் ரண்டு கதிப்புடன் குமரிச் சாத்தால். (4)

சாத்தைவிட் டாட்டிச் சுட்டு தருசுண்ணத் தோடே சேர்க்குங்
காத்திடு யுனிதா னுலுங் கல்வத்தி லாட்டு தற்கு
மாத்திர முலைப்பால் விட்டு வகையதா யரைத்துக்கொண்டு
நீத்திடப் புடத்திற் போட நிசமறு வகைசுண் ணம்பே. (5)

சுண்ணும்பைப் பீங்கா னிற்றான் வைத்திடச் சேநீ ராகுஞ்
சுண்ணம்புப் போக்குக் கெல்லா மிந்தநீர் சொல்லி யாரும்

எண்ணமாம் சவுக்கா ரத்துக் கிசைகின்ற மெழுகுக்குந்தான்
வண்ணமா முன்னி ரப்பா வகையது கண்டு பாரே. (6)

பாரப்பா கோச பீசம் பரிவுகோ ரோச னையுஞ்
சேரப்பாத் தேனு லாட்டிச் சிறுமையற் றளவு செய்து
பாரப்பா வீரங் கூட்டிப் பண்புடன் பார்க்கவேதை
ஆரப்பா யிதை யறிந்தோ னதிசய வேதை காண்பான். (7)

காண்பது காரீ யந்தான் கடியதோர் சூத மப்பா
வீண்பாடென் றெண்ண வேண்டாம் வீரங்கற் பூரங்கூட்டி
யாண்டவன் சத்தி கெங்கை யரிதாரங் குருவண் டோடு
வாண்டைகைப் பூரா கத்தின் மணமறு நீரு கூட்டே. (8)

கூட்டியே மெழுகு நீராற் கொண்டரை யேழு சாமம்
ஆட்டிப்பின் வெள்ளி பத்தி லணைத்திட மாற்று முருகுந்
தீட்டிய ரோம நீறுஞ் சேரப்பா பொடியும் வண்டின்
கூட்டியே வீர மிட்டுக் கொடுக்கவே ரசமுங் கூட்டே. (9)

ரசமுட னடியுங் கூட்டி நல்லதோர் மெழுகு நீரால்
வசியவே யாட்டிச் செம்பில் வளமுடன் பத்துக் கொன்று
நிசமுடன் கொடுக்க வெள்ளி யேழுக்கு மூன்று சேர்க்க
நிசமுறு மஞ்சு மாற்று நிச்செயந் தப்பா தென்னே. (10)

கோரக்கர் குருஜெயநீர் ம.

முற்றிற்று.





ஸ்ரீ வில்லி புத்தூர் கண்மாய்ப்பட்டி வித்துவான் அருணகிரிநாடார் அவர்கள் குமாரர் தெய்வசிகாமணி நாடாரவர்களிட மிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குமரன் றுணை.

எண்பத்தேழாவது:

கோரக்கர் திருவாய் மலர்ந்தளிய

# வகாரசூஸ்திரம்.



அருள்பெற்ற நந்தி ஆசா னெனக்குப்
பொருள்பெற்ற மூலர் போக ரெனக்குத்
தருவொத்த தோளர் சட்டை முனியும்
பரமுளக் கொங்கணர் பச்ச மிகுதியே. (1)

மிகுதிய தாக விட்ட குரு நந்தி
தொகுதி யுரைத்தச் சொற்படி கேட்கத்
தகுதியின் வரத் தற்பரம் விள்ளப்
பகுதியின் பூதப் பஞ்சாட் சரமே. (2)

தாமேவு மூச்சை தன்னை நிறுத்தவும்
வரைமே லிருத்தி மகுடம்போற் கட்டவும்
புரமட்ட காசப் புரத்தி லடக்கவும்
கரமிட்ட நந்தி கைகாட்டி னாரே. (3)

எல்லோருங் காணா திருக்கும் பொருளொன்று
வல்லார் மகத்துவம் வாய்கொண்டு சொல்லாற்
கல்லாத வற்கு கருச்சொல்லப் போமோ
சொல்லக் கொளுவிஞ்சித் திரட்டிய காயுள்ளே. (4)

காயி லிருக்குங் கயிலாச பொற்குரு
தோய்கின்ற மீன்மினித் தோகையர் பெண்டாம்
ஆயி வொருபெண் அலங்காரச் செல்வி
கோயி லிருக்கக் கூர்மணக் குலாவுமே (5)

குலாவிய தொன்று மகத்தாங் குருவாம்
உலாவுஞ் சிருநீர் உட்சாடச் சத்தியாம்

பலாபல மொன்றுண்டு பாரி லறியார்
கலாவிப் யாராகுல் கைமுறைத் தப்பே. (6)

தப்பாமற் சொன்னேன் சந்திர னாலே
மெய்ப்பான மேகக் குருவாம் நிலவுப்புப்
கைப்பான உவரில் கதிற்போலே நிறக்கும்
அப்பொருளப்பா அரியா ரகமே. (7)

அகமான திவ்வுடல் அட்டமக் கூறு
மகமான யோனியின் பச்ச மறிந்தால்
அகமற யிவ்வுடல் அடக்க மறிவார்
சொற்குரு வாகும் சிதறிவிட் டாரே. (8)

சிதறியச் சத்தப் பனிக்கெங் கைப்பிள்ளை
உதறிய பூப்போல் உணர்குரு வாகும்
பதறிடாப் பூவின் பாக மிளவற
அதறிய தாக நிறசத்தி அஞ்சே. (9)

அஞ்சு தறந்தான் அமுறியிற் காய்ச்சி
மிஞ்ச விடாதே நீரண்டு உப்பேரண்டு
அஞ்சுத் தெளிய அறியார்கள் கைமுறை
நெஞ்சில் நினைவாய் நிலைத்திடும் பூவே. (10)

பூவே தெளிந்தபின் பொற்குரு வாகும்
நாவிற் கைமுறை நந்தியு ரைத்தார்
தேவே வுலாவும் சலத்தினுட் கூறு
பூவே யடுக்கப் புகழ்ந்திருப் பாரே. (11)

இருப்பா ரிவரை யாரு மறியார்
அறுப்பா யறிந்தாலுங் கைமுறை யாகார்
வருப்பே யிதுப்பென்றும் வகையு மறியார்
கருத்தாலுக் காகப் பிள்ளைக ளில்லையே. (12)

இல்லரத் தாள்க்கெங்கை யிவருட பெண்டாம்
சொல்லக்கேள் கல்லுப்புத் தோணியுங் காணூற்
நல்லகல் லுப்பு நயம்பெறக் கங்கை
அல்லக் கதிரவனுகு முகத்திலே. (13)

முகத்திற் றெளிந்த முற்குரு வப்பா
செகத்தி லடங்காத் தெளிந்த கல்லுப்பாம்
மகத்துவ மான வளர்நில உப்பாம்
அகத்தி லடங்கும் ஆதியின் சத்தியே. (14)

சத்தி உவர்ப்பூத் தையலே மேவ
அத்த சலந்தான் உருதி நிலவுப்பாம்
சித்திக்கப் பெண் திடமங்க ளறியார்
சத்தியுஞ் சிவமும் தான்சேரு தற்கே. (15)

பூநாகச் சுண்ணம்.

சேரும் வகைதான் செப்புவேன் பின்பு
பாருள் கிடக்கும் பூநாகம் பண்பாக
காருச லமுதால் தொளியில் நிறுக்குமேல்
தாருக்கும் பொன்போ லக்கரி போலே. (16)

பொன்போ லுலாவியப் பூநாகம் பாவிமேலத்
தன்பா லுரையத் தனிச்சுத்திப் பூநாகம்
இன்ப முடனே யிழைத்தா னடக்கத்
தன்பாக் கரியார்ச் சதுருடன் சொல்வேன். (17)

சொல்லக்கே ளப்பா துடிநில உப்பொன்று
சொல்லு மடியொன்று சூட்டினுன் றுகவும்
நல்ல கல்லுப்பு சுண்ணம் ஒருகாசிடை
வல்ல கறியுப்புச் சுண்ணமு மவ்விடை. (18)

அவ்விடைச் சினம் மாட்டு அறுநீரால்
செவ்வுள வீரஞ் சேர்பத்துக் கொன்றாய்
கவ்வவும் பூநாகம் கதித்தஞ்சு கூட்டி
சேவற் புடமே செல்லநற் சுண்ணமே. (19)

சுண்ணம்பூ நாகந் துலையாக் கவர்கோடி
என்னெனச் சரக்கு மிதிலேதான் மாண்டிடும்
அண்ண நல்லொரு குருசொல்லக் கேளும்
வண்ணக் குருவண்டு மாகுரு வாமே. (20)

குருவாம் குருவண்டு கூறும் வகைகேள்
பொருளாங் கறியுப்புப் போடு மகிமையைக்

கருவாஞ் சலத்தி லேமுதற் காய்ச்சி
திருவாம் பெருமைச் சேதிவின் ளாதே. (21)

விள்ளக்கே ளப்பா யிருப்பஞ் சிலயிரண்டும்
தெள்ளப்பா உப்பொனறு சித்திய தாகும்
கொள்ளப்பா ஊதக் கொடியாற் சுண்ணம்
துள்ளிடும் வீரம் சேர்த்திடச் சோதியே. (22)

சோதனை செய்யச் சுருக்கொன்று சொல்வேன்
நீதி கறியுப்புச் சுண்ண நிலவுப்பு
ஆதியடியடி அறுநீர் வகையால்
ஓதிடுஞ் சூட னுடன்சரி கூட்டியே. (23)

சரிகூட்டி வீரன் தனைப்பத்துக் கொன்று
குருவண்டு நாலும் கூட்டி யரைத்து
மருவிய தோளா மடங்காத பேரில்லை
ஒருபுடம் கோழி உயரத்திற் சுண்ணமே. (24)

சுண்ணங் குருவண்டைச் சொல்லவொண் ணாது
எண்ண மறுபத்து நாலு பேறுந்தான்
அண்ணத்தைக் காட்டச் சேர்ந்து மடிவார்
வண்ணங் குருவண்டு கூட்டாத வாதியே. (25)

வாதியா லிந்த மாகுரு விட்டவர்
நீதி நிலவுப்புச் சுண்ணத்தை விட்டவர்
கோதி வடிகின்ற கோரோசனை தேனை
ஆதி கறியுப்பு அடிசத்தி விட்டவர். (26)

உதித்த தருசின் சுண்ணத்தை விட்டவர்
துதித்த சவுக்காரம் வழலை விட்டவர்
மதித்த காரண வகைதனை விட்டவர்
பதித்த செய்கையின் பாகத்தை விட்டவர். (27)

விட்டவர் கெட்டார் வேதையுங் காணூற்
சட்டை முனிக்கிச் சவுக்கார மேகுரு
கட்டிய கொங்கணர் தமக்குக் கறியுப்பு
பட்டணங் கருவூ ரையர்க்குத் துரிசிதாம். (28)

துருசுசுண்ணம்.

துருசு மூகிந்த குருவகை சொல்வேன்
விரையின்ற பாகல் தயிலத் துடனே
பொருள்நில உப்படி சூடனுங் கூட்டி
அருள்வீரன் மேவு மாதிக் கவசமே. (29)

கவசங் கதிரவன் காண வுலர்ந்தபின்
அவசம் வாராமல் ஒருபுதுச் சட்டியில்
சிவசத்தி யான உவர்மண் ணொருபடிக்
கவசம் நடுவைத்துக் கட்டி யெரிக்கவே. (30)

எரிகின்ற சட்டிக்கி மேற்சட்டி மூடியே
தெரியாமல் மூன்று சேலைமண் செய்து
ஒருசாமந் தீயிட ஓர்கம லாக்கினி
துருசு முடிந்தது சொல்லவொண் ணாதே. (31)

சொல்லவொண் ணாத துருசிது சுண்ணம்
எல்லாச் சரக்கையும் யெதிரிட்டுக் கொல்லும்
வல்லதோ ரோமமும் குருமுடிப்பாமே
நல்லதோ ருப்பு சுண்ணநில உப்பே. (32)

ரோமச்சுண்ணம்.

நிலஉப்பு அடியும் நிறைசூடன் வீரனும்
நல்கிய ரோமமும் நன்றுயரைக்கையில்
விலைபெத்த தண்ணீர் விசைகொண்டு ஆட்டி
அலகிய வில்லைக் கவசம் புடம்போடே. (33)

போட்டபின் ரோமம் புகழ்நல்ல சுண்ணம்
வாட்டங்க ளில்லை மடக்குச் சரக்கெல்லாம்
நாட்டங் கடல்நுரை நற்குரு வாக
ஈட்டினிற் கேளு யெடுத்துரைப் பேனே. (34)

கடல் நுரைச்சுண்ணம்.

உரைப்பேன் உரையொன்று உத்தடி யுப்பு
நிறைத்த கறியுப்பு நிதிவீர சூடனும்
நுரைக்கிடை யாக நுணுக்கி அரைக்கத்
தரைக்கடங் காத நீர்விட் டாட்டே. (35)

ஆட்டிய கோழிப் புடமிடச் சுண்ணம்
அதட்டியே கொல்லும் அருசு வெளுக்க
ஈட்டங் கடல்நுரை சுண்ணத்தை விட்டவர்
ஆட்டு முடம்போல அதரிடும் வாதமே. (36)

வாதங்கள் காண வகையொன்று விள்ளுவேன்
நாத ரெனுந்திரு மூலர்கை யாடிய
நீதிய கல்லுப்புச் சுண்ணத்தை விட்டவர்
வேதையைக் காணார் மிதமிஞ்சிப் போமே. (37)

மிஞ்சிய கல்லுப்பு விளையும் சமுத்திரம்
கொஞ்சிய பாறைத் தூருக்கீழ் விளையும்
தஞ்சமீ தென்று தானறி யார்கள்
வஞ்சனை யாக மயக்கிடும் கல்லுப்பே. (38)

கறியுப்புக் கட்டு.

கல்லுப்பு மாகும் கட்ட வகைகேள்
நல்லதோர் சினம் நற்கறி யுப்பு
மெல்லடி சத்தி விளைந்த நிலஉப்பு
கொல்லும் வெண்காரம் கூறுஞ்சவ் வீரமே. (39)

வீரமும் பூரமும் விளங்குபூ நாகமும்
வளரோமச் சுண்ணமும் வளர்கல்லுச் சுண்ணமும்
பண்பா யரைக்கச் சாரநீ ராலேத்
தன்மைய தாகத் தானாட்டிக் கொள்வரே. (40)

ஆட்டி யொருமுழப் புடமிடச் சுண்ணம்
நாட்டமா யெந்தச் சரக்குமே லச்சுண்ணம்
வாட்டிட வெல்லாச் சரக்கு மெழுகாம்
காட்டிய தீயி லுருக்கண மாமே. (41)

உருக்கினங் கட்டுக் குலோகமும் பேதிக்கும்
பருக்கிய சூதத்தைப் பழிகொள்ளும் பச்சை
பெருக்கிய சுண்ணம் பேசிய சிங்கிக்
கருக்குள்ள செய்திக் கபடில்லைச் சொன்னேன். (42)

சொன்னேன் கருக்கள் தொழில்பாரு வாதிகாள்
சொன்னேன் குருக்கள் சொற்றவ றாது

சொன்னேன் கைகண்ட செய்திக ளெல்லாம்
சொன்னேனான் வாதத் தொழிலின் விபரமே. (43)

விபரமாய் விண்டேன் வேதையைப் பாரு
உயரச் சத்துக் களங்கத் தொழிலும்
சுபரசக் கட்டுஞ் சோதிசெந் தூரமும்
சபதமும் வந்தாலே தான்போடு வேதையே. (44)

வேதையி தேனுக் காண்பது யேது
வேதைகள் பொய்யென்று விள்ளவொண் ணாது
சோதி மயமே தொழில்கரு வெல்லாம்
நீதியா யின்னஞ் சலக்குரு செய்தியே. (45)

திரிவங்கச் சுண்ணம்.

செய்திகள் சொல்வேன் குருக்குத் துரையாய்
தொய்தகா ரீயமும் மஞ்சிடை யாக
வெய்திடைச் சூதம் மாறிடை யாகக்
கொய்திடும் நாகம் யேழிடைக் கூட்டே. (46)

கூட்டிடு சூடன் ஒன்றுகால் வீரன்
நீட்டடி யும்கறி யுப்புச் சுண்ணமும்
வாட்டமில் லாதே நிலவுப் போரிடை
நாட்டிய கடல்நுரைச் சுண்ணம் ரசமுடன் (47)

ரசமுடன் பூநாகச் சுண்ணமுங் கூட்டி
நிசமுடன் கள்ளு யெருக்கலம் பால்விட்டு
வசிய அரைத்து வளர்துரு சொன்றுக்கு
வசமுடன் பொத்தி வளமுடன செய்வாய். (48)

செய்திடு சட்டியிற்றான் திருவா மண்ணைவைத்து
தொய்திடு கடுவேயிந்தத் துருசணிக் கவசம்வைத்து
வெய்திடு மேற்சட்டித்தான் விரிவது தெரியாமற்றான்
செய்திடு நீதான்மூன்று சேலைமண் செய்துகொள்ளே. (49)

சேலைசெய் சட்டிதன்னைத் தீயெரி கமலமாக
நீலங்கள் பொங்கியந்தத் துருசது நீரதாகும்
ஆலங்க ளுண்டகண்டன் அரனுணை தப்பாதிந்த
கோலமுட் குருத்துருசிற் கோடிதான் வேதைதானே. (50)

வேதையாம் அண்டந்தண்ணீர் விளங்கிய லிங்கந்தன்னை
நீதியா மெழுகதாகும் நிசமுள்ள வேதையாகும்
வாதியாள் நந்திஆட்டம் வளமுடன் தண்ணீருண்டாம்
சூதத்தைக் கட்டிவைக்கும் சுருக்கிடக் கரியிலாடும். (51)

ஆட்டிய சூதந்தன்னை யாவிவே ரரைத்துப்பூசி
சேடிய புடமேமூன்று புடமிடச் செந்தூரந்தான்
நீடிய வெள்ளிநூறு நிதிபெற வுருகும்போது
வாட்டிய ரசசெந்தூரம் மூன்றிடப் பத்துமாத்தாம் (52)

காந்தச்சத்து.

மாற்றிது புடத்துக்கேதான் வளர்தங்க மிறங்குமப்பா
பாற்றது சொன்னேனின்னம் பழமையாய்க் குருவொன்றேகேள்
நீற்றிய காந்தமஞ்சு நிலைபொரி காரமொன்று
காத்தரி தாரசாரம் பாஷாணஞ் சூதமொன்றே. (53)

ஒன்றிதோர் வகைக்கித்தப்பா தொக்கவே கூட்டித்தட்டி
நன்றிகொ ளண்டம்வெள்ளைக் கருவிலே யெருக்கலம்பால்
துன்றிட விட்டபின்பு சூழநற் சலமேயாகும்
அண்டது விட்டரைத்து உலர்ந்தபின் பிசின்பதத்தில். (54)

பதத்திலே யெடுத்துவச் சிரக்குகையி விட்டுநன்றாய்
விதத்துடன் குகைபழுக்க மீரவே யூதிப்பின்பு
இதத்துடன் மூன்றுதரம் இன்பமாய்க் குகையழுக
பதட்டமில் லாமலாறிப் பின்னெடுத் துத்தானியம். (55)

ஐயந்தான் காந்தமீய மிதனுடன் தங்கம்கூட்டி
மாய்ந்துதோர் நாகங்கூட்டி மயனமாய் அயமுங்கூட்டி
வாய்ந்ததோர் கிண்ணங்கட்ட வளமுடன் சூதங்கட்டும்
ஆய்ந்திடுஞ் சாக்கையெல்லாம் அதட்டியே கொன்றுபோடும். ()

நவச்சாரக்கட்டு.

போடுவ தல்லால்வேதை போக்கினி சொல்லமாட்டேன்
கீட்டிய சவுக்காரத்தின் நீருடன் உமிழ்நீர்கூட்டி
ஆட்டிய நவச்சாரத்துக் கப்பியோர் கலசந்தன்னில்
வாடிய புளிச்சிராயை வளமுடன் சுட்டுப்போடே. (57)

கட்டிடும் சாம்பல்தன்னை சூழ்புதுக் கலசந்தன்னில்
இட்டமாய் நடுவே வைத்து இதமுட னெடுத்துக்கொண்டு

இட்டமாய் ஓடுமூடி சீலைமண் செய்துகொண்டு
சட்டமாய்க் கசபுடத்திற் சாரந்தான் கட்டிப்போச்சே. (58)

கட்டின சாரந்தன்னைக் கதித்ததோர் நீரதாக
விட்டிடு புரசுமூலம் வேண்டிய சாம்பல்பண்ணி
கூட்டிய கழுதைநீரால் உசிதமாய்ப் பிசைந்து அந்தக்
கட்டின சாரத்துக்குக் கவசமாய்ப் பொதிந்துபோடே. (59)

போட்டபின் காட்டையொன்று புடமிட நீரதாகும்
நீட்டிய அடியுங்கூடன் நிலஉப்பு வீரங்கூட்டி
ஆட்டிடு சாரநீரால் அதுகாடைப் புடமேபோட
வாட்டமில் லாதசாரச் சுண்ணமாங் குருவுமாகும். (60)

குருவிது தாரத்துக்குக் கூட்டியே கவசம்பூட்டி
வருந்தீயிற் காட்டக்கட்டும் வளயாலின் தேவிகட்டும்
தருலிங்கந் தன்னைக்கொல்லுந் தயவுடன் கறியிலாடும்
இருபது கழஞ்சுவெள்ளி யீயவே ஆறுமாத்தே. (61)

நாகக்கட்டு.

மாத்தது ஆறுகாணும் வளர்கின்ற புடத்துக்கேதான்
மாத்ததது யிறங்குந்தங்கம் வசியில்லைப் பசும்பொன்னாகும்
நீற்றுள்ள சாரக்கட்டு நீதியா யொருமஞ்சாடி
ஏற்றுள்ள காந்தமீயம் மஞ்சாடி அரையுங்கூட்டே (62)

அரைத்திடும் உமிழ்நீராலே அரியநா கக்கட்டிக்கும்
நிறைத்ததிற் றடவியேதான் நிசமுட னுலர்த்திப்பின்பு
வரைகொள்முத் திருக்கஞ்செவி கடல்நுரை ரெண்டுங்கூட்டி
அரசம் பழத்தின்சாத்தா லரைத்துப்பின் பொதிந்துபோடே ()

பொதிந்தது உலர்ந்தபின்பு புகழ்நல்லகுகைக் குள்ளேதான்
இதஞ்சிறு செருப்படி யிலையது துவைத்து
பதிவுடன் நாகக்கட்டி பரிவுடன் நடுவேவைத்துச்
சிதறாமற் சில்லுபோட்டுச் சீலைமண் செய்துபோடே. (64)

போட்டபின் காடைநாலு புடமிடக் கவுதாரிக்கு
நீட்டியப் புடந்தான்மூன்று நிசமுள்ள குக்குடந்தான்
நாட்டிய புடமேமூன்று நலமதோர் குசமுண்டாக
மூட்டிடு புடத்துக்கெல்லாம் வகையதாய் மூட்டச்சொல்லே. ()

செந்தூரம்.

சொல்லந்த நாகக்கட்டும் சென்றிடச் சூதங்கட்டும்
நல்லதோர் கறியிலாடும் ரசமணிக் குளிகையப்பா
வல்லதோர் செந்தூரந்தான் வளர்கெந்தித் தயிலந்தாக்கச்
சொல்லவொண் ணுமுருக்கம் பூநிறஞ் செந்தூரந்தான். (66)

செந்தூரம் ஒன்றுவெள்ளி யிருபதிற் சேர்க்கவேதான்
வந்திடு மாற்றுப்பத்து வளர்நாகங் கட்டினத்தை
செந்தூர மாகக்கெந்தித் தயிலத்திற் சிவப்புமீறும்
மந்திரச் செம்புஒன்றில் மஞ்சாடி கொடுக்கமாத்து. (67)

சவுக்கார எண்ணெய்வாங்க.

மாற்றுபத் தாணிக்கேதான் வளரெட்டு மாத்தேயாகும்
நீற்றுள்ள சவுக்காரத்தை நிசமுடன் சுண்ணும்பாக்க
வத்ததோர் ருதுவாகாப்பெண் ணின்நீர் படிரெண்டிற்றான்
காத்திடும் சுண்ணும்புக்கல் பாதியும் மடியும்பாதி. (68)

பாதியாய் நீத்தித்தானே பண்புட னதுமுன்னே
நீதியாய் நீரைவாங்கு யிருந்ததைத் தெளியவைத்து
ஓதிடும் பிங்கானிற்றான் ஒளியுடன் விட்டுச்கொண்டு
சாதினை சவுக்காரத்தை உரைத்திடத் தண்ணிவிட்டே. (69)

தண்ணியை விட்டுமூடித் தான்பத்து நாழிகைதான்
எண்ணமா யிருக்கயெண்ணெய் இளகியே தண்ணிமேலே [க்க
எண்ணெய்யெல்லா மிதக்குமப்பா யிருத்துப்பின் னுள்ளேபார்
வண்ணமா யுரைந்திருக்கும் வெயினில் வைக்கப்பின்பு. (70)

வைக்கப்பின் வழலையப்பாச் சந்தனப் பொடிபோலாச்சு
குக்குடம் வெள்ளைதன்னில் யெருக்கலம் பாலைவிட்டு
வைக்கவே தெளியுமந்த தெளிவிட்டுச் சவுக்காரத்தை
சிக்கென்ன அரைத்துவில்லைத் திடமுடன் பிடித்துக்கொண்டே

கொண்டபின் னுலர்த்திப்பின்பு கூறுவேன் கவசமப்பா
ஒண்டிடச் சீனச்சுண்ணம் உவரட்டில் நிலவுப்புந்தான்
கண்டதோர் கறியுப்புந்தான் கதிகுரு வண்டுங்கூட்டி
மூண்டிடு நீத்துக்கல்லு யுவருமாய் நீத்தினத்தே. (72)

நீற்றுடன் சம்பளத்தால் நீசத்தோ டரைத்துக்கொண்டு
நீத்திய வழலைக்கப்பி நிசமொரு புடமேபோட
நீற்றென்ன சுண்ணும்பப்பா நிலையில்லைக் கவரேகோடி
பார்த்தது கண்கண்டேன்நான் பண்புடன் செயநீர்போக்கே. ()

போக்கென்ன சொல்லக்கேளு புளிரெண்டு சாரமொன்று
தாக்கென்ன இந்துப்பொன்று தருவெடி யுப்புரெண்டு
வாக்கென்ன சூடனொன்று வளர்கின்ற கல்லுப்பொன்று
பாக்கடி நிலஉப்பாலே பண்புட னரைத்துக்கூட்டே. (74)

கூட்டிய வில்லையாக்கி குருபுட மெரியிட்டேதான்
தீட்டிய சுண்ணமாகும் திங்களில் வைக்கச்செயநீர்
வாட்டமில் லாததிந்த அறுவகைச் செயநீர்தானே
மூட்டிய போக்கெல்லாந்தான் முழுக்கட்டு செயநீர்தானே.(75)

தானென்ற செயநீர் தன்னை சகலதோர் முறைக்குங்கூட்டு
ஊனென்ற செயநீரொன்று உரைக்கின்ற சுண்ணும்புக்கு
வானென்ற கடல்நுரையை மயமுடன் சுட்டுநீத்தி
சீனனைக் கட்டிஆட்டிச் சிறுபுடம்போடச் சுண்ணம். (76)

சுண்ணந்தா னெட்டுச்சத்தி தூயபூ வெட்டுஉப்பு
அண்ணலே கல்லுப்பொன்று அரைத்துமே நிறப்பிப்பின்பு
வண்ணமா யிவைகளெல்லாம் வகையுடன் சேர்த்துக்கொண்டு
விண்ணமில் லாமல்செய்தால் விகசிதந் தெரியுமப்பா. (77)

எப்பாரி லுள்ளோர்க ளியல்பைநான் சொல்லவில்லை
ஒப்பாக உனக்குயானும் உண்மையாய்ச் சொல்லிவிட்டேன்
துப்பாகச் சுண்ணச்செயநீர் சுருக்கிட்டு ஆட்டிக்கொண்டு
மெய்ப்புடன் மால்தேவிக்கு விருப்புமாய்க் கவசங்கட்டே. (78)

கட்டியே இரவிகாணக் கண்டபின் அஞ்சுசுண்ணம்
கெட்டியே குகையில்வைத்துக் கெசபுடமூதச் சுண்ணம்
மட்டில்லா தாரச்சுண்ணம் வங்கத்துக் கப்பியூதத்
திட்டமாய் நிமிளைக்கப்பி சிறந்தூத சுண்ணமாமே. (79)

சுண்ணந்தான் சாரமப்பா துருசது வெந்துநீறும்
சுண்ணந்தான் சூதமப்பா தூடிதங்கம் நல்லசுண்ணம்

சுண்ணமாந் தங்கத்தோடே துடிவீரன் லிங்கங்கூட்டி
திண்ணவே வழலைகூட்டிப் புடமிடச் செந்தூரந்தான். (80)

செந்தூர விராக னொன்று வெள்ளி இருநூறுக்குச்
செந்தூரம் கொடுக்கவேதை மாத்திருபத் தேழேயாகும்
வந்ததோர் செந்தூரத்தை வளர்கின்ற மெழுகுநீரால்
தொந்திக்கச் சுண்ணநீரால் தொய்ந்தரை மெழுககர்மே. (81)

மெழுகுடன் சாரங்கூட்டிப் பீங்கானில் வைக்கநீராம்
ஒழுகிய சங்குவீரம் உரம்வெள்ளை யப்பிரேகம்
வளமுடன் மலையுந்தண்ணீர் வளர்கின்ற லோகந்தண்ணீர்
இளகிய நாகந்தண்ணீர் இதில்ரசந் தண்ணீராமே. (82)

ரசத்தண்ணீ ருடனேவீரம் மாட்டியே தாருசிற்பூசிப்
பசையுடன் தீயிலாட்டப் பசுப்பில்லாச் சிங்கிக்காச்சு
நிசமொரு புதுக்குடத்தில் நிறையவே ரசத்தையிட்டு
வசியில்லாக் குடத்தின்வாயில் வளமதாய்ச் சிங்கிபூட்டே (83)

கோரக்கர் வகார சூஸ்திரம் ள.

முற்றிற்று.



கோரக்கர் வகாரசூஸ்திரம் நூறு யென்று யேற்பட்டிருக்கிறது என்னிடத்திலிருந்த யேட்டில் 83-பாட்டுமட்டிலிருந்தது. அடியில் கண்டவரிட மிருந்த யேட்டில் 70-பாட்டுமட்டுமிருந்தது. மீதம் 17 பாட்டு அகப்படவில்லை. ஆகையால் இந்த யேடு நூறு பாட்டுவைத்திருக்கிற புண்ணியவானகள் மீதம் 17 பாட்டுகளையும் யெழுதி அனுப்பினுல் அதையுஞ் சேர்த்து அச்சிட்டு அவருடைய பேரும் போட்டு ஒரு புத்தகம் இனுமாயனுப்பக்கூடும்.

---

ஸ்ரீவில்லிபுத்தூரைச் சேர்ந்த மகம்மதுசாயபுபுரம் அருளானந்தப் பிடகர் அவர்கள் குமாரர் சங்கரலிங்கபண்டிதர் அவர்களிடமிருந்து வாங்கிய வட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருவேதுணை.

எண்பத்தெட்டாவது:

திலோர்த்தமை திருவாய்மலர்ந்தருளிய

# ஞானச் சுருக்கம் உசா.



ஆதி யந்தமொன் முன பராபரம்
சோதி செஞ்சுட ரான நிராதரம்
நாத கீதமுண் டானசி தம்பரம்
வேத மாமணி பாதம் பணிகுவாம். (1)

முத்துப் போல முளைக்கின்ற யோகமும்
வெத்தி யாக விளங்குமெய்ஞ் ஞானமும்
சித்தி யாகச் சடம்பொன்போ லாகவும்
சித்தம் வைத்துத் திலோர்த்தமை செப்புவாள். (2)

செப்பும் நாசிப் புருவ நடுவதில்
சிந்தை வைத்து வங்கென்று வாங்கிடு
முப்பத்திரண்டு தரம்ரேசிக்கவே
முளைந்த திற்பாதி சிங்கென் றேத்திடு
தப்பி தங்கள்வ ராமலைப் போதும்நீ
சாதித் தேவர யோகம்நி லைத்திடும்
அற்ப மென்று மனதிலெண் ணுமலே
அழுத்திப் பார்க்க அமுதம் பொழியுமே. (3)

வெண்பா.

பொழியு மமுதத்தைப் புத்தியுட னேபுசிக்க
வழிதுரையாய் வாலை வசனிப்பாள்—பழியும்வரா
தெண்ணெல் மதியின் இருத்யத் தீபம்வைத்து
அண்ணு தமரு ளடை: (4)

வேறு.

அடைக்கவே உபாயமொன்று சொல்லக்கேளு
அரகரா கழஞ்சிடைதான் சுண்ணம்பூநீர்
விடுத்தவுமி நீராலே விரலிற்கொண்டு
விளங்கியதோர் நாவடியி லொட்டாற்சுண்டு
தடுத்துநின்ற சல்லிவே றறுந்துபுண்ணாந்
தனையாத்தம் பழவெண்ணீர் கொப்பளிக்க
நடுத்தமருண் ணவுநுனி நலுவாதேகும்
நாகசுர வாசியதை நடுவொண்ணாதே. (5)

ஒண்ணான வாசியது மூலியாகும்
உத்தமனே விந்ததுவும் வாசியாகும்
பண்ணான லோகத்து மாண்பர்கூடி
பலபலவா யலங்காரம் பண்பாய்வார
மூண்ணான மூலிதனை அறியாமற்றான்
மூனைந்துகட்டுக் கண்கெட்டுக் குரலுங்கெட்டு
மண்ணான மக்கள்மனை பணங்கள்தோத்து
மயக்கவெறி கொண்டலைந்து வானைப்பார்த்தே. (6)

வேறு.

வாண மாகி வளர்ந்த புருவத்தை
ஊணிப் பார்க்கத் தலங்கள் தெரிந்திடும்
வேணு மென்றுமெய்ஞ் ஞானப் பெருவெளி
ஊணிப் பார்க்க ஒருபேத மில்லையே. (7)

பேத மில்லை திரணியென் சொல்வது
வாது மில்லை மணிவிளக் கானது
நாத வோமமும் மேருவுஞ் சிக்கினால்
பாத கங்க ளறிந்து பறக்குமே. (8)

வெண்பா.

பறக்குமே பாதகங்கள் பாழ்வினைகள் மந்திரங்கள்
தறக்குமே நின்சமூகங் கண்டால்—திறப்படுத்தத்
தன்னுக்குட் டானே தலைவன் றனையறிந்தால்
என்றைக்குஞ் சித்தா மியல். (9)

வேறு.

சித்தனு யாவதற்கு வகையைக்கேளு
சிவசிவா பஞ்சகண மென்றஞ்சுண்டு
அத்தனடா அகாரமதை ஆண்டுசேவி
அரகரா உகாரசத்தி அன்பாய்ச்சேவி
முத்திபெறச் சத்திசிவம் முடித்தபின்பு
மோனமுடன் மகாரமதை முனைந்துசேவி
வெத்திபெற வேணுமென்றாற் சிகாரந்தன்னை
விரும்பிமன பூரணத்தைத் தினமுங்கொள்ளே. (10)

கொள்ளவே பூரணமும் ஆண்டுசென்றாற்
குடிலமென்ற சடத்திற்கு அழிவேயில்லை
[illegible] வங்கென்று வாசிவாங்கி
மேல்வாசல் தனக்குள்ளே சிங்கென்றேத்து
அள்ளவே கண்டத்தில் அங்கென்றோட்ட
அரகரா யீராறும் அடங்கும்வீட்டில்
விள்ளவே வில்வளைத்த சரம்பெலத்தால்
மெய்ஞ்ஞான தீபத்துக் கடிதான்பாரே. (11)

வெண்பா.

பாரே நயனத்தைப் பத்திவிரல் தொட்டதிதி
நேரே நடுமையம் நீபாரு—ஊரெல்லாம்
ஒன்றாகத் தோணுமத னுண்மை பரவெளிதான்
நின்றாடுஞ் சோதி நினை. (12)

வேறு.

நினைத்தேவொரு புனற்போலவே சித்தாலதை மறைத்து
வனத்தேபொறி கனற்போலவே மலர்ப்பாவையை நிறுத்தி
நினைத்தேவொரு கலைமுக்கினிற் புகைபோலவே சிவக்கும்
க்ஷணப்போதுநீ மறக்காமலே நினைத்தாலொளி காட்டும். (13)

வெண்பா.

காட்டுங் கனகசபை கண்டவர்கள் விண்டதுண்டோ
ஆட்டுங்கால் மூல மறிவாரோ—ஏட்டுடைய
விண்டவர்கள் கண்டதில்லை மேதினியி லேயொருவர்
கண்டவர்கள் விண்டதில்லை காண். (14)

காட்டுங் கனகசபை கண்டவுட னேதனக்குத்
தேட்டுந் திரவியஞ்செம் பொன்னன்காண்—கூட்டமென்ன
கண்டவிட மெல்லாங் கனகஞ் சொரிந்துவிடும்
அண்டபரன் சொன்ன தறி. (15

வேறு.

அறியவே உண்மையுனக் குள்ளேகேளு
அழிம்புபொய் கொலைகளவு அகலத்தள்ளி
நிறையாக வெந்நாளும் குருவின்பாதம்
நிச்சயமாய் மனதிலெண்ணி சரணணைத்து
முறையோடே குருசொன்ன படியேசெய்தால்
மூவுலகு முனதுவசம் கைக்குள்ளாகும்
கறையேற மாட்டாத படியால்மைந்தா
காணுவதும் அளிவதுவுங் கணங்கள்தானே. (16)

வேறு.

கணங்க ளான பெரும்பூதக் காட்டினிற்
கணங்க ளைப்போற் சுருங்கி யிருந்ததை
மணங்கு விந்து வணங்கியே தூண்டினால்
இணங்க னெஞ்சத் திருந்தது சோதியே (17)

சோதி யாகச் சுருக்கத்தைச் சொல்லுவேன்
வாதி யானகண் ணுக்குச் செவிமூக்கு
நீதி யான மனமொன்றைப் புக்கினாற்
சோதி யெல்லாம் க்ஷணத்திற் றெரியுமே. (18)

தெரியு மென்று திகைத்தலைந் தாலென்ன
அறிவு கொண்டகண் டத்தினி லேறியே
புரிய மாகப்பொற் கம்பம் பிடிபட்டாற்
சிறிய வன்போல் க்ஷணத்தே அகத்திடே. (19)

வெண்பா.

அகத்தியே கோபமதை ஐம்புலனைக் கண்டும்
வகையாகச் சென்றால் வழங்கும்—செகமுழுதும்
பேசாதும் பேசுமது பேய்மக்காள் வாய்க்குமே
ஆகாயந் துணையென் றறி. (20)

வேறு.

அறிந் திந்த மதியுப் பதனினால்
நிறைந் தினிப்பு நிவசமதா கிடும்
தெரிந்த வானந் தெளிந்திடும் பூவினாற்
கறைந்த சூதமுங் கட்டிகின் றிடுமே. (21)

ஆடும் லிங்கம் அரிதார வீரமும்
வாடும் வங்கம் வலுவான நாகமும்
நாடு மேரு தனில்ரசம் சிக்கினால்
காடுங் கலலுங் கனகம் விளையுமே. (22)

வேறு.

விளையுமென்று வேலைசெய்தால் விளைந்தேபோகும்
விளையாதென் றேநினைத்தா லாகாதப்பா
களையெடுக்கா விட்டாக்கால் பயிர்தானேது
கருத்துடனே கண்டறிந்தால் களையுமாகும்
கிளையாக நீயிருந்து சூட்சங்கண்டால்
கிட்டாத பொருளெல்லாங் கிட்டிப்போகும்
துளைவிழுந்த மரமதுவுந் தளிர்த்தாப்போல
தோற்றத்தி லண்டமதிற் பிண்டமாச்சே. (23)

அண்டபிண்டம் ரெண்டையுமே சமமாயாக்கி
அசத்திதுசத் திதுவென்றே யறியாமற்றான்
பண்டுவந்த தேகமதை யின்னதென்று
பார்த்தறிய வகைதெரியா பரமஞானி
கண்டுகொண்ட சாஸ்திரத்தி னுட்பந்தன்னை
கருத்துடன்கண் டறிந்துதிரு மூலர்தம்மைத்
தொண்டுசெய்து யிதையறிந்து வந்தேனப்பா
தொகுப்பாகச் சாஸ்திரத்தி னுண்மைபாரே. (24)

பாரப்பா கட்டினதோர் உப்பைச்சேர்த்தால்
பண்பாக வெழும்பலாம் மதியின்மட்டும்
நேரப்பா அயனெழுத்தை மாற்றிவைக்கும்
நேர்மையாய்த் தேகமதின் சட்டைபோக்கும்
சீரப்பா இத்தேகம் வயிரமாகும்
திரமான ஒளிவீசும் நாதங்கேட்கும்

கூரப்பா நித்திரைதான் வரமாட்டாது
குருவான உப்பரிந்தால் திரமதாச்சே. (25)

ஆச்சுதிந்த பச்சையுப்பை தின்றுயாகில்
ஆகாது உப்பாலே நரையுண்டாகும்
பேச்சப்பா புளியாலே திரையுண்டாகும்
பெலமாக வேணுமென்றால் வகையைக்கேளு
வாச்சுதிந்த கட்டுப்பு சேர்த்தாயானால்
வகையுண்டு பலமுண்டு நரையுமாறும்
ஏச்சிதுவென் றேநினைத்து விட்டாயாகில்
எப்பொழுதுங் கண்டறிய நிலையோயில்லை (26

வேறு.

நிலைமையாக ரிஷிசித்தர் நல்கினர்
தலைமையாக அறிந்தவர் ஞானியே
புலைமையானயென் புன்சொல்லை நம்பினால்
வலுமையானதோர் ஞானமும் வாய்க்குமே. (27

திலோர்த்தமை ஞானச் சுருக்கம் ௨௯

முற்றிற்று.





திருச்சி மேட்டு சிந்தாமணி வைத்தியம், தி. க. சுப்பிரமணிய பிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.

உ

குருவே துணை.

# தேவ, ரிஷி, முனி, சித்தர்கள்

திருவாய்மலர்ந்தருளிய

# யோக ஞான சாஸ்திரத் திரட்டின்

## ஏழாம் பாகத்திற் சொல்லியிருக்கிற

## முக்கியவிஷயங்கள்.



ஐயா! இதற்கடுத்த ஏழாம்பாகத்தில் சட்டைமுனி, காலாங்கி நாதர், இராமதேவர், ஈஸ்வரன், பிண்ணாக்கீசர், காசிபமுனி, ஜனகர், அகப்பேய்ச்சித்தர், விளையாட்டுச்சித்தர் முதலிய மகரிஷிகளால் அருளிச்செய்யப்பெற்ற இருபத்தைந்து சாஸ்திரங்களில் அடங்கிய விஷயங்களை இதனடியிற் காணலாம். அவையாவன:—

முதலாவது: சட்டைமுனி ஞான சாஸ்திரம் நூறில், மூலமுதல் ஆறுதலம் மேலாறுதலம் பராபரமூர்த்தி விபரங்களையும், பிரிதிவு அப்பு தேய்வு வாய்வு ஆகாச விபரங்களையும், அகார உகார மகார காரணம், சுழிமுனை விபரங்களையும், பகலிரவு அற்ற இடத்தின் விபரங்களையும், யோக ஞான கேசரி சத்தி விபரங்களையும், ஆதியனாதிவஸ்து குளிகை மும்மூலஞானி விபரங்களையும், ஆகாயம் பிராணயவாசி ஆதி குருவருள் அஞ்ஞானி விபரங்களையும்;

2-வது: சட்டமுனி ஞானவிளக்கம் ஐம்பத்தொன்றில், வேதாந்தம் சித்தாந்தம் பராசத்தி தெரிசனம் மவுனரசக் குளிகை மவுனதீட்சை நிராமய விபரங்களையும், வாசி வசப்படும் விபரங்களையும், நடுவணை நாட்டம் தயிலமுறை அடிநடுமுடி விபரங்களையும், சூரணம் சத்திபூசை காமப்பால் கானற்பால் நாற்பத்தி முக்கோண சக்கரம் பூஜாவிதி சித்தி விபரங்களையும்;

3-வது: சட்டமுனி தீட்சை கற்பம் ஒன்பதில், கற்பமுறை குருமுறை தசதீட்சை நாசிநுனி நாட்ட விபரங்களையும்;

4-வது: சட்டமுனி சூதகற்பம் ஏழில், சூதசூரண கற்பமுறை விபரங்களையும், பத்தியபாகம் கைபாகம் செய்பாகத்துக்குரிய விபரங்களையும்;

5-வது: சட்டமுனி திருவிசைமாதி பன்னிரண்டில், திருவாதி சமாதி தியான லட்சண விபரங்களையும், ஞானகற்பமுறை குதங்கட்டு முறை, சோதிப்பா லருந்துமுறை, கௌனம் பாயுமுறை, இவை முதலியன விபரங்களையும்;

6-வது: சட்டமுனி பரிபூரணம் பதினொன்றில், முச்சந்தி செல்லும் வழி, மூலம்பார்க்கும் வழி, நந்தி கணேசன் சத்திக ளெட்டின் விபரங்களையும், மதியமுத யோக ஞானசித்தி, வாசிமூலம் காயசித்தி குண்டலிசத்தி முதலிய விபரங்களையும்;

7-வது: சட்டமுனி வேதாந்த சூஸ்திரம் எட்டில், வேதாந்த முடிவும் சோதி தெரிசன நாட்டம் அஷ்டபதி பிராணாய விபரம் அஷ்டமாசித்து வகையராமூலமந்திரம் செந்தூர முறை பாதகிக்குரிய முதலிய விபரங்களையும்;

8-வது: சட்டமுனி நிகண்டு சூஸ்திரம் ஐம்பத்தொன்றில், குரு முடிக்கும் பாகம் சுண்ணம் நவகோண அட்சர விபரங்களையும்;

9-வது: சட்டமுனி வாதசூஸ்திரம் இருநூறில், சவுக்காரம் குரு முடிக்கும் பாகம், சுண்ணமுறை செந்தூர முறை செயநீர் வேதை முறை காயசித்தி முறைக்குரிய விபரங்களையும், வாசிவசப்படும் விபரங்களையும், பிராணாயவிபரங்களையும், சஞ்சார சமாதி விபரங்களையும், சொரூபமணிக்குளிகை காந்தக் கிண்ணம் கற்பமுறை முதலிய விபரங்களையும்;

10-வது: சட்டமுனி ஆதியந்த ஞானம் இரண்டில், அண்டபிண்டமொன்றென்றும், அண்டர்கோன் பதம் முதலிய விபரங்களையும்;

11-வது: சட்டமுனி குருசூஸ்திரம் இருபதில், முப்பூவினால் குருமுடிக்கும் முறையும், அக்குருவினால் வேதை சித்தியும, யோக ஞான சித்தியும், கற்பகோடிகாலம்வரைவாழும் வகை விபரங்களையும்;

12-வது: சட்டமுனி சூஸ்திரம் ஆறில், அஷ்டாட்சரம், சரியை கிரியை யோகம் ஞானசித்தி விபரங்களையும், ரவிமதி விபரங்களையும், சிவயோக சித்தி விபரங்களையும்;

13-வது: சட்டமுனி வாதசூஸ்திரம் இருபத்தைந்தில், லிங்க மெழுகு வேதை விபரங்களையும், குருமுடிக்கும் பாகவிபரங்களையும்;

14-வது: சட்டமுனி தண்டகபட்சணி எண்பத்தொன்றில், பராசத்தி பூசை, திரிமூர்த்தி ஸ்தானம், சிவயோகபூசை, மதியாரம மார்க்கம், தில்லை திருநடனசித்தி, பஞ்சகர்த்தாள் குருநந்தி சித்தி, அஷ்டகர்மசித்தி, அண்டபிண்டம் கெவுனமணிகுளிகை திலதவகை நிருவிகற்பசமாதி அஷ்டாங்கயோக விபரங்களையும்;

15-வது: காலாங்கிநாதர் கற்பவிதி சூஸ்திரம் எண்பத்திநான்கில் அண்டர்பதம் காணும்விதம், சிவயோக ஞான விபரங்களையும், மூலமுதல் ஆறுதார விபரங்களையும், மேலாதார விபரங்களையும், நமெமினகமலபீட விபரங்களையும், வாசிசித்தி விபரங்களையும், கற்பமுறை சித்தி விபரங்களையும், குருவழலை கருவழலை விபரங்களையும், கெவுனசித்தி விபரங்களையும், மனோமணி சித்தி அஷ்டமாசித்தி, அஷ்டாங்கயோக சித்தி விபரங்களையும், ரேசக பூரக கும்பக பூசை விபரங்களையும்;

16-வது: இராமதேவர் தண்டக பட்சணி நூற்றியொன்பதில், சவுக்கார குருமுறை, மைமுறை, மெழுகுமுறை, செந்தூரம் தயிலவகை விபரங்களையும், அஷ்டமாசித்து விபரங்களையும், சிவதீட்சை சத்திதீட்சை சிவயோக ஞான நிஷ்டை சகலசித்துக்கும் கருமானம் முதலிய சகல விபரங்களையும்;

17-வது: இராமதேவர் பரஞான கேசரி நூலில், பரஞான கேசரி சித்தி விபரங்களையும், சிவஞானயோகசித்தி ரவிமதி சுடர்சித்தி தேகசித்தி ரேசகபூரக கும்பக பூசைசித்தி குரு உபதேச மார்க்கம் ஜெயநீர் குருவேதை அஷ்டகர்ம வோம விபரங்களையும், கற்பசித்தி காயசித்தி ரசமணி விபரங்களையும், வாசியைக்கட்டி கெவுனம் பாயும் வழியும், சஞ்சாரசமாதி சித்தியும், நேத்திர சிந்தாமணிக் குளிகை விபரங்களையும்;

18-வது: ஈஸ்வரன் வாக்கியசூஸ்திரம் அறுபத்துமூன்றில், சகலகலைக்கியானம், நந்திதேவருக்குபதேசம், மவுனஅட்சரம், பராசத்தி சதாசிவ தெரிசனம் மூலமுதலாறுதார தேவதை சித்தி விபரங்களையும்;

19-வது: ஈஸ்வரன் வாக்கியம் பதினொன்றில், நவக்கிரக சக்கரம் அதன் அட்சரங்கள் பூஜாவிதி முதலிய விபரங்களையும், சத்தி சித்திக்கும் விபரங்களையும்;

1697/2



20-வது: காசிபமுனிஞானம் இருபதில், யோகசாதன கற்பமுறை ஞான முதலிய விபரங்களையும்;

21-வது: ஜனகர்ஞானம் இருபதில், அண்டபிண்டம் ரவி-மதி சுழி முனை விபரங்களையும்;

22-வது: அகப்பேய்ச்சித்தர் பூரணஞானம் பதினைந்தில், ஏகநிராமயம்-சோதி-பூரணமெய்ஞ்ஞானம்-வாசி சிவயோகம் இடகலைபிங்கலை சுழிமுனைமார்க்கம்-பஞ்சாட்சர விபரங்களையும், பரிசம் எட்டின் விபரங்களையும், நவிலனஞான விபரங்களையும், கலைமாறுதவிபரங்களையும்;

23-வது: அகப்பேய்ச்சித்தர் பாடல் தொண்ணூறில், பராபர விந்து நாதமங்கை தராதலமுற்பத்தி-பஞ்சபூதம்-தசநாடி விபரங்களையும், தத்துவத்தின் விபரங்களையும், அட்சரம்-சோதிசொரூப தெரிசனம் முத்திமோட்சவிபரங்களையும்;

24-வது: விளையாட்டுச்சித்தர் ஞானசூஸ்திரம் பதினெட்டில், அண்டபிண்டம்-சத்திசிவம்-பரமாத்மா-பூரணமுத்தி மோட்சநிலை-ஏக பராபரவஸ்து வாசிசுழிமுனையிற் செல்லும்மார்க்க விபரங்களையும், மெய்ஞ்ஞானயோகம் மூதண்டகிசாயம் லேகியம் குண்டலிசத்தி-பூரணமதியமுதமார்க்கம் முதலிய விபரங்களையும்;

25-வது: விளையாட்டுச்சித்தர் பாடல் முப்பத்திரண்டில், ஆதிசத்திசிவம்-சோதிசொரூபவிபரங்களையும் பிரபஞ்சத்துள் இடம்பொருள் ஏவல் இவைமுதலியது பொய்ப்பொருள்-விளையாட்டென்றும், மெய்ஞ்ஞானமொன்றே மெய்ப்பொருள் என்றும், அதற்குரியவிபரங்களையும் தெளிவாய்ச்சொல்லப்பெற்றிருக்கின்றன;

முன்னர்சொன்ன ஆறுபாகங்களிலும் ஒளியாயுரைத்துள்ளதை நன்றாய்த்தெரியவேண்டுமானால், ஏழாம்பாகத்தை வாங்கிவாசிக்க நன்கு விளங்கும். தவசிரோமணிகளின் சாதுரியமதுர வாக்கியத்தன்மைகளை இதனால் அறியலாம். ஆகையால் யாவரும் ஏழாம்வாலியத்தை யும் சேர்த்துப் பார்க்கும்படி கோருகிறேன்.

இப்படிக்கு,

**இ. ராம. குருசாமிக்கோன்,**

புஸ்தகஷாப் புதுமண்டபம் மதுரை.